# கல்கி

## பொருளடக்கம்

### அரசியல்



### கதைகள்



### கட்டுரைகள்



### பாலர் மலர்



"கல்கி"யில் வெளிவரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

நியூகுளோப்-பாரத் மஹாலக்ஷ்மியில்

பிப்ரவரி 28உ முதல்

சென்னை மற்றும் தென்னாடெங்கும்

பஸந்த் பிக்சர்ஸ்....

# ஸ்ரீ ராம பக்த ஹனுமான்

• தமிழ் •

விஸ்வரூப தரிசன காட்சிகள் கேவா கலரில்

☆

வசனம் · ஆரூர் தாஸ்

பாடல்கள் · குயிலன்

சங்கீதம் · விஜய பாஸ்கர்

ஸ்டூடியோ · பிலிம் சென்டர்

☆

தயாரிப்பு.....

ஹோமி வாடியா பிரதர்ஸ்.

டைரக்ஷன்.....

பாபுபாய் மிஸ்திரி

பூரண உரிமையாளர்கள்....

ஸ்ரீ ராமா பிலிம்ஸ், சென்னை-2.



மலர் 17 இதழ் 32

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

ஹேவிளம்பி மாசிமீ 26உ

# வரிக் கொடுமையின் விஸ்தரிப்பு

நேருஜி சமர்ப்பித்த மத்திய அரசாங்க பட்ஜெட், பத்து மாதங்களுக்கு முன் டி. டி. கே சமர்ப்பித்த பட்ஜெட்டின் தொடர்ச்சி. அதன் அநுபந்தம் என்றேகொள்ளலாம்.

அப்போது அவர் 112 வரி விகிதங்களைப் பிரேரேபித்து 100 கோடி ரூபாய் ஆண்டு தோறும் மக்களிடமிருந்து வசூலிக்க வகை செய்தார். 90-க்கு மேற்பட்ட இனங்களில் சுங்க வரி மாறுதல்களும், 13 இனங்களில் உற்பத்தி வரி மாறுதல்களும், 9 இனங்களில் நேரடி வரி முறை மாறுதல்களும் செய்யப்பட்டன. அவற்றில் அதிகமான கண்டனத்துக்குள்ளானவை செல்வ வரியும் செலவு வரியும். அவையனைத்தும் நீடிக்கின்றன.

அதில் விட்டுப் போன நன்கொடைக்கு வரி இந்த வருஷ அனுபந்தத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறது. இதையொட்டி இதர மாறுதல்களும் செய்யப்பட்டுள்ளன.

ஒரு வருஷத்தில் ரூ. 10,000-க்குக் கீழ்ப்பட்ட நன்கொடைகளுக்கு வரியில்லை. அதற்கு மேற்பட்ட தொகைகளுக்குப் படிப்படியாக 4 சதத்திலிருந்து 40 சதவிகிதம் வரையில் வரி செலுத்த வேண்டும். பெண்களுக்குக் கல்யாண காலத்தில் அளிக்கப்படும் நன்கொடையில் ரூ. 10,000 வரையிலும் மனைவிக்கு ஒரு லட்சம் வரையிலும் விலக்களிக்கப்பட்டுள்ளது. ஆனால் மகன், மகளுக்கு அளிக்கும் நன்கொடைகளைப் பற்றிப் பிரஸ்தாபமே செய்யப்படவில்லை. உயர் படிப்புக்காகவோ, வியாபாரத்தைத் தொடங்க மூலதனமாகவோ ஒருவன் தன் பிள்ளைக்கு நன்கொடை வழங்கினால், அது வரிக்குள்ளாகும் என்றே நினைக்க வேண்டியிருக்கிறது. பரிசீலிக்க வேண்டிய விஷயங்களில் இது ஒன்று.

பணக்காரர்களைப் பணக்காரர்களாகிக் கொண்டே போக விட்டுவைக்க முடியாது என்று அரசாங்கத்தின் கொள்கையைப் பிரதமர் அடிக்கடி வலியுறுத்தியுள்ளார். அக்கொள்கைப்படி பெரும் செல்வவந்தர்கள் என்று கருதப்பட்ட ஜமீன்தார்களும் ஸமஸ்தானாதிபதிகளும் ஒழிக்கப்பட்டுப் போயினர். தனிச் செல்வவந்தர்களும் எஸ்டேட் வரி, செல்வ வரி, செலவு வரிகள் மூலம் குறைந்து கொண்டுதான் வருகிறார்கள். கம்பெனி நிர்வாகஸ்தர்கள் விஷயத்திலும் கூடப் பணக்காரர்கள் என்னும் நிலை மாறிக்கொண்டு தான் வருகின்றது. சம்பிரதாயமாகச் செல்வவந்தர்கள் என மதிக்கப்பட்டவர்கள் எல்லோரும் வேகமாக மறைந்து விட்டனர். அல்லது மறைந்து கொண்டு வருகிறார்கள்.

உயர் படியிலிருப்பவர்களின் எண்ணிக்கை குறையக் குறைய, கீழ்ப்படியிலுள்ளவர்கள் செல்வந்தர்களாகக் கருதப்படுகின்றனர். மத்தியதர வகுப்பினர் அல்லது மத்தியதர வகுப்பில் மேல் மட்டத்திலுள்ளவர்கள் இப்போது பணக்காரர்களாகி விட்டனர் போலக் காண்கிறது. இவ்வருஷத்திய புதுவரியும் திருத்தங்களும் இதையே வலியுறுத்துகின்றன. ஏனெனில் இவ் வகுப்பைத்தான் இவ்வருஷ பட்ஜெட் முக்கியமாகப்பாதிக்கிறது.

எஸ்டேட் வரி விதிப்புக்கு இதுவரையில் ஒரு லக்ஷம் ரூபாய் வரையில் விலக்களிக்கப்பட்டிருந்தது. இவ் விலக்கு இனி ரூ. 50,000-க்குக் குறைக்கப்பட்டிருக்கிறது. இதில் பொதிந்துள்ள அநீதியைச் சுலபமாகக் காணலாம்.

வருஷத்துக்கு 3000 ரூபாய் வருமானம் உள்ளவர்களுக்கு இப்போது வரி கிடையாது. இத் தொகை தற்போதுள்ள விலைவாசிகளை யநுசரித்து ஜீவனத்துக்கு மிகவும் அவசியம் என்று கருதப்படுவதால்தான் விலக்களிக்கப்பட்டுள்ளது. அரசாங்க பாங்கி 4 சதம் விகிதப்படி வருஷம் 3000 வருமானம் ஒரு சொத்திலிருந்து கிடைக்க வேண்டுமானால், அதன் மதிப்பு 75,000 ரூபாயாக இருக்கவேண்டும். எனவே எஸ்டேட் வரி விலக்கை இப்போதுள்ள அளவில் பாதிக்குக் குறைத்திருப்பது 1500 ரூபாய் வருஷ

வருமானத்துக்குக்கூட வரி விதித்து முதலுக்கு நஷ்டமாக்குவதாகும். மத்திய தர வகுப்பினரை இது அதிகமாகப் பாதிக்கும்.

மேலும் சொத்துக்களை மதிப்பீடு செய்வதில் பணப் பெருக்கம் காரணமாகக் குறைந்த பெறுமானமுள்ள சொத்துக்கள் கூட ரூ. 50,000 பெறுமானமுள்ளதாக மதிப்பீடு செய்துவிடக் கூடும். முக்கியமாக நகரங்களில் தொழில் ஸ்தாபனங்களுள்ள பட்டணங்களிலும் வியாபார ஸ்தலங்களிலும் இம்மாதிரி இன்னல்கள் நேரக்கூடும். இது விஷயத்தில் வருமான வரி இலாகா அதிகாரிகளிடமிருந்து தொல்லைகளும் லஞ்ச ஊழல்களும் பல விதங்களில் ஏற்பட வகையும் வாய்ப்பும் உண்டு. இதர காரணங்களுக்காக இல்லாவிட்டாலும் இந்த ஒரு காரணத்துக்காக வேனும் இம்மாறுதல் செய்யாமல் விலகுவது நல்லது. ரூ. 50,000 வரையில் வரி போடலாம் என்றால் ரூ. 20,000 சொத்து உள்ளவர்கள் வரையில் வருமான வரி இலாகா அதிகாரிகளின் வேட்டை நடக்கும்.

மேலும் ஒருவர் மரணமடைவதற்கு இரண்டு வருஷங்களுக்கு முன்னால் செய்யப்பட்ட தானங்களுக்கோ, நன்கொடைகளுக்கோ இப்போது எஸ்டேட் வரியினின்று விலக்களிக்கப் பட்டிருக்கிறது. இனி இவ்விலக்கு ஐந்து வருஷங்களுக்கு முன்னால் செய்யப்பட்ட தானங்களுக்கு மட்டுமே அளிக்கப்படும். இவ்வரம்பை அதிகரிப்பதற்கு என்ன அவசியம் என்பது விளங்கவில்லை. வரி கொடுப்பதை ஏமாற்றுவதற்காகப் 'பெயரளவுக்காகச் செய்யப்படும் பிறுமி' நன்கொடைகளையும் தானங்களையும் தடுக்க வேண்டியதை யாவரும் ஒப்புக் கொள்ளுவர். ஆனால் இதன் மூலம் உண்மையாகவே செய்யப்பட்ட நன்கொடைகளும் தானங்களும் பாதிக்கப்படுமாகையால் இதை மேலும் ஆராய்ச்சி செய்ய வேண்டியது அவசியம்.

வரிகொடாமல் ஏமாற்றுவதைத் தடுக்கவே நன்கொடை வரி விதிக்கப்பட்டிருப்பதாகக் கூறப்படுகிறது. ஆனால் பொதுவாக வரி செலுத்துவது கடினமேயானாலும் நியாயமான வரிகள், அவசியமான வரிகள் என்று கருதப்படுவதையெல்லாம் மக்கள் செலுத்தத் தயங்குவதில்லை; முணுமுணுப்பதுமில்லை. நியாயமற்ற வரிகள் என்று கருதப்பட்டவைகளைத்தான் எதிர்க்கும் மனப்பான்மை உருவாகிறது. அப்போது மட்டுமே எவ்வாறேனும் குறிப்பிட்ட வரியைக்கொடாது ஏமாற்ற வேண்டுமென்ற எண்ணமும் உதிக்கிறது. புது வரி விஷயங்களில் அநீதி அம்சங்களைப் பரிசீலனை செய்து அகற்றுவது அவசியம்.

எஸ்டேட்வரி விதிப்பில் அதிகப் பணம் வரவில்லை என்று புலம்பி, அதற்குக் காரணம் நன்கொடைகள் மூலமாக ஏமாற்றுகிறார்கள் என்று சொல்லப் படுகிறது. சிலர் விஷயங்களில் தான் இவ்வாறிருக்கும். வெகுவாக இந்தச் சமாதானம் பொருந்தாது. நாட்டின் வறுமை நிலையே இதற்குக் காரணம்.

நிம்மதியாக இருப்பவர்களிடம் உள்ள செல்வத்தைக் குறைத்து வரிகள் மூலம் அதை அரசாங்கம் பறித்து விட்டால் மட்டும் 'சோஷலிஸ சமுதாயம்' உருவாகி விடாது. மக்கள் வாழ்க்கை வளம் பெறாது. அவர்களுடைய இன்பம் பெருகாது. அதற்கு நாட்டில் தொழில்வளம் பெருக வேண்டும். உற்பத்தி பெருக வேண்டும். மக்களின் வருமானம் உயர வேண்டும். விலைவாசிகள் குறைந்து தொழில் அபிவிருத்தியில் முதலீடு செய்யும் வாய்ப்பு வளர வேண்டும். வரிப் பணத்தைச் செலவிடுவதில் செல்வத்தை விருத்தி செய்யும் வழிகளில் செலவு செய்ய வேண்டும். செலவு நிர்வாகத்தில் கவனிப்பும் இருக்க வேண்டும். வரிவசூலிப்பது எவ்வளவு முக்கியமோ, அதைவிட முக்கியமானது வீண் விரயமாகாமல் அதைப் பயன்படுத்திக் கொள்வது.

சிறு சேமிப்பு மூலம் எதிர்பார்த்தபடி பலன் கிடைக்கவில்லை. இதற்குக் காரணம் நாட்டின் வறுமை நிலைதான். உணவு விஷயத்தில் இறக்குமதியையே இன்னமும் நம்ப வேண்டியிருக்கிறது. வேலையில்லாத் திண்டாட்டம் அதிகரித்துத்தானிருக்கிறது.

இவை யனைத்தும் திருப்தியளிக்கும் அம்சங்களல்ல. இவற்றுக்கெல்லாம் ஒரு முக்கிய காரணம் சென்ற மே மாதம் புகுத்திய விஸ்தாரமான வரி விதிப்பு. இவற்றின் பலாபலன்களை அரசாங்கம் நன்கு உணரவில்லை என்றே தோன்றுகிறது. அல்லது உணர்ந்திருந்தால் எங்கெங்கே சலுகைகள் அளிக்க வேண்டுமோ, அளிக்க முடியுமோ அவற்றை அளிக்க முன்வராதது வியப்பையே அளிக்கிறது. முக்கியமாக, ஆலை ஜவுளி விஷயத்தில் உள்நாட்டில் தேக்கமும், வெளிநாட்டு வியாபாரத்தில் மந்தமும் ஏற்பட்டிருப்பதற்குக் காரணம் கடுமையான "எக்ஸைஸ்" வரி விதிப்பே. இதில் ஒரு சிறு சலுகையும் பட்ஜெட்டில் இல்லாதது ஏமாற்றத்தையே விளைவித்துள்ளது.

கம்பெனிகள் விஷயத்திலும், செல்வவரி, டிபாஸிட்டு வரி, உபரி லாபவரி, போனஸ் வரி விதிப்பு முதலியவற்றில் ஓரளவுக்கேனும் சலுகை எதிர்பார்க்கப் பட்டது. இதிலும் ஏமாற்றமேதான் அடைய வேண்டியிருக்கிறது. அன்னியச் செலாவணி நெருக்கடி காரணமாக, திட்டத்தில் சிறு மாறுதல்கள் செய்யப்பட்டு, ஓரளவுக்கேனும் மாறுதல்களை ஏற்றுக் கொண்டிருக்கின்றனர். ஆனால் திட்டத்தின் அடிப்படை அம்சங்களை அரசாங்கத் தொகுதியில் மட்டும் நிறைவேற்றினால் போதாது. தனியார் தொகுதி என்று கருதப்படும் 'பிரைவேட்' தொகுதியிலும், அவற்றின் அபிவிருத்திக்கான வாய்ப்புகளை அளிக்க வேண்டியது அவசியம். அவ் வாய்ப்புகளைத் தடைசெய்து வைத்திருப்பதும் ஒரு குறையே. தனித் தொகுதித் தொழில் ஸ்தாபனங்கள் நாட்டின் பொருளாதாரத்துக்கு அவசியம். அவை செய்ய வேண்டிய பணி மிக்க உண்டு. அதை அவர்கள் உற்சாகத்துடன் செய்ய மேற்கொள்ள வேண்டும் என்றெல்லாம் பேச்சளவில் மட்டும் வானளாவக் கூறிவிட்டு, நடைமுறையில் அவை இயங்குவதில் தடைகள் ஏற்படுத்துவது முரண்பாட்டையே குறிக்கும்.

* * *

ராணுவச் செலவு விஷம் போல் ஏறிக்கொண்டு வருகிறது. இந்த இலாக்காவில், அந்நியநாட்டிலிருந்து ராணுவ தளவாடங்கள் வாங்குவதே நமது ராணுவச் செலவின் ஏற்றத்


திட்டச் செலவு
ராணுவச் செலவு
வரி கொடுப்பவர்கள்
புது வருஷப் பட்ஜெட்டில் ராணுவச் செலவும் அதிக மாகியிருக்கிறது. திட்டங்களுக்கு நிதி சேகரிக்கப் புதிய வரியும் போடப்பட்டிருக்கிறது!


தஞ்சை ஜில்லாவில்
விளைச்சலுக்கு நிதி உதவி செய்து வருவதாக ஒரு செய்தியும், சிறு சேமிப்புத் திட்டத்தை மும்முரப் படுத்துவதாக மற்றொரு செய்தியும் வெளியாகி இருக்கின்றன!
விவசாயி


வல்லரசுத் தலைவர்களின் மகாநாடு கூடுவதற்குமுன் மந்திரிகள் மகாநாடு கூடவேண்டும் என்று அமெரிக்கா சொல்லி வந்ததை ருஷ்யா ஒப்புக் கொண்டு விட்டது!
வெளிவிவகார மந்திரிகள் மகாநாடு
உலகத் தலைவர் மகாநாடு
விஜி

துக்குக் காரணம். மேல் நாடுகளில் செலவு செய்யும் ராணுவச் செலவெல்லாம் முற்றிலும் அந்தந்த நாடுகளில் மக்களுக்குத் தொழில் அபிவிருத்தி தருகின்றது. நம்முடைய நாட்டில் தளவாடங்களுக்காகச் செய்யப்படும் செலவோ, அந்நியச் செலாவணிச் சிக்கலை இன்னும் வளர்க்கிறது. அமெரிக்காவிலும் ரஷ்யாவிலும் இங்கிலாந்திலும் செய்யப்படும் ராணுவச் செலவு அந்த நாடுகளில் வேலையில்லாத் திண்டாட்டமில்லாமற் செய்கிறது. நம் நாட்டில் அந்த நற்பயனும்கூடக் கிடையாது. வரிச்சுமையைத்தான் அதிகப் படுத்துகிறது.

நாட்டின் வருஷாந்திர மொத்த வரி வருமானம் 725 கோடிக்கு உயர்ந்திருக்கிறது. நமது செலவும் 763 கோடிக்கு ஏறி யிருக்கிறது. ஆனால் இவ்வளவு உச்ச அளவுக்கு வருவாயும் செலவும் பெருகி யிருந்தும் பொது மக்களின் வாழ்க்கை இன்பம் எப்படியிருக்கிறது என்றால் கணிசமான முன்னேற்றத்தைக் காணவில்லை என்றே சொல்லத் தோன்றும். ரூபாய்க் கணக்கில் பார்த்தால் நாம் வளர்ந்திருக்கிறோம். ஆனால் சோஷலிஸ சமுதாயம் ரூபாய்க் கணக்கைக் கொண்டு மட்டும் அளப்பது தவறு.

# ருஷ்ய மக்கள் வழிகாட்டுகிறார்கள்!

ருஷ்யாவிலிருந்து மிக முக்கியமானதோர் செய்தி வந்திருக்கிறது. சென்ற ஞாயிற்றுக் கிழமை ருஷ்யாவின் தலைநகரமான மாஸ்கோவில் மாபெரும் பொதுக் கூட்டம் நடைபெற்றிருக்கிறது. அந்தப் பொதுக் கூட்டத்தில் மக்கள், ஐ. நா. சபைத் தலைவர் தலையிட்டு, உலக வல்லரசுகள் ஜலஜனுகுண்டு சோதனைகளையும் உற்பத்தியையும நிறுத்த முயலவேண்டும் என்று கோரி தந்தி யனுப்பி யிருக்கின்றனர்.

நான்கு ஆண்டுகளுக்கு முன் பசிபிக் மகா சமுத்திரத்தில் நடத்தப் பெற்ற அணுகுண்டு, ஜலஜனுகுண்டு சோதனைகளின் காரணமாக, அந்தச் சமுத்திரத்திலுள்ள பல்லாயிரக்கணக்கான மீன்கள் இறந்து போனதும், அந்த இறந்த மீன்களை உட்கொண்டவர்கள் கடும் விஷ நோய்களுக்கு உள்ளானதும் நினைவிருக்கலாம். அந்தச் சமுத்திரத்தில் சென்று கொண்டிருந்த ஜப்பான் தேசத்துக் கப்பல் மாலுமிகள் கடும் விஷ நோய்களுக்கு ஆளானதும், இருபது பேர்கள் உயிர் துறக்க நேர்ந்ததும் ஞாபகமிருக்கலாம்.

அணுகுண்டு சோதனைகளின் காரணமாக உயிர் துறக்க நேர்ந்த இருபது ஜப்பானிய மாலுமிகளின் ஞாபகார்த்த நாளாகத்தான் மாஸ்கோவில் மாபெரும் பொதுக் கூட்டம் சென்ற வாரம் நடைபெற்றது.

ஐ. நா. சபைத் தலைவர்களாக இருந்தவர்களில் ஹெமாமர்ஷீல்டு அவர்கள்தான் மிகவும் சிறந்த முறையில் பணியாற்றி யிருக்கிறார். அவருக்கு ஐ. நா. சபையில் இதுவரை யாருக்குமில்லாத தனிச் செல்வாக்கு உண்டு. அந்தச் செல்வாக்கைப் பயன்படுத்தி இந்த உலக க்ஷேமத்துக்குரிய பணியை நடத்தித் தருமாறு கேட்டுக் கொண்டிருக்கின்றனர். மாஸ்கோ நகரப் பொது மக்கள் உலக மக்களுக்கு இவ்விஷயத்தில் வழிகாட்டியிருக்கின்றனர்.

வல்லரசுகள் கைகளில் அல்லவா இந்த விஷகுண்டுகள் அகப்பட்டுக் கொண்டிருக்கின்றன? இவற்றை உபயோகப்படுத்துவதும் படுத்தாம விருப்பதும் அவர்கள் விருப்பத்தைப் பொறுத்தல்லவா இருக்கிறது? அவர்களைத் தடுத்து நிறுத்துவது யார்? பூனைக்கு மணி கட்டுவது யார்? இவ்வாறு உலக மக்கள் ஏங்கிக் கொண்டிருந்தனர்.

இவ் விஷயத்தில் இப்படி ஒரே அடியாக அங்கலாய்க்க வேண்டியதில்லை. அணுகுண்டு, ஜலஜனுகுண்டுக்கு எதிராகப் பொதுஜன அபிப்பிராயம் திரண்டால் வல்லரசுகள் பணிந்தே ஆகவேண்டும் என்று நமது தலைவர் ராஜாஜி முயற்சி எடுத்துக் கொண்டார். பாரத நாட்டில் நல்ல முறையில் அபிப்பிராயம் எழுந்தது. மக்கள் சபையில் ஜவாஹர்லால் நேருஜி ஒரு தீர்மானம் நிறைவேற்றி, பாரத மக்கள் அனைவரும் இவ்விஷயத்தில் ஒரே அபிப்பிராயம் கொண்டிருக்கின்றனர் என்று மேல் நாட்டுத் தலைவர்களுக்கு எடுத்துக் காட்டினார்.

ருஷ்யத் தலைவர்கள் ராஜாஜியுடன் கலந்து பேசிய பிறகு தாங்கள் அணுகுண்டு சோதனைகளை நிறுத்திவிடத் தயாராக இருப்பதாக உலகறியச் சொன்னார்கள். அமெரிக்கா, இதற்குத் தயாராயில்லை. இந்த நிலையை மாற்றுவது எப்படி என்று உலக மக்கள் குழப்பமடைந்திருக்கும் இந்தச் சமயத்தில் மாஸ்கோ நகர மக்கள் வழிகாட்டி விட்டனர்.

இது தவிர பிரிட்டனிலும் இப்பொழுது நாளுக்கு நாள் அணுகுண்டு சோதனைகளுக்கு எதிராகப் பொதுஜன அபிப்பிராயம் திரண்டு வருகிறது.

பிரிட்டிஷ் பார்லிமெண்டின் தொழிற்கட்சி அங்கத்தினர் வில்லியகஸ் என்பவர், "மற்ற வல்லரசுகள் நிறுத்துவதற்கு முன் பிரிட்டன் ஜலஜ குண்டு சோதனைகளையும் உற்பத்தியையும் நிறுத்திவிட்டால், உலக அரசியலில் அபரிமிதமான செல்வாக்கைப் பெற்றுவிடும்!" என்று சொல்லுகிறார்.

அணுகுண்டு சோதனைகளை நிறுத்தும் விஷயமாக ருஷ்யா சில நாட்களாக வல்லரசுத் தலைவர்கள் கூடிப் பேச வேண்டும் என்று சொல்லி வந்தது. ஆனால், 'தலைவர்கள் கூடிப் பேசுவதால் பயன் ஒன்றுமில்லை. முதலில் ஒவ்வொரு வல்லரசின் அந்நிய நாட்டு மந்திரிகள் கூடிப் பேசி, எந்த எந்த விஷயத்தை ஆலோசிக்க வேண்டும் என்று அட்டவணை தயாரிக்க வேண்டும். பிறகுதான் தலைவர்கள் பேச்சைப் பற்றிச் சிந்திக்க வேண்டும்' என்று அமெரிக்கர்கள் சொல்லி வந்தனர்.

உலக மக்கள், "இந்தத் தலைவர்கள் என்ன ராஜாக்களா? இவர்களும் மந்திரிகள்தானே! இவர்களே கூடிப் பேசுவதற்கென்ன?" என்று கேட்டுவந்தனர். ஆனால் பெருவாரியான மக்கள் இது அமெரிக்கா போட்டு வரும் முட்டுக்கட்டை என்று கருதி வந்தனர். ருஷ்யா இந்த முட்டுக்கட்டையையும் ஏற்றுக் கொண்டு

கி.ராஜேந்திரன்

எழுதும்

# பொங்கிவரும் பெருநிலவு



விட்டது. இந்த மந்திரிகளின் மகாநாட்டுக்குச் சம்மதித்து விட்டது. ராஜதந்திரக் கலையில் ருஷ்யா மற்றொரு வெற்றி பெற்று விட்டது என்று சொல்லலாம்.

மாஸ்கோ பொதுக்கூட்டத் தீர்மானத்தையும் சில நாட்களுக்கு முன் ருஷ்யத் தலைவர் ராஜாஜிக்கு எழுதியிருந்த கடிதங்களையும் படித்தவர்கள் ருஷ்யா உண்மையிலேயே இந்தச் சோதனைகளை நிறுத்தவேண்டும் என்று விரும்புகிறது என்பதை உணர்வார்கள். இனியும் மேற்கத்திய வல்லரசுகள் தயங்கினால் அவற்றின் செல்வாக்கு குறைந்துவிடும். இந்தச் சோதனைகளை நிறுத்த இப்பொழுது ருஷ்யாவை விட மேற்கத்திய வல்லரசுகள் ஆர்வம் காட்டி, செயலிலும் இறங்க வேண்டும். இதைத் தவிர வேறு வழியில்லை!

மேற்கத்திய வல்லரசுகளுக்கு இந்த ராஜதந்திரம் ஞானோதயமாகும் என்று நாம் நம்புவோமாக.

உலக மக்கள் அணு, ஜலஜ குண்டு விஷக் காற்றிலிருந்தும், நீரிலிருந்தும் காப்பாற்றப் படுவார்களாக.

# எஃகுத் தொழிலின் பொன்விழா

தாமஸ் கார்லைல் என்னும் ஆங்கில ஆசிரியர் ஒரு பிரசங்கத்தில் "எவனொருவன் எஃகை உற்பத்தி செய்கிறானோ அவன் சீக்கிரத்திலேயே தங்கத்தை அடைவான்" என்று சொன்னார். எஃகுத் தொழிலின் முக்கியத்தை விளக்கவே அவர் அவ்வாறு சொன்னார். அவர் சொன்னதைக் கேட்டுக் கொண்டிருந்த ஒரு இந்திய பார்ஸி கனவானுக்கு இதைச் செய்து பார்த்தாலென்ன என்ற ஆர்வம் பிறந்தது. தம் நாடு திரும்பியதும் எங்கே இரும்புக் கனிப் பொருள் இருக்கிறதென்று ஆராய்ந்தார். ஜெம்ஷெட்பூர் என்று இப்போது வழங்கும் பிரதேசத்தில் இரும்புத் தொழிற்சாலைக்கு வாய்ப்பு உள்ளது என்று உணர்ந்து ஒரு தொழிற்சாலையை நிறுவினார். இது நடந்தது 1908ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம். அப்போதிலிருந்து படிப்படியாகத் தொழிற்சாலை முன்னேற்ற மடைந்து, பல இன்னல்களைச் சமாளித்து, ஆசியாவிலேயே மிகவும் பெரிய ஆலையாக டாடா இரும்பு எஃகுத் தொழிற்சாலை செயலாற்றி வருகிறது. ரூ. 120 கோடி வரையில் விடு முதல் செய்யப்பட்ட இந்தத் தொழிற்சாலை இப்போது 50 ஆண்டு பூர்த்தியடைந்து அதன் பொன் விழாவைக் கொண்டாடுகிறது. இதைத் துவக்கி வைத்த பெரியார்தான் ஜாம்ஷெட்ஜி டாடா என்னும் தொழிலதிபர். அவர் காலத்தில் அவர் மனோரதம் முற்றிலும் பூர்த்தி யடையாவிடினும், அவர் வகுத்த திட்டமும், போட்ட அஸ்திவாரமும் நிலையாக நின்று நாட்டிற்கே அணிகலனாக விளங்குகிறது. பொன் விழாவைத் துவக்கி வைத்த பிரதமர் நேருஜி, ஜாம்ஷெட்ஜிக்கு அஞ்சலி செலுத்தி மரியாதை செய்தார். அவருடன் நாமும் சேர்ந்து இந்திய எஃகுத் தொழிலின் முதல் ஸ்தாபனத்தை வாழ்த்துவோமாக.

## சிறந்த நாடகத்துக்கும் மேடைத் தயாரிப்புக்கும் பரிசுகள்

நாடகத்துறையில் அப்போதைக்கப்போது இரண்டு பரிசுகள் வழங்க சங்கீத நாடக அகாடமி தீர்மானித்திருக்கிறது. சிறந்த நாடகங்களுக்கும் மேடையில் நடிக்கப்படும் சிறந்த தயாரிப்புகளுக்குமாக இரண்டு பரிசுகள் வழங்கப்படும். இந்திய பாஷைகளில் புதிய நாடகங்கள் எழுதுவோருக்கும் நாடகங்களைச் சிறந்த முறையில் மேடையில் கொண்டு வருவோருக்கும் உற்சாகமளித்து, நாடகத்துறையில் முன்னேற்றம் ஏற்படும்படி செய்வதே பரிசு வழங்குவதன் நோக்கமாகும். இவ்வருஷம் ஹிந்தி, தமிழ் மொழிகளில் வெளியாகும் நாடகங்களும் மேடைத் தயாரிப்புகளும் பரிசீலனை செய்யப்படும்.

மிகச் சிறந்த நாடகம் எழுதிய ஆசிரியருக்கு ரொக்கமாக ரூ. 2500/-ம், தங்கத் தோடாவும், ஒரு சால்வையும் பரிசாக வழங்கப்படும். சிறந்த மேடைத் தயாரிப்புக்கு ரொக்கமாகக் கொடுக்கப்படும் ரூ. 2500/-ஐத் தவிர, மேடையில் நடித்துக்காட்டும் செலவுக்காகவும் ரூ. 2500/- வழங்கப்படும்.

எழுத்துப் பிரதிகளைச் சமர்ப்பிக்கும், கடைசி நாள் 1958 மே மாதம் 15-ந் தேதி வரையில் நீடிக்கப்பட்டிருக்கிறது.

போட்டியில் கலந்து கொள்வதற்கான விதிகளை, புரோகிராம் ஆபீசர், சங்கீத நாடக அகாடமி, 70, ரீகல் பில்டிங்ஸ், புது தில்லி. (Programme Officer, Sangeet Natak Akadami, 70, Regal Buildings, New Delhi.) என்ற விலாசத்திலிருந்து பெற்றுக் கொள்ளலாம்.

# அருள் வாக்கு

பழங்காலத்தில் 'ஆறிலொரு கடமை' இருந்து வந்ததைப் பற்றி எல்லோரும் கேட்டிருக்கலாம். விளைந்ததில் ஆறில் ஒரு பங்கு அரசாங்கத்துக்குச் செலுத்த வேண்டியது என்பது முன்னாள் ஏற்பாடு. இந்த ஏற்பாடு இருந்த வரையில் பஞ்சமே தலை காட்டவில்லை. காரணம் விளைந்த தானியம் அத்தனையும் தான்யமாகவே இருந்தது. எது வேண்டுமானாலும் தானியத்தைக் கொடுத்துத்தான் வாங்கிக் கொள்ள வேண்டும். வெள்ளைக்காரன் ஆளத்தலைப்பட்ட பிறகு தான் தானியம் பணமாக மாறியது. இங்கிலீஷ் படிப்பு நடமாட ஆரம்பித்ததும், வீடு வாசல், நிலம் எல்லாவற்றையும் சர்ட்டிபிகேட்டுகளாக மாற்றிக் கொண்டு விட்டனர். தானியம் பணமாக மாறிவிடவே வெளி நாடுகளுக்கெல்லாம் கொண்டுபோவது சுலபமாயிற்று. தானியச் செழிப்பு சுருங்கலாயிற்று. இதனால் சாப்பிடக் கூடத் தானியமில்லாத தவிப்பு தாண்டவமாடுகிறது.

பணத்தின் அவசியமே இல்லாத காலத்தில் வாழ்ந்தவர்கள் மிக மிக எளிதாக வாழ்க்கை நடத்தினார்கள். அவரவர்களின் நெல் அவரவர்களிடம் இருந்தது. சாப்பாட்டுக்கு நிறைய இருந்தது; மிச்சமும் நிரம்ப இருந்தது; தானம் பண்ணியே தீர வேண்டிய நிலைமை இருந்தது. மண் பானை, கல் சட்டி, ஓலை, பாக்குப் பட்டை, கருகமணி, பர்ணசாலை இவைகளை வைத்துக் கொண்டு நன்றாகக் காலக்ஷேபம் நடத்தினார்கள். யாரும் யார்மீதும் பொறாமையோ, கோபமோ கொள்ள அவசியமில்லை. நிம்மதியுடன் வாழ்க்கை நடந்தது. அற நெறியும் செழித்தது. இத்தனையும் தலை கீழாக மாறியதும் பகட்டு மேலிட்டது. தாபமும் அழுகையும் அதிகமாயிற்று. ஆசாரமும் அனுஷ்டானங்களும் மறைந்தன; தரித்திரம் சூழ்ந்து கொண்டது. இது தான் உலகின் இன்றைய நிலை:

தென்புலத்தார் தெய்வம்
விருந்தொக்கல் தானென்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை.

என்பது வள்ளுவர் வாக்கு.

தேவ பித்ருக்கள், கடவுள், அதிதிகள், பந்துக்கள், நான் என்னும் ஐந்து வகையினருக்கும் செய்யவேண்டிய கடமைகளைத் தவறாது செய்வதே சிறந்த அறமாகும். இதுதான் மேற்படி குறளின் கருத்து. இதே கருத்துக்கள் உபநிஷத்துக்களிலும் சொல்லப்பட் டிருக்கின்றன. இதன்படி வாழ்ந்தால் நம்மைப் பிடித்துள்ள துன்பங்கள் நீங்கி, சாந்தி பெருகும்.

—ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சி காமகோடி பீடம்

# கட்டுண்ட மாயன்

**எஸ். வி. எஸ்.**

சூரியன் இருப்பது கோடிக்கணக்கான மைல்களுக்கு அப்பால் வான மண்டலத்தில்.

அவன் தன்மை, கவாலை வீசும் பெரும் நெருப்புக் கோளமாக விளங்குவது.

அவனுடைய உருவம் அளவிடற்கரிய பிரும்மாண்டமான உருவம்.

மனிதர்கள் கண்கொண்டு நோக்கக் கூசுகிறார்கள் !

ஆனால் ஓர் அதிசயம் பார்த்தீர்களா?

இந்த மாசி மாதத்தில் எங்கும் பனி உதிர்வதைப் பார்த்திருப்பீர்கள். ஒரு சின்னஞ்சிறு புல். அந்தப் புல்லின் நுனியில், ஒரு சின்னஞ்சிறு பனித் துளி.

அந்தப் பனித்துளி, யாராலும் எட்ட முடியாத, நெருங்க முடியாத அந்த மாபெரும் கதிரவனைத் தனக்குள் அடக்கி வைத்துக் கொண்டிருக்கிறது! அந்தப் பனித்துளி, அந்தக் கதிரவனைத் தன்னகத்துள் எவ்வளவு இன்பமாகத் துய்க்கிறது! — இவ்வாறு கவி ரவீந்திரர் ஓர் இடத்தில் கூறுகிறார்.

ரவீந்திரநாதர் துய்த்தாறபோலன்றி இன்னொரு விதத்திலும் இவ்விஷயத்தைச் சொல்லலா மல்லவா?

'இந்தப் பனித்துளிக்குள்; அந்தப் பிரும்மாண்டமான சர்வ சக்தி வாய்ந்த பகலவன் எவ்வளவு லாகவமாக, தன் உடலைச் சுருக்கிக் கொண்டு வந்து உட்கார்ந்து விட்டான்!' என்றும் சொல்லலா மல்லவா?

ஆண்டவன் இல்லாத இடம் எது? அவன் சக்தி பரவாத இடம் எது?

வான மண்டலம் முதல் புல் பூண்டு வரையில் எங்கும் நிறைந்திருக்கிறான். அவனை உணரத்தான் நம்மால் முடியவில்லை!

பெரும் சூறாவளிக் காற்று அடிக்கும்போது, அது விளைக்கும் உற்பாதங்களைப் பார்க்கும்போது இந்தக் காற்றுக்கு இவ்வளவு சக்தி எப்படி வந்தது என்று நினைக்கிறோம்! அப்பொழுது ஆண்டவனின் பயங்கர சக்தியை நினைத்து மலைக்கிறோம்!

அதே காற்று மெல்லத் தவழ்ந்து தென்றலாக வரும்போது, 'என்ன சுகம்!' 'எத்தனைய இன்பம்!' என்று கூறி மகிழ்கிறோம்!

ஒரே சக்தி உற்பாதம் விளைவிப்பதாகவும், இனிமை விளைவிப்பதாகவும் இருக்கும் இயல்பைப் பார்த்து நம் முன்னோர்கள் ஆண்டவனின் லீலைகள் என்றார்கள்!

இவற்றைப் பவிதமாக நம் முன்னோர்கள் அனுபவித்தார்கள்!

தேவர்களும், அசுரர்களும் ஒரு முறை அமிர்தம் வேண்டிக் கடலைக் கடைந்தார்கள். மகாமேரு பர்வதமே மத்தாகவும், வாசுகி என்னும் பாம்பையே கயிறாகவும் கொண்டு கடைந்தார்கள்!

தேவர்கள் யார்? அசுரர்கள், யார்?' எல்லாம் 'அவனே' யல்லவா? ஆகவே, கடலைக் கடைந்தது எங்கும் நிறைந்த, சர்வசக்தி வாய்ந்த இறைவன் என்றுதானே சொல்ல வேண்டும்!

இவ்வளவு பெரிய கடலைக் கடைந்த ஆண்டவன், இது என்ன அதிசயம், யசோதையின் வீட்டில் சின்னஞ்சிறு பாலகனாக வந்து அவள் மிரட்டலுக்கும் உருட்டலுக்கும் பயந்து தயிர் கடையும் கயிற்றில் கட்டுண்டு கிடக்கிறான்!

கடல் கடைந்த சந்தர்ப்பத்தை நினைக்கும்போது ஆண்டவனின் பெரும் சக்தியின் நினைவு வருகிறது. யசோதையின் வீட்டில் கட்டுண்டு கிடக்கும் காட்சியை நினைக்கும்போது, அவன் எளியோருக்கும் எளியனாக வரும் பான்மை நினைவுக்கு வருகிறது!

இதைச் சிலப்பதிகாரத்தில் வரும் ஆய்ச்சியர் பெரிதும் அனுபவித்துப் பாடுகிறார்கள்.

> வடவரையை மத்தாக்கி
> வாசுகியை நாணாக்கிக்
> கடல்வண்ணன் பண்டொருநாள்
> கடல்வயிறு கலக்கினையே
> கலக்கியகை யசோதையார்
> கடைகயிற்றால் கட்டுண்கை
> மலர்க்கமல வுந்தியாய்
> மாயமோ, மருட்கைத்தே!

பேதை ஆய்ச்சியர்களுக்கு, ஆண்டவனின் இரண்டு முற்றும் மாறுபட்ட தன்மைகளை நினைக்கும்போது, "ஆண்டவனே இது என்ன மாயம்! இது எங்களுக்குப் புரியாத அதிசயமாக இருக்கிறதே!" என்று நெஞ்சுருகிக் கேட்கிறார்கள்.

இந்த நிலையைப் பார்க்கும்போது, இந்தப் பாடலைப் படிக்கும்போது, ஆழ்வார்களின் நிலைதான் நம் நினைவுக்கு வருகிறது.

'திங்களைப் போற்றுதும்!' 'மாமழை போற்றுதும்!' என்று இயற்கையை ஆரம்பத்தில் பாடிப் பரவிய கவி இளங்கோ, ஆய்ச்சியர் வாயிலாக, ஆழ்வார்கள் நிலையில் நின்று பக்தி பரவசத்தோடு கண்ணனின் திருவிளையாடல்களைப் பாடும் அற்புதப் பாங்கைப் பார்க்கிறோம். சர்வ சமய சமரச ஞானி இளங்கோ என்பதை உணர்ந்து பெருமிதம் அடைகிறோம்!

சர்வ வல்லமை பொருந்திய அந்த ஈசனை, யசோதையைப் போல் இந்த நான்கு அடிகளில் இளங்கோ அடிகள் கட்டிப்போட்டு விட்டார். இந்தப் பாடலைப் பாடப் பாட, அன்று ஆயர்பாடியில் ஆய்ச்சியர் கண்ணனின் பல்வேறு லீலைகளைத் துய்த்தாற் போன்ற இன்பத்தையே நாம் பெறுகிறோம்!

பனித்துளிக்குள் கதிரவன் வந்தாற்போல், இந்தப் பாடலுக்குள் கண்ணன் வந்து நம் உள்ளத்திலும் நிறைந்து விடுகிறான்!

ஆய்ச்சியர் கண்ட இருவகைப்பட்ட காட்சிகளை ஓவியர் விஜு அற்புத வண்ணங்களுடன் அட்டைச் சித்திரமாக வழங்கியிருக்கிறார்.

---

**திருத்தம்**

கல்கி 12-1-58ம் தேதி இதழில், 94ம் பக்கத்தில் பிரசுரமாகியுள்ள விளம்பரத்தில் விளம்பரதாரரின் பெயரை பிலிப்ஸ் இந்தியா லிமிடெட் என்று திருத்தி வாசிக்கவும்.

---

தேநீர் அருந்த

வேண்டிய வேளையில்...

பார்லேயின்

# மொனாகோ

இந்தியாவிலே முதன்மையானதும் மிகச்சிறந்ததுமான

## ஸால்டட் ஸ்னாக்ஸ்




மொறமொறப்பானது, இலேசானது, புத்தப் புதியது, இலேசாக உப்புக் கரிக்கும் ருசியுடன் கூடிய பிஸ்கெட்டுகள்.

பார்லே ப்ராடக்ட்ஸ் மானுபாக்சரிங் கம்பெனி பிரைவேட் லிட்., பம்பாய்.

PM.58.1A TAM. EVEREST




20

ஒருவனிடம் ஒரு நன்மையை அடைந்து அதற்குப் பிரதி உபகாரம் செய்வது சாமான்யம். ஒரு உபகாரமும் பெறாமல் செய்யும் உதவியே மிகச் சிறந்த செயலாகும். அத்தகைய செயலுக்கு ஈடாகக் காட்டும் பொருள் வேறேதும் இல்லை.

செய்யாமல் செய்த
உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது.

அதற்கு ஈடான நற்பொருள் இவ்வுலகத்திலும் இல்லை, மேலுலகத்திலும் இல்லை.

ஒரு நன்மையைப் பெற்று அதற்குக் கைம்மாருகச் செய்யும் நன்மை பெரிதாக இருக்கலாம். ஆனால் ஏதும் பெறாமல் தானகச் செய்யும் உதவி எவ்வளவு சிறியதாயினும் அதுவே அதிகச் சிறப்புடையதாகும். அதற்கு என்ன பிரதி உதவி செய்தாலும் ஈடாகாது.

* * *

கூடன் தீர்க்கும் வகையில் அல்லாமல் தானகச் செய்யும் உதவியின் மேன்மையைப் பற்றிச் சொல்லிவிட்டு, உதவி செய்ய வேண்டிய சமயத்தைப் பற்றிச் சொல்லுகிறார்.

காலத்தி ஞல்செய்த
நன்றி சிறிது எனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது.

[காலத்தினுல்-காலத்தில்]

செய்யும் சமயமே செய்யும் காரியத்தைக் காட்டிலும் சிறந்த அம்சம். ஆனபடியால், "வேற்றுமை மயக்கம்" புகுத்தி அழகாகக் 'காலத்தினுல்' என்று பாடினர். உதவியின் அளவை நோக்காமல், செய்த சமயத்தை நோக்கினுல், சிறிய உதவி பெரியதாகிறது. சிறிதாயினும் பெரிது என்கிருர். எவ்வளவு பெரிது? உலகப் பரப்பை விடப் பெரிது!

* * *

உதவியைப் பெற்றவனுக்கு அவசரம் தீர்ந்ததும் உதவிபெற்ற நிகழ்ச்சி மறந்து போகும். ஆனல் நமக்கு ஒருவன் ஏதேனும் ஒரு தீமை செய்தால் எவ்வளவு காலம் சென்றாலும், அந்தத் தீமையின் நஷ்டம் தீர்ந்து போனுலும், மனத்தில் தீமையை மறக்காமல் வைத்துக் கொண்டு கஷ்டப்படுகிறோம். இது இயற்கையில் உள்ள குறைபாடு. முனிவர் சொல்லுவது என்னவென்றால் செய்த நன்றியை எப்போதும் மறக்காதே. தீமை யாரேனும் செய்தால் அதை அன்றே மறந்து விடு. இது உனக்கே நன்மை என்கிருர்.

நன்றி மறப்பது
நன்றன்று நன்றல்லது
அன்றே மறப்பது நன்று.

நன்றல்லதை மறப்பதற்கு முனிவர் அதிக காலம் கொடுக்கவில்லை. "அன்றே" என்று சொன்னர். 'நன்று' என்றால் 'உனக்கே நல்லது, அறிவாய்' என்று பொருள்.

ஒருவன் நமக்கு மரணத்தைப் போல் பொறுக்க முடியாத தீமை செய்வான். அதனால் நமக்குப் பெருந் துக்கம் உண்டாகிறது. அச்சமயம், நாம் செய்ய வேண்டியதை முனிவர் சொல்லுகிறார். அவன் நமக்கு ஏதேனும் ஒரு நன்மை அதற்கு முன் செய்திருப்பான், அதை நினைவுக்குத் தந்து கொண்டால் அவன் இப்போது செய்யும் தீமையினால் வந்த துக்கத்தை மறப்பதற்கு உதவும். இந்த முறையைக் கைக்கொண்டு பொறுமையை வளர்த்துக் கொள் என்கிறார்.

கொன்றன்ன இன்னா
செயினும் அவர்செய்த
ஒன்று நன்(று) உள்ளக் கெடும்.

பிறர் செய்த தீமையினால் மனத்தில் துக்கம் உண்டாகிறது. அது ஒரு நோய் நிலை. நம் உள்ளத்தில் தோன்றிய நோய் நிலைக்கு மருந்து சொல்லுகிறார். வயிற்று வலிக்கு மருந்து சாப்பிடுவது போல் உள்ளத்தின் வலிக்கு உள்ளத்தில் செலுத்தும் மருந்தைச் சொல்லுகிறார். தீமை செய்தவன் ஏதேனும் நமக்கு ஒரு நன்மை செய்திருப்பான், அதை நாம் நினைவுக்குத் தந்துகொள்ள வேண்டும். அந்த நினைவு உள்ளத்தில் உண்டான நோயை உடனே தீர்க்கும். செய்து பார்த்தோமானால் வள்ளுவர் எவ்வளவு தெரிந்து சொல்லுகிறார் என்பதைக் காண்போம்.

தீமையைப் பொறுத்துக் கொள்வதும் அதனால் உண்டாகும் துக்கத்தைத் தாங்குவதும் கஷ்டம் என்பதை வள்ளுவர் அறிந்து அவருடைய தனிப் பாணியில் மருந்தைச் சொல்லுகிறார். 'தீமையைப் பொறுத்துக் கொள்' என்று மட்டும் சொல்லிவிட்டால், எப்படிப் பொறுத்துக் கொள்ள முடியும் என்றுதான் மக்கள் சொல்லுவார்கள். ஆனபடியால் சொல்லுகிறார்: "அவன் முந்தி உனக்கு ஒரு நன்மை செய்திருக்கிறான் அல்லவா, அதை எண்ணிப் பார். உன் துயரம் தீரும், பொறுமை உண்டாகும்" என்கிறார்.

'ஒன்று நன்று' என்றார். ஒரே ஒரு சிறிய உபகாரம் செய்திருப்பான் அல்லவா? அதை நினைத்துக் கொள். போதும் என்றவாறு 'ஒன்று' என்கிற சொல் 'நன்று'க்கு முன்னால் வைத்திருப்பது இந்தப் பொருள் வேகம் தருகிறது.

மன நுட்ப சாஸ்திரம் தற்காலத்தில் வளர்ந்திருக்கிறது. இந்தக் குறளில் வள்ளுவர் சொல்லியிருப்பதை ஆராய்ந்தோமானால் அந்தச் சாஸ்திரத்தில் வள்ளுவர் எவ்வளவு நிபுணர் என்பதைக் காண்போம்.

# வட்ட மேஜை

## கலியுக யமன்!

பி. சி. ஜியின் கொடுமையைப் பற்றி ஏழை சலவைத் தொழிலாளி எழுதிய உருக்கமான கடிதத்தை 23—2—58 கல்கி இதழில் கண்டேன். பி. சி. ஜியினால் வரும் துன்பங்களை மேதை ராஜாஜி அவர்கள் பல மேற்கோள்களுடன் மத்திய சர்க்காருக்கு எடுத்துரைத்தும், கல்கி பத்திரிகையில் அமெரிக்க டாக்டர்களின் விளக்கங்களைப் பிரசுரித்து எச்சரிக்கைகள் விடுத்தும் விடாப்பிடியாக பி. சி. ஜி என்னும் இக் கலியுக யமனை நடமாட விட்டுக் கொண்டிருக்கிறார்கள். இனிமேலாவது இத்தக் கேடுகெட்ட மருந்துக்கு மக்களின் வரிப்பணத்தைச் செலவு செய்யாமல், நல்ல வழியில் செலவு செய்து இந்தியாவின் பெருமையை உயர்த்த அரசாங்கம் ஆவன செய்யுமென்று எதிர்பார்க்கிறேன்.

திருவெள்ளரை
22—2—58 எஸ். கண்ணன்

## இரு கண்கள்

ஸ்ரீ சங்கராச்சாரியார் அவர்களின் அருள் வாக்கும், தலைவர் ராஜாஜி அவர்களின் வள்ளுவர் வாசகமும் எங்களுக்கு மன அமைதியை உண்டாக்குகின்றன. 'கல்கி'யில் இவை சிறந்த இரத்தினச் சுருக்கங்களாக, இரு கண்களாக மிளிருகின்றன. மனப் பண்பாடு, இறையன்பு பெற்றுப் புனித வாழ்வு வாழ்ந்து ஆன்மா ஈடேற்றமடைய இவை உன்னதக் கருவிகளாக அமைந்துள்ளன.

இலங்கை
27-1-58 சி. செல்லத்துரை



## சூரியனின் அருமை

சூரியனின் அருமை மழை காலத்தில் நன்றாகத் தெரிகிறது. ஆனால் வெய்யிற் காலத்திலோ, சிலருக்கு அதிகமாகச் சுடுகிறது. ஏழை மக்களுக்கு அந்த வெய்யில் சுடுவதில்லை. சூரியன் நன்றாகப் பிரகாசித்தால்தான் மழை பெய்யும்; மக்கள் சுபிட்சமாக வாழ முடியும்.

ராஜாஜி அவர்களும் சூரியனைப்போல் பிரகாசித்து வருகிறார். மழை அதிகமாகிச் சகதியாக உள்ளபொழுது அவரது தேவை ஏற்படுகிறது. வெய்யிற் காலத்தில் சிலருக்குச் சுடுவதுபோல, சுயநலக்காரர்களுக்கு அவரது உபதேசம் சுடத்தான் செய்கிறது. அவர்கள் சுடுகிறதே என்று கத்துகிறார்கள்! அவரது அறிவுநாட்டுக்குத் தேவை. அந்தக் கர்மயோகிக்கு இகழ்ச்சியும், புகழ்ச்சியும் ஒன்றுதான்.

தாராபுரம் புதூர்
21—2—'58 டி. பி. ராஜகோபாலன்

## பொன்னி எங்கே?

சென்ற கல்கி 2-3-58 இதழில் ஆரம்பமாகியிருக்கும் "பொன்னி எங்கே?" என்ற கதை தேன் சொட்டும் தீந் தமிழில் தோய்த்தெடுக்கப்பட்ட கற்பனைக் காவியம்.

காவேரியின் நீரோட்டத்தையும் திகைக்க வைக்கும் வர்ணனைத் தெளிவு. அதன் அருகமர்ந்து அளவளாவும் காதலர்களின் கதை கருத்தைக் கவ்வுகிறது.

திரு பகீரதனின் கற்பனை உருவுகளை அடிக்கடி வெளியிட்டு எங்கள் தமிழ்ப் பசியைத் தணிப்பீர்களென நம்புகிறேன்.

தஞ்சீரப்பட்டு
28—2—58 ஆ. சண்முகம்

## வேலியில்லாத காலி மனை

தேனாம்பேட்டை 46-வது டிவிஷனைச் சேர்ந்த கில்லாயபுரம் தெருக் (கதீட்ரல் ரோடிலிருந்து பிரிவது) கோடியில், மேற்குப் புறத்தில் உள்ள பெரிய காலி மனை வேலியில்லாமல் அனாதையாகப் பல ஆண்டுகளாக இருக்கின்றது. மேற்படி காலி மனை, காலை நேரங்களில் குழந்தைகள் அசுத்தப்படுத்தும் இடமாகவும், சுற்றுப்புறக் குடிசைகளில் இருக்கும் பெண்கள் எல்லா இடங்களிலிருந்தும் சேகரிக்கும் மாட்டுச் சாணத்தைச் சேர்த்து வைத்து வறட்டி தட்டுமிடமாகவும், குடிசை வாழ் மக்களும் தெருவுக்குச் சம்பந்தமில்லாத இடங்களில் குடியிருக்கும் ஜனங்களும் தங்கள் எருமை மாடுகளை நிரந்தரமாகக் கட்டி வைக்க மாட்டுக் கொட்டிலாகவும், பல பெண்கள் மாலை நேரங்களில் திறந்தபடி, திறந்த வெளியில், லைசென்ஸ் இன்றி, மீன் விற்பனை செய்ய நல்ல இடமாகவும் உபயோகப்பட்டு வருகிறது. நிரந்தரமாக மாடு

களைக் கட்டி வைத்திருப்பதால் எப்போதும் துர்நாற்றம் வீசுகிறது. கொசுக்களின் உபத்திரவமும், படையெடுப்பும் தாங்க முடியவில்லை. எந்த நேரத்தில் வியாதி வருமோ என்ற பயம் இருக்கிறது. இதைக் குறித்து கார்ப்பரேஷன் சுகாதார அதிகாரிக்கும், மற்றவர்களுக்கும் எத்தனையோ கடிதங்கள் எழுதியும், மனுக்கள் அனுப்பியும் பலனில்லை. மேலே குறிப்பிட்ட காலி மனையை ஏன் ''குழந்தைகள் பூங்கா''வாக மாற்றக் கூடாது? அது பள்ளிக்கூடக் கட்டடம் கட்டச் சிறந்த இடம். சுகாதாரத்துக்கு ஹானி உண்டாக்கும் காலிமனைகளை, சம்பந்தப்பட்ட அதிகாரிகள் கவனிக்காமல் சும்மா இருக்கக் கூடாது. இனிமேலாவது, அவர்கள் உடனடியாக நடவடிக்கை எடுப்பார்களா?

சென்னை 6
17-2-58 ''கயிலாயபுரத் தெருவாசி''

## மின்சார போர்டார் கவனிப்பார்களா?

இன்றைய நிலையிலே மின்சாரம் வாழ்க்கையின் இன்றியமையாத ஒரு சாதனமாக விளங்குகிறது. குறிப்பாக, நம் தமிழ்நாட்டிலே அதிசயிக்கும் முறையிலே மின்சாரம் விரிவடைந்து வருகிறது. தொழில் வளத்தைப் பெருக்கிக் கொண்டும், நாட்டின் முதுகெலும்பான விவசாயத்தை வளர்த்துக் கொண்டும் வருகிறது. ஆனால் இவ்விதம் மின்சாரத்தைப் பரப்பும் பணியிலே ஈடுபட்டிருக்கும் ஏழைத் தொழிலாளர்களின் வாழ்வு இன்னும் வளம் பெறவில்லை. மழையென்றும், இடியென்றும், இரவு பகலென்றும் பாராமல் வஞ்சனையின்றி உழைக்கும் சென்னை ராஜ்ய மின்சார போர்டின் கீழ் பணியாற்றும் ஊழியர்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்தி, அவர்களின் அடிப்படைக் கோரிக்கைகளைக் கவனித்து, தொழிலாளர்களின் உள்ளங்களை மலர வைத்து, இன்னும் ஊக்கத்துடன் பணியாற்றும்படி செய்ய மின்சார போர்டு தாமதமின்றி முயலும் என்று நம்புகிறேன்.

விழுப்புரம்
16-2-58 வி. முத்துகிருஷ்ணன்

## "அறிவுக் களஞ்சியம்"

பேராசிரியர் அ. சீநிவாசராகவன் அவர்கள் கல்கியில் இலக்கியச் செல்வத்தின் கீழ் அளித்து வந்த ''மண் பாண்டம்'' ''பானைகள் மகாநாடு'' ''பானைகள் பேசின'' என்ற மூன்று இலக்கியக் கட்டுரைகளை நாங்கள் கடந்த மூன்று வாரங்களாக அக்கறையுடன் படித்து வந்தோம்.

பானைகளை உதாரணமாகக் கொண்டு, மனித சமுதாயத்துக்கு ஓர் சிறந்த உண்மையை உணர்த்தியுள்ளார். பானைகளைப் பலவித உருவங்களுடனும், பலவித உபயோகத்துக்காகப் படைத்த குயவனைப்போல், மானிடர்களாகிய நம்மை, நாட்டுக்குத் தேவையான கடமைகளை, நாம் செவ்வையாகச் செய்யக் குயவராகிய கடவுள் படைத்துள்ளார். தன் முயற்சியினாலேயே முன்னணிக்கு வர முயலவேண்டுமே தவிர, ஒருவர் மீது ஒருவர் பொறாமை கொள்வதோ,



பகவானிடம் பக்தி செய்தலும் அவன் அருளைப் பெறுதலுமே மனிதப் பிறவியின் பயன்களாகும். இந்த அரிய தத்துவத்தை உணர்ந்து பம்பாய் மாதுங்கா ஆஸ்திக சமாஜத்தார் முப்பத்தைந்து வருஷங்களுக்கு மேலாகக் கடவுள் தொண்டு புரிந்து வருகிறார்கள். இந்த வருஷங்களுக்கு முன்பு ஸ்ரீ ராமர் கோவிலை நிர்மாணித்தது, அவர்களது பக்தித் திருப்பணிக்கு எடுத்துக்காட்டு. இப்பொழுது அவர்கள் தங்கத்தாலான ஆஞ்சநேய வாகனத்தை உருவாக்கி ஸ்ரீ ராமருக்குச் சமர்ப்பித்திருக்கிறார்கள். சென்னையில் விசேஷமாகத் தயாரிக்கப்பட்ட இந்த ஆஞ்சநேய வாகனத்தை மேலேயுள்ள படத்தில் காணலாம்.

---

கடவுள் நம்மை ஏன் இவ்விதம் படைத்தார் என்றோ நிந்திக்காமல், அவரவர் கடமையை உணரவேண்டும் என்பதைப் பேராசிரியர் தம் கட்டுரைகளில் பானைகளையும், குயவனையும், உபமான உபமேயமாகக் கொண்டு தெள்ளத் தெளிய விளக்கியுள்ளார்.

கல்கத்தா-26 ரா. ஜெயலக்ஷ்மி
16-2-'58 ரா. சரஸ்வதி

## நல்ல இடத்துச் சம்மந்தம்

'கல்கி' இதழில் பிப்ரவரி இரண்டாந் தேதி நல்ல இடத்துச் சம்மந்தம் விமர்சனம் பார்த்தேன். மிகவும் மகிழ்ச்சி. ஆனால் சம்பந்தம் என்ற தலைப்புதான் சரி என்று எழுதியிருந்ததைக் கண்டேன். மதுரைத் தமிழ்ப் பேரகராதியில் 686-ம் பக்கத்தில் சம்மந்தம்—சம்பந்தம் என்று விளக்கமிருக்கிறது. நல்ல இடத்து சம்மந்தம் தலைப்பு சரிதான் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சேலம்
27-2-58 ஏ. பி. நாகராஜன்

[சம்பந்தம் - சம்மந்தம் என்ற வார்த்தை சம்பந்தமாகத் தங்கள் விளக்கத்துக்கு நன்றி. —ஆசிரியர்]

# கனிவுடைமையே பண்புடைமை

தன்னை மறந்து சிரித்துக் கொண்டிருக்கும் அச் சிறுமி ஒரு நாள் தேவாரம் என்ற இடத்தில் தனது பிஞ்சுக் கரங்களில், ஒன்றில் அரை டிக்கட்டுடனும், மற்றொன்றில் துணி மூட்டையுடனும், கண்கள் கலங்கியபடி எங்கள் பஸ்ஸில் ஏறினாள். அவளை வழி அனுப்ப வந்த தந்தை, ''குழந்தை, விடுமுறை கழிந்து திண்டுக்கல்லிலுள்ள தன் பள்ளிக்குத் திரும்புகிறாள்; அவளை நீங்கள் கவனித்துக் கொள்ள வேண்டு''மெனக் கேட்டுக் கொண்டார். பொங்கி வரும் கண்ணீரிடையே புன்சிரிப்பை வரவழைத்துக் கொண்டு அவள் விடை தந்தாள்.

அன்புடன் இரு கரங்கள் அவளை அழைத்துச் சென்று ஜன்னலருகே அமர்த்தின. வெளியே மின்னலெனத் தோன்றி மறையும் அழகிய கோயில்கள், பசுமையான கிராமங்கள்! அவற்றின் வரலாறுகளை அன்பும், கனிவும் நிறைந்த சொற்களால் கூறக் கேட்டு அச்சிறுமி தன்னை மறந்தாள். பெற்றோரின் பிரிவையும் மறந்தாள். பெற்றோரின் பாசத்திற்கு அப்பாலும் அன்பையும் கனிவையும் காண முடியுமென்பதையும் உணர்ந்தாள்.

இதுபோன்ற மனம் நெகிழும் வழியனுப்புகளையும், பிரிந்தவர் கூடும் ஆனந்தக் காட்சிகளையும் எங்கள் 46 வருட போக்குவரத்துத் தொழிலில் பல தடவை கண்டிருக்கிறோம். நிர்வாகத் திறமை மட்டும் போதாது. கனிவுப் பண்பு வேண்டும் என்பதே எங்கள் அநுபவ படிப்பினை.

கோடிக்கணக்கான பிரயாணிகளை ஏற்றிச் செல்கிறோம். ஆயிரக்கணக்கான பேர்களுக்கு வேலை கொடுக்கிறோம். நாட்டின் பல பாகங்களைச் சங்கிலி போல் இணைத்திருக்கிறோம். ஆயினும் இச்சாதனைகளால் மட்டும் நாங்கள் பெருமை அடைவதில்லை.

''டி. வி. எஸ். ஸ்தாபனம்தான் நம்மை மனிதர்களாகப் போற்றிக் கனிவுடன் கௌரவிக்கிறார்கள்'' என்று எங்கள் பிரயாணி ஒருவர் கூறினார். அவருடைய புகழுரையைத்தான் நாங்கள் பொன்னேபோல் போற்றுகிறோம். எங்கள் சாதனைக்கு அத்தாட்சியாகவும் வணங்குகிறோம்.




**சதர்ன் ரோட்வேஸ்**



## பிரைவேட் லிமிடெட், மதுரை

(டி. வி. எஸ். ஸ்தாபனம்)

# தொழிலாளருக்கு ஒரு நற்செய்தி

—கொழும்பு, பிப்ரவரி மீ 27வ.

ஸ்ரீ எஸ். தொண்டமானைத் தலைவராகக் கொண்ட இலங்கை தொழிலாளர் காங்கிரஸ் செய்த அரும் பெரும் முயற்சிகளின் பயனாக ரப்பர் தேயிலைத் தோட்டங்களில் வேலை செய்யும் லட்சக்கணக்கான இந்தியத் தொழிலாளருக்கு வயோதிக காலத்தில் மாதம் பன்னிரண்டு ரூபாய்க்குக் குறையாமலும் இருபத்தைந்து ரூபாய்க்கு மேற்படாமலும் பென்ஷன் கிடைக்க விருக்கிறது. ஆயுள் முழுவதும் மழையிலும் வெய்யிலிலும் கடுமையாக உழைத்து ஓடாகத் தேய்ந்த இந்தத் தொழிலாளர் வயோதிகமடைந்தால் சப்பியெறிந்த மாங்கொட்டைகளைப் போல் கவனிப்பாரற்ற நிலைமையில் துன்பப்பட்டு வருகிறார்கள். சில தோட்டங்களில் இப்படிப்பட்ட வயோதிகத் தொழிலாளருக்கு ஏதோ பெயரளவில் பென்ஷன் கொடுக்கிறார்களே தவிர அந்தத் தொகை உடலில் உயிர் ஒட்டிக்கொண்டிருக்கப் போதுமானதா யில்லை. தோட்டங்களில் இருக்கும் மற்ற உத்தியோகஸ்தர்களுக்கு பென்ஷன், பிராவிடன்ட் பண்டு, கிராடியுட்டி முதலிய பல சலுகைகள் இருக்கும்பொழுது நாட்டின் பொருளாதாரத்துக்கு முதுகெலும்பைப்போலிருப்பவர்களும் உழைத்துக் கொடுப்பவர்களுமான தொழிலாளருக்கு மட்டும் ஏன் இந்தச் சலுகைகளை அளிக்கக் கூடாதென்று காங்கிரஸ் நீண்ட காலமாகப் போராடி வந்தது.

சென்ற வருட இறுதியில் பென்ஷன் உரிமை உள்பட சில கோரிக்கைகளுக்காக இலங்கை தொழிலாளர் காங்கிரஸ் ஒரு பெரிய வேலை நிறுத்தத்தை நடத்தியது. அந்த வேலை நிறுத்தம் சம்பந்தமான கோரிக்கைகள் கைத்தொழில் கோர்ட்டின் விசாரணைக்குச் சமர்ப்பிக்கப்பட்டிருந்தன. சென்ற வாரம் நடந்த கைத்தொழில் கோர்ட் விசாரணையில் ஸ்ரீ எஸ். தொண்டமான், ஸ்ரீ எஸ். பி. அமரசிங்கம், ஸ்ரீ எம். பி. சுந்தரம் ஆகியவர்கள் தொழிலாளர் சார்பாக ஆஜராகிக் காரசாரமாக விவாதித்ததில் தோட்ட முதலாளிமார் சம்மேளனப் பிரதிநிதிகள் தொழிலாளரின் பென்ஷன் உரிமையை ஒப்புக் கொண்டனர். ஓய்வு பெறும் தொழிலாளருக்கு மாதந்தோறும் பன்னிரண்டு ரூபாய்க்குக் குறையாமலும் இருபத்தைந்து ரூபாய்க்கு மேற்படாமலும் பென்ஷன் கொடுக்க ஒரு தற்காலிக உடன்பாடு ஏற்பட்டது. இந்த உடன்பாட்டைச் சம்மேளன நிர்வாக சபை ஊர்ஜிதம் செய்தவுடன் அதை அனுசரித்துக் கைத்தொழில் கோர்ட் தனது தீர்ப்பை வெளியிடுவதென்று முடிவாகி யிருக்கிறது. இந்த ஏற்பாடு வேலை நிறுத்தத்தில் சம்பந்தப்பட்ட தோட்டங்களுக்கு மட்டும் தானென்றாலும் பென்ஷன் கோரிக்கையைக் கொள்கையளவில் முதலாளிமார் சம்மேளனம் அங்கீகரித்தபின்னர் சகல தோட்டங்களிலும் இது கடைப்பிடிக்கப்படுமென்று திரு தொண்டமான் கூறினார்.

*  *  *

யாழ்ப்பாணத் தமிழன்பர்கள் எந்தக் காரியத்தைத் தொட்டாலும் குறையின்றிச் சிறப்பாக நடத்தி முடிப்பதில் பெயர் பெற்றவர்கள். இதற்கு ஒரு உதாரணமாக விளங்கியது வட இலங்கைச் சங்கீத சபையார் யாழ்ப்பாணம் திருநெல்வேலி இந்து வாலிபர் சங்க மண்டபத்தில் மூன்று தினங்கள் வரையில் அற்புதமாக நடத்திய தியாகராஜ சுவாமிகளின் உற்சவம். இந்த மூன்று தினங்களிலும் மண்டபத்தில் இசைமாரி பொழிந்தார்கள். ஒவ்வொரு நாளும் ஏழெட்டுக் கச்சேரிகள். ஈழத்துக் கலா மேதைகளின் திறன் நன்கு பரிமளிக்கக் கூடிய விதமாக இந்த உற்சவம் அமைந்திருந்தது பெரிதும் பாராட்டத் தகுந்தது. இதுபோன்ற சங்கீத விழாவுக்கு அடிக்கடி ஏற்பாடு செய்தால் இளம் பாடகர்களுக்கு ஊக்கமளிப்பதாயிருப்பதோடு சங்கீதக் கலை இந் நாட்டில் மேலான முறையிலே அபிவிருத்தியடையவும் உதவியாயிருக்கும்.

தியாகப் பிரும்ம உற்சவத்தைப் பலரும் மெச்சும் வண்ணம் நடத்திய வட இலங்கை சங்கீத சபையின் தலைவர் திரு எஸ். யு. சோமசேகரம், காரியதரிசியான கலையரசு கே. சொர்ணலிங்கம் ஆகியவர்களின் பெரும் முயற்சியைப் பாராட்ட வேண்டும். — ரஜனி

# வாழ்க மணமக்கள்



இலங்கை திரு என். தெம்பரம் பிள்ளை
· யின் புதல்வி சரோஜா தேவிக்கும் திரு டி.
நவரத்தினத்துக்கும் மட்டக்களப்பில் திரு
மணம் வெகு சிறப்பாக நடந்தேறியது.



பம்பாய் ஷிப்பிங் டெபுடி டைரக்டர்
ஜெனரல் திரு என். வி. கைலாசபதி அவர்
களின் குமாரி கோமதியைத் திரு வெங்க
டேசுவர் மணந்து கொண்டார்.



திரு ஆர். நரசிம்மன் புதல்வி திருமதி
வஸந்தாவுக்கும் திரு கே. ராமசுவாமிஅய்
யங்கார் புதல்வர் திரு ஆர். சம்பத்துக்கும்
மயிலாப்பூரில் விவாகம் நடந்தேறியது.



விழுப்புரம் திரு பி. ஆர். கிருஷ்ணமாச்சாரி
யாரின் புதல்வி வாரிஜாவுக்கும் திரு எஸ்.
ராகவனுக்கும் சிங்கப்பெருமான்கோவிலில்
சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.



பூந்தோட்டம் டாக்டர் எஸ். வைத்திய
நாதனுக்கும் பாவட்டக்குடி திரு வெங்கட
ராமய்யர் புதல்வி சரோஜாவுக்கும் மாய
வரத்தில் திருமணம் நடந்தது.



கந்தவடி திரு ராதாகிருஷ்ணன் செட்டி
யார் அவர்களின் புதல்வி நாகரத்தி
னம்மாவுக்கும் திரு கோபால செட்டிக்கும்
சென்னையில் திருமணம் இனிது நடந்தது.




# மண மாலை

காந்தன்

படத்தில் தோன்றும் காதல் அதி சீக்கிரம் வளர்ந்து விடும்; பூர்த்தியடையும் தருணத்தில்தான் அந்தக் காதலுக்குத் தடைகளும் இடைஞ்சல்களும் ஏற்பட்டு, 'இடைவேளை'க்குப் பிறகும் படத்தைப் பார்க்க வேண்டும் என்னும் எண்ணத்தைத் தூண்டி விடுவது தமிழ்ப் படத்தில் கையாளும் வழக்கம்.

ஆனால் ஜனதா பிக்சர்ஸ் அளிக்கும் "மணமாலை" ஓர் அதிசயமான படம். லலிதாவுக்கும், சேகருக்கும் அவர்களையும் அறியாமல், காதல் உண்டாகிறது. ஆனால், அவர்கள் காதல் பூர்த்தியாவதற்குத் தடையாக இருந்தது என்ன என்பது நமக்குப் புரியவில்லை. சின்னஞ்சிறு வயதில் இனந் தெரியாப் பருவத்தினரா யிருந்தால் அவர்களை மணமாலையின் மகத்துவம் அறியாதவர்களாக நினைக்கலாம்.

பழனியில், ஒரே பெண் லலிதாவை அநாதையாக விட்டு விட்டு, சுப்பிரமணிய முதலியார் கண்ணை மூடி விடுகிறார். லலிதாவின் தாய் மாமன் குருசாமி அவளைச் சென்னைக்கு அழைத்து வர, பக்கத்து வீட்டுப் பணக்காரர் சதானந்தத்தின் மகன் சேகரிடம் லலிதா ஓய்வு நேரத்தில் படிக்கிறாள். குருசாமி சதானந்தத்திடம் கடன் வாங்கி விட்டு அவதிப்படுகிறான். எதிர் வீட்டுக்கு வந்த பணக்கார வாலிபன் குமார் குருசாமிக்குப் பண உதவி செய்து காப்பாற்றுகிறான். ஒருநாள், லலிதா விளையாட்டாக, பொம்மைக் கல்யாணத்துக்குத் தயாரித்த மாலையைச் சேகருக்குச் சூட்டுகிறாள்; சேகர் அதையே அவளுக்குச் சூட்டுகிறான். குமாருடன் லலிதா பழகுவது சேகருக்குப் பிடிக்கவில்லை; பொறாமையை உண்டாக்குகிறது. அந்தப் பொறாமைத்தீயின் மத்தியில் லலிதாவிடம் தன் உள்ளம் அவனையும் அறியாமல் ஈடுபட்டு விட்டதை உணர்கிறான்.

ஆனால், படத்தில் அந்தக் கருத்து சரியாக உருவாகி வளரவில்லை.

லலிதாவும் குமாரும் நெருங்கிப் பழகுவதை விரும்பாத சேகர் அவளைக் கண்டபோதெல்லாம் எரிந்து விழுகிறான். குருசாமி, லலிதாவைக் குமாருக்குக் கொடுப்பதென்று தீர்மானித்த விஷயம் தெரிய வந்ததும் சேகர் குருசாமியிடம் தன் எண்ணத்தை என்ன காரணத்தினால் வெளியிடவில்லை? லலிதாவை மணந்து கொள்ளத் தன் தகப்பனாரிடம் ஏன் அனுமதி பெற முயலவில்லை? ஒருவேளை, அவரிடமுள்ள பயம் காரணமாக அனுமதி பெற முயலவில்லை என்றால் தகப்பனார் சதானந்தம் காலமான பின்பாவது சேகர் லலிதாவை மணந்து கொள்ளும் எண்ணத்தைத் தாயாரிடம் தெரிவித்திருக்கலாமே! லலிதாவுக்கும் குமாருக்கும் திருமணம் என்று கேள்வியுற்றதும் வீட்டு மாடியில் ஆத்திரத்துடன் உலாவுவதைத் தவிர, சேகரால் ஒன்றும் செய்ய முடியாதது அதிசயமாகத்தான் இருக்கிறது! லலிதாவிடமாவது தன் உள்ளத்தைத் திறந்து காட்டி, அவளைத் தான் மணக்கப் போவதைக் கூறியிருக்கலாம். அதுவும் இல்லை. ஆனால் கோடைக்கானலுக்குப் போன சேகர் தன் காதலி லலிதாவை நினைந்து உருகுகிறான். அதே போல, தன் மாமாவுடனும் குமாருடனும் நீலகிரிக்குப் போன லலிதா தன் உள்ளக் காதலன் சேகரை நினைந்து நினைந்துகரைந்து போகிறாள்.

"மணமாலை" படத்தின் கதாநாயகன் ஜெமினி கணேசன் என்றும், கதாநாயகி சாவித்திரி என்றும் அறிந்ததும் நிச்சயம் அவர்கள் காதல் பூர்த்தியாகாமற் போகாது என்று தீர்மானித்துக் கொண்டேன்!

சத்திரம், சாவடிகளிலும் பெரிய ஹோட்டல்களிலும் ஏராளமான யாத்திரிகர்கள் வருவதுபோல் இந்தப் படத்திலும் ஏராளமான பாத்திரங்கள் வருகின்றனர். சத்திரம்,

சாவடிகளில் வரும் யாத்திரிகர்கள் யார், எவர் என்று எப்படிக் கண்டுபிடிக்க முடியாதோ அதேமாதிரி இந்தப் படத்தில் நடிப்பவர்களையும் கண்டுபிடிக்க முடியவில்லை. இவர் ஏன் வருகிறார்? என்னத்துக்காக வருகிறார்? கதையில் இவருக்கு என்ன சம்பந்தம்? இந்தப் பாத்திரம் கதைக்கு அவசியம்தானா? இப்படிப் பல கேள்விகள் தோன்றுகின்றன. ஆனால் பதில்தான் கிடைக்கவில்லை.

சம்பந்தமில்லாத பாத்திரங்களைப் போலவே இந்தப் படத்தில் ஒன்றுக்கொன்று சம்பந்தம் இல்லாத சம்பவங்கள் நிறைய வருகின்றன.

குமார் தன் சகோதரி யமுனாவின் பெண் சாரதாவை மணக்க விரும்பவில்லை. அவன் தன் நண்பன் ஜோக்கர் என்னும் அரைப் பைத்தியத்தை அவர்கள் வீட்டில் தங்கியிருக்க ஏற்பாடு செய்கிறான். சாரதாவும் ஜோக்கரும் ஆடிப் பாடி மகிழ்கின்றனர்.

ஜோக்கர் பாத்திரத்தை ஏற்றிருப்பவர் சந்திரபாபு. அவர் மாத்திரம்தான் நடித்தார் என்று சொல்லுவது தவறு. அவர் அணிந்திருந்த மூக்குக் கண்ணாடியும் அடிக்கடி நழுவிப் பிரமாதமாக நடித்திருக்கிறது. சாரதாவாக நடிப்பவர் மைனாவதி. கவர்ச்சியுள்ள முகமும், எடுப்பான அங்கங்களும் உள்ள இவர் தாம் ஏற்ற பாகத்துக்கு ஏற்ற முறையில் நடித்திருக்கிறார்.

ஆனால், கதையோடு அந்த நிகழ்ச்சி ஒட்ட வில்லையாதலால், தயிர் சாதத்தில் விழுந்த திராட்சைப் பழத்தைப் போல், தன் சொந்தருசியையும் இழந்து திரைக் கதையின் ருசியையும் கெடுக்க முயல்கிறது.

குருசாமியின் மகள் அநுராதாவின் பொம்மைக் கல்யாணமும், அவளது பேச்சும் நன்றாயிருந்தாலும் கதையோடு சேராத சம்பவமாகவே போய் விடுகின்றன.

லலிதாவாக நடிக்கும் சாவித்திரி குறை சொல்ல இடம் இல்லாமல் நன்றாய் நடித்திருக்கிறார். இந்தப் படத்தில் இவருக்கு விசேஷ ஆடை ஆபரண அலங்காரங்கள் இல்லை. அது இயல்பான நடிப்புக்கு நல்ல சந்தர்ப்பத்தை அளிக்கிறது.

சேகருக்கு இப்படத்தில் அதிக வேலையில்லை. ஜெமினி கணேசன் அந்தப் பாகத்தை ஏற்று விவரம் தெரியாமல் அணிந்த மணமாலைக்கு மதிப்புக் கொடுக்கிறார்.

நிறையப் பெண்களைப் பெற்று, போதிய வருவாயின்றி, கடன்பட்டு, வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்க வழியின்றி அவதிப்படும் குமாஸ்தா பாகம் நாகையாவுக்கு என்றும் புதிதல்ல. அந்தப் பாகத்தை ஏற்று, அவர் ஏற்கனவே பல இடங்களில் நடித்துப் பண்பட்டிருக்கிறார். கடன் கொடுத்தவனின் ஏச்சுக்கும் பதில் பேசப் பேசும்போது நாகையா உணர்ச்சி பொங்கப் பேசி, உயர்வாக நடித்திருக்கிறார்.

சேகரின் தாயாகவரும் எஸ். டி. சுப்புலக்ஷ்மி திரைப்பட வானில் ஒளிர்ந்த ஆதி நட்சத்திரம். அநுபவத்தோடு இயல்பாக நடிக்கிறார். ஆனால், அவரும் திரைக்கதைக்குச் சிறிதும் தேவையில்லாத பாத்திரம்.

படத்தின் ஆரம்பத்தில் வரும் பழனி மலைக் காட்சியைக் கண்டு கன்னத்தில் போட்டுக் கொள்ளத் தோன்றினாலும், அது படத்துடன் சம்பந்தம் இல்லாதது என்பதை நினைக்கும் போது அந்தக் காட்சியைப் பிடித்துக் கன்னத்தில் அறையத் தோன்றுகிறது!

குமாராக வரும் ஸ்ரீராம் நல்லவனாக வந்து நலுங்காமல் போய் விடுகிறார்.

மதுரை எஸ். வி. சுந்தரம் குழுவினரின் காவடி நடனம் மிகவும் நன்றாயிருக்கிறது. அப்பொழுது கேட்கும் சீர்காழி கோவிந்தராஜனின் இசையும் இனிமையா யிருக்கிறது.

ராகினி, 'நடனமாடினார்' என்ற பாட்டுக்குப் பிடிக்கும் அபிநயம் அற்புதமா யிருக்கிறது. ராகினியுடன் சுகுமாரியும் சேர்ந்து பொருத்தமாக நடனமாடுகிறார்.

கோவலன் நகைச்சுவை இசை நாடகத்தில் தங்கவேலு மாதவியாகவும் சந்திரபாபு கோவலனாகவும் நடிக்கிறார்கள். நாடகம் ஒரே கலாட்டாவாக இருக்கிறது.

பெண்கள் தாயக்கட்டம் ஆடுவது கலகலப்பா யிருக்கிறது.

திரு விந்தன் ''மணமாலை''க்கு வசனம் எழுதி யிருக்கிறார். மூலக்கதை பிரபல நாவலாசிரியரான சரத்சந்திரருடையது.





1. பிப்ரவரி மாதம் 20ந் தேதி சென்னைத் தமிழ் எழுத்தாளர் சங்கச் சார்பில் ரஸிகமணி டி. கே. ஸி. ; வையாபுரிப் பிள்ளை நினைவுநாள் கொண்டாடப்பட்டது. ராஜாஜி மண்டபத்தில் நடைபெற்ற இந்த விழாவுக்குச் சங்கத் தலைவர் திரு வெ. சாமிநாத சர்மா தலைமை தாங்கினார். திரு தெ. பொ. மீனாட்சிசுந்தரம், திருமதி சௌந்தரம் கைலாசம், திரு கி. வா. ஜகந்நாதன், திரு மீ. ப. சோமசுந்தரம் ஆகியோர் இரண்டு தமிழறிஞர்களைப் பற்றியும் பேசினர். சங்கக் காரியதரிசி திரு ராஜகோபாலன் நன்றி கூறினார்.

2-3. எம்.சிடி. எம். சிதம்பரம் செட்டியார் ஞாபகார்த்தப் பயிற்சிப் பள்ளியின் நான்காவது ஆண்டுவிழா பிப்ரவரி 17ந்தேதி நடைபெற்றது. இந்த விழாவுக்குச் சபாநாயகர் டாக்டர் யு. கிருஷ்ணராவ் தலைமை வகித்தார். பள்ளித் தலைவி திருமதி ஜி. சாந்தா ஆண்டு அறிக்கை வாசித்த பின் விழா ஆரம்பமாயிற்று. விழாவில் நடந்த கதம்ப நிகழ்ச்சியில் சிறுமிகள் காயத்ரியும் ராதாவும் ஆடிய ராதா கிருஷ்ண நடனம் எல்லாருடைய கருத்தையும் கவர்ந்தது.

4. மாயூரம் நகரசபை உயர்நிலைப்பள்ளியில் ஸ்ரீ ஓய். மகாலிங்க சாஸ்திரி அவர்களுக்கு 'ஞானபாஸ்கர' என்ற விருதையும் சால்வையையும் மாயூர மக்கள் சார்பாக டாக்டர் சி.பி. ராமசாமி ஐயர் வழங்கிப் பாராட்டினர்.



# ஆப்கன் அரசர் ஜாஹிர் ஷா

எம். எஸ். சிவஸ்வாமி

பாரதப் பிரதமர் நேரு கடைப்பிடிக்கும் அந்நிய நாட்டுக் கொள்கை நமக்கு மேல் நாடுகளிலும், மத்தியிலுள்ள அரபு நாடுகளிலும் ஆசியாவிலும் அளவுகடந்த செல்வாக்குத் தேடித் தந்திருக்கிறது. பல நாடுகளின் நட்பைத் தேடித்தந்திருக்கிறது. அப்படிக் கிடைத்த அருமையான நட்புகளில் ஆப்கானிஸ்தானத்தின் நட்பை முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். அந்த நட்பின் காரணமாக ஆப்கான் மன்னர் ஜாஹிர்ஷா இந்திய மக்களை நேரில் அறிந்து கொள்ள பாரத நாட்டுக்கு விஜயம் செய்திருக்கிறார்.

* * *

மகுடம் தரித்த மன்னனின் மனம் சதா நிம்மதியற்றுக் கலங்கியவண்ணமே இருக்கும் என்று ஆங்கிலக் கவி ஷேக்ஸ்பியர் ஓரிடத்தில் சொன்னார். அவருக்கு ஆப்கானிஸ்தானத்தைப் பற்றி அதிகம் தெரிந்திருக்காதென்றே நினைக்க வேண்டும். தெரிந்திருந்தால் 'மகுடம் தரித்த ஆப்கானிய மன்னரின் மனம்' என்று தம் கருத்தை மாற்றிச் சொல்லியிருப்பார்.

ஆப்கானிஸ்தானத்தின் மன்னராகக் காபூல் அரண்மனையிலிருந்து ஆட்சி புரிவது அவ்வளவு கடினம். அங்கே அரசு புரிந்தால் மட்டும் போதாது. தம் பதவியையும் உயிரையும் கூடவே பாதுகாத்துக் கொள்ள வேண்டும். அதற்கு வேண்டிய தற்காப்புடனும் ஜாக்கிரதையுடனும் இருக்கவேண்டும். உள்நாட்டுக் கலகங்கள் திடீர் திடீரென்று நிகழும். நண்பர்களாக இருந்தவர்கள் நொடிப்பொழுதில் பகைவர்களாக மாறி விடுவார்கள். நம்பிக்கை வாய்ந்த ஊழியர்களே நமனாக ஆவார்கள். உருவின கத்தியுடன்தான் உறக்கம்கூடக் கொள்ள வேண்டும். எச்சரிக்கைக் குறைவினால் உயிர் துறந்த மன்னர்கள் பல. அவ்வளவு என்ன, ஒரு மன்னர் கொல்லப்பட்டுத்தான் மற்றொருவர் பதவிக்கு வருவது என்பதே ஏறக்குறைய ஒரு சம்பிரதாயமாகவே கருதப்பட்டது.

நாடு அப்படிப்பட்டது. மலைப்பிரதேசம். மக்களும் நிலையற்று வாழ்ந்தனர். 130 லக்ஷம் தான் ஜனத்தொகை. அதில் 20 லக்ஷம் பேர்கள் நிலையில்லாமல் நாடோடிகளாக ஜீவிப்பவர்கள். கால்நடைகளைப் பராமரித்து அவற்றைக் கொண்டு வாழ்க்கை நடத்துபவர்கள். பனிக்காலங்களில்தான் சமவெளிப் பிரதேசத்துக்கு இறங்கி வருவார்கள். வெய்யில் காலங்களில் மலைச்சரிவுகளில்தான் காலங்கழிப்பார்கள். சமவெளிப் பிரதேசத்திலிருக்கும் 110லக்ஷம் மக்கள் விவசாயத்தில் ஈடுபட்டிருப்பவர்கள். அவர்களுக்குக் குறைந்த வருவாய்தான் கிடைக்கிறது. வறுமையில் உழன்று கொண்டுதான் வாழ்க்கை நடக்கிறது.

வறுமையில் வாடினாலும் சுதந்திர உணர்ச்சி மிக்கவர்கள். துப்பாக்கியைக் கையாளுவதில் பழக்கப்பட்டவர்கள். பல படையெடுப்புகளில் பங்கு கொண்டு பரம்பரையாகவே கலகத்திலும், போரிலும் காரணத்துடனோ காரணம் இல்லாமலோ ஈடுபட்டு வளர்ந்தவர்கள். எல்லைப்புறங்களில் வல்லரசுகள் சூழ்ந்த நாடு.

இப்படிப்பட்ட ஒரு பிரதேசத்தை 1933-ம் ஆண்டிலிருந்து இருபத்தைந்து வருஷங்களாகக் கலவரமின்றி, சச்சரவுகளின்றி, எதிர்ப்புகளில்லாது, அமைதியாக ஒரு மன்னர் ஆண்டு வருகிறார் என்றால் அவருடைய குணாதிசயங்களும் சாமர்த்தியமும் மிக உயர்வாகவே மதிக்கப்பட வேண்டும். அத்தகைய மன்னர்தான் இப்போது இந்தியாவுடன் நட்புக் கொண்டு சுற்றுப் பிரயாணம் செய்து கொண்டிருக்கும் ஆப்கானிய மன்னர் ஜாஹிர்ஷா.

இதற்கு முன் ஆப்கானிஸ்தானத்தில் அரசு புரிந்த மன்னர் நாதர்ஷாவின் புதல்வர். 1914-ம் ஆண்டு அக்டோபரில் பிறந்தார். தமக்குப் பத்து வயதாக இருக்கும்போதே தந்தையாருடன் பிரான்சுக்குச் சென்று ஆறு வருஷங்கள் கல்வி பயின்றார். அப்பொழுதெல்லாம் உயர் படிப்புக்காக ஆப்கானிய மேன் மக்கள் ஐரோப்பியத் தலைநகரங்களுக்குத்தான், முக்கியமாக பாரிஸுக்குத்தான் செல்வது வழக்கம். அரச குடும்பத்தினர் அங்கு சென்றதில் வியப்பில்லை.

தந்தை நாதர்ஷா அந்தச் சமயம் ஆப்கானிஸ்தானத்தின் பிரதிநிதியாக அங்கே பதவி வகித்து வந்தார். அது மன்னர் அமானுல்லா ஆட்சி புரிந்த காலம். அம்மன்னரின் கீழ் நாதர்ஷா தளபதியாகச் சேவை புரிந்தவர். ஆங்கிலேயர்களின் ஆதிக்கத்தை உதறித் தள்ளுவதற்காக நிகழ்ந்த ஆப்கானிய சுதந்திரப் போரில் ஆப்கானிய ராணுவத்துக்குத் தலைமை தாங்கி, "தால்" என்னுமிடத்தில் ஆங்கிலேயத் துருப்புக்களைத் தோல்வியுறச் செய்து சுதந்திர ஆப்கானிஸ்தானத்தை உருவாக்கியவர் தளபதி நாதர்ஷா. மக்களிடம் அன்பு மிகுந்தவர். அவர் துரானி வம்சத்து ராஜ குடும்பத்தைச் சேர்ந்தவராயினும் மக்களுடன் கலந்து பழகும் குணமுள்ளவர். ராஜ விசுவாசமுள்ளவர். தளபதி என்னும் விருதுடனேதான் பாரிஸில் பணிபுரிந்து வந்தார்.

1930-ம் ஆண்டு. அப்போதுதான் ஆப்கானிஸ்தானத்தில் ஒரு விசித்திர நிகழ்ச்சி நடந்தது. அரசர் அமானுல்லா வெளிநாடுகளுக்குப் போயிருந்த சமயம். பச்சா ஸாகோ என்னும் ஊர்பேர் தெரியாத ஒருவன் பலாத்காரமாக அரசுரிமையைக் கைப்பற்றி, காபூல் சிம்மாசனமேறி அரசு செலுத்தத் தலைப்பட்டான். நாட்டில் குழப்பங்களும் கலகங்களும் மிகுந்து அமைதி குலைந்தபோது பாரிஸிலிருந்த தளபதி நாதர்ஷாவுக்குச் செய்தி அனுப்பி நாட்டுக்குத் தருவிக்கப்பட்டார். அவரும் விரைந்தோடி வந்தார். வரும்போது பணத்துடன் வரவில்லை. பரிவாரங்களுடனும் வரவில்லை. சைன்யத்துக்குத் தலைமைதாங்கியும் வரவில்லை. தனியாகத்தான் உடல்நலம் குன்றிய நிலையில் வந்தார். ஆனால் அவருக்குத் துணைபுரிந்தது அவருடைய மனோ தைரியமும், மக்கள் அவரிடம் வைத்திருந்த நம்பிக்கையும்தான். விரைவிலேயே கலகங்களை அடக்கி, பாச்சா ஸாகோவை



ஆப்கன் மன்னர் ஜாஹிர்ஷா புதுதில்லி விமான நிலையத்தில் வந்து இறங்கியவுடன் பாரத நாட்டின் தலைவர்கள் உற்சாகமாக வரவேற்றனர்.

விரட்டியடித்து, அமைதியை நிலைநாட்டினார். இரண்டாவது முறையாக நாட்டைப் பாதுகாத்த பெருமை தளபதி நாதர்ஷாவைச் சேரும். அவருடைய அபாரத் திறமையைப் பாராட்டி மக்கள் ஆங்காங்கு ''ஜிர்காக்கள்'' கூடி அவரையே அரசராக நியமித்தார்கள். இவ்வாறு தளபதி நாதர்ஷா மக்கள் அங்கீகாரம் பெற்று ஜனநாயக முறைப்படியே மன்னர் நாதர்ஷாவாக ஆனார்.

அவ்வளவு பெருமை வாய்ந்தவரைத் தந்தையாகப் பெற்றவர் ஜாஹிர்ஷா. மூன்று வருஷங்களே அரசு புரிந்து விரோதியின் வாளுக்கிரையாகி நாதர்ஷா உயிர் துறந்தார். அவருக்குப் பின் 1933ம் ஆண்டில் பட்டத்துக்கு வந்த ஜாஹிர்ஷா, தந்தையின் குணாதிசயங்களனைத்தையும் ஒருங்கே பெற்றவர். அவருடைய சாமர்த்தியமும், ராஜதந்திரமும் இவருக்கும் பூரணமாக உண்டு. ராணுவத்தில் மன்னர் ஜாஹிர்ஷாவுக்குத் தனியான ஆர்வமும் அக்கறையுமுண்டு. முக்கியமாக விமானப் பகுதியில் கவனமுள்ளவர். பிரஞ்சு மொழியும் ஆங்கிலமும் நன்கு பேசத் தெரிந்தவர். பிரான்சிலிருந்து 1930-ம் ஆண்டு படிப்பை முடித்துக் கொண்டு காபூல் திரும்பினார். ராணுவ சம்பந்தமான முறைகளைக் கற்கக் காபூலிலுள்ள ராணுவக் கல்லூரியில் சேர்ந்து பட்டம் பெற்றவர். 1932-ம் ஆண்டில் அரசாங்கத்தில் உதவி யுத்த மந்திரியாக நியமிக்கப்பட்டார். இப்பதவி மற்றைய நாடுகளில் பாதுகாப்பு இலாகா மந்திரி ஸ்தானத்துக்கு ஒப்பானது.

சொந்தக் கல்வியினாலும் அரசாங்க அலுவல் அனுபவங்களாலும் தந்தை நாதர்ஷாவிடமிருந்து இளம் பிராயத்திலிருந்தே பழகித் தெரிந்து கொண்ட அரசியல் நுணுக்க அறிவாலும், பாரிஸ் நாகரிகப் பண்பாட்டின் சிறப்பாலும், மன்னர் ஜாஹிர்ஷா மக்களின் உள்ளங்களைக் கவருவதில் இணையற்று விளங்குகிறார். ஏழைகளானாலும் பணக்காரரானாலும் இவரிடம் வித்தியாசமின்றி நடத்தப்படுவர் என்ற பாராட்டுதலைப் பெற்றவர். தாம் ஒரு ஆப்கானியர் என்னும் உணர்ச்சியுடன் செயல் புரிபவர். அதில் பெருமிதம் கொண்டு நாட்டின் கௌரவத்தை உயர்த்தியிருக்கிறார்.

இவருடைய முற்கால முன்னேற்றத்துக்குத் தந்தைக்கு அடுத்தபடியாக உதவியாக இருந்தவரில் இவரது உறவினர் அஹமத்ஷாவைத்தான் சொல்ல வேண்டும். மக்களிடம் இவர் அடைந்துள்ள செல்வாக்குக்கு அவர்தான் காரணம். அவருடைய பெண் உமைராவை 1932-ம் ஆண்டில் மணந்து கொண்டார். இவருக்கு நான்கு புதல்வர்களும் இரண்டு புதல்விகளும் இருக்கிறார்கள்.

தற்கால சுதந்திர ஆப்கானிஸ்தானத்துக்கு அஸ்திவாரம் அமைத்துத் தந்தவர் மன்னர் நாதர்ஷா. அதன் மீது அழகான கட்டடமாக எழுப்பிக் கொண்டிருக்கிறார் மன்னர் ஜாஹிர்ஷா. உலக வல்லரசுப் போராட்டத்தில் சிக்கிக் கொண்டால் நாட்டு நலனுக்குக் கேடு விளையும் என்று உணர்ந்த அவர் இரண்டாவது யுத்த காலத்திலும், அதன் பிறகும் தனித்து இயங்கும் கொள்கையையே பின்பற்றி வருகிறார். அதில் வெற்றியும் அடைந்திருக்கிறார். பாகிஸ்தானத்துடன் பாக்துனிஸ்தான் சம்பந்தமாகச் சில கருத்து வேற்றுமைகள் உள்ளன. ஆனால் சமீபத்தில் அவருக்குக் கராச்சியில் கிடைத்த உபசாரங்களிலிருந்து நல்லுறவு ஏற்பட்டிருக்கலாம் என நம்ப இடமிருக்கிறது. பாக்தாத் ஒப்பந்த நாடுகளில் ஆப்கானிஸ்தானத்தையும் ஒன்றாக ஆக்கிவிட வேண்டும் என்று அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கு ஆர்வம் அதிகம். அணுசக்தி ஆயுதங்களையும் தளவாடங்களையும் காபூல், காண்டஹார், ஹீரட் முதலிய இடங்களில் சேமித்து வைக்க வாய்ப்பு கிடைத்தால், அவர்கள் சந்தோஷமே கொள்ளுவர். ஆனால் ஆப்கானிஸ்தானம் அதற்கு இடமளித்திருப்பதாகத் தெரியவில்லை. எழுநூறு மைல் பரப்பை ரஷ்யாவுடன் எல்லையாகக் கொண்டுள்ள ஆப்கானிஸ்தானத்தை அவ்வளவு சுலபமாக இணங்க வைக்க முடியாது.



# Pluto is puzzled



தென்றல் வீசும்போது கிராம மக்கள் அதன் தாரதம்யத்தை நன்கு சொல்லுவதுபோல் விமான நிலையத்தின் செல்லமாக வளரும் புளூடோ விமானங்களைக் கண்டுபிடிப்பதில் பழக்கப்பட்டுள்ளது. வைக்கிங், டகோடா ஸ்கைமாஸ்டர், ஹீரான் முதலிய விமான ரகங்களை மிக எளிதில் கண்டுகொள்ளும். ஆனால் அதுவும் தற்போது தடுமாற்றமடைகிறது. அது இதற்கு முன் வைகௌண்ட் விமான சத்தத்தைக் கேட்டதில்லை.

பிஸ்டன் என்ஜின்களின் கர்ஜனை சத்தத்தைக் கேட்டுப் பழகிய நமக்கு வைகௌண்டின் சப்தம் இனிமையாக இருக்கிறது. விமான சவாரியிலே ஒரு புரட்சிகரமான மாறுதலை உண்டாக்கி, பாரத நாட்டிலே ஜெட் என்ஜின் சகாப்தத்தைத் துவக்குகிறது. சத்தம், அசைவு முதலியவை இல்லாமல் காற்றுமண்டலத்துக்கு மேலே அதிக வேகமாகப் பறந்து செல்வதால் களைப்பற்ற விமான சவாரியைத் தருகிறது. பிரயாணிகளின் அதிகப்படியான சௌகரியத்திற்காக, காபின் முழுவதும் பிரஷரைஸ் மற்றும் ஏர்கண்டிஷன் செய்யப்பட்டு சத்தம் உள்ளே கேட்காதவாறு அமைக்கப்பட்டுள்ளது. கீழே அழகான காட்சிகளைக் காண்பதற்கு சௌகரியமாக பெரிய ஜன்னல்கள் பொருத்தப்பட்டுள்ளன. நீங்கள் இப்பொழுது இந்தப் புதிய விமானப் பிரயாணத்தின் சௌகரியங்களைக் கீழ்க்கண்ட சர்விஸ்களில் அனுபவிக்கலாம்.

டெல்லி — கல்கத்தா ; கல்கத்தா — ரங்கூன்
டெல்லி — பம்பாய் ; பம்பாய் — கராச்சி மற்றும்
பம்பாய் — மதறாஸ் — கொழும்பு



இ. ஏ. ஸி.யின் இதர பிரதான மார்க்கங்களில் வைகௌண்ட் சர்வீஸ் கூடிய சீக்கிரத்தில் விஸ்தரிக்கப்படும்.

**இந்தியன் ஏர்லைன்ஸ் கார்ப்பொரேஷன்**



# அழகு மிகுந்த நீண்ட அடர்ந்த கூந்தலுக்கு

# பாமாலிவ்

## பெர்ப்யூம்ட் கோகோனட் ஹேர் ஆயில்








குடும்ப முழுவதிற்கும் மிக்க உகந்தது!

பெரிய எகானமி அளவு புட்டியினால் பணம் மிச்சமாகிறது! மூன்று வித விருப்பான வாசனைகளில் கிடைக்கும்.

லவண்டர்
மல்லிகை
ரோஜா

---



# பாவுபேரி பெனிபிட் சிட் பண்டு

## (பிரைவேட்) லிமிடெட்

ரு. சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி
தபால் பெட்டி நெ. 414 ... ம த ரா ஸ் - 5
தந்தி: 'EVERMANS' ... போன்: 85834

சேரக் கடைசி தேதி 12-3-1958 — முதல் ஏலத் தேதி 14-3-1958

| 25 மாதங்கள் | மாதாந்திர சீட்டுகள் (2-வது வெள்ளிக்கிழமை ஏலங்கள்) | 25 அங்கத்தினர்கள் |
|---|---|---|

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |
| D | ரூ. 25/- | ரூ. 625/- | G | ரூ. 10/- | ரூ. 250/- |

*விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது*

(போர்டார் உத்திரவுப்படி) — எம். வி. சுப்பிரமணியம், மானேஜிங் டைரக்டர்

# எங்கள் சேவை உங்களுக்குத் தேவை

| டெல்லி கிளை ஆபீஸ்: B. 6, பிளாக் III ஆஸப் அலி ரோடு, புது டெல்லி-1 | பெங்களூர் கிளை ஆபீஸ்: "ஜெனரல் பில்டிங்ஸ்" விக்டர் ஜூபிலி பார்க் ரோட், பெங்களூர்-2 | பம்பாய் கிளை ஆபீஸ்: "விஜயவிஹார்" 17-A, லமான்-மாதுங்கா எஸ்டேட் (கிங்ஸ் ஸர்க்கிள் ரெயில்வே ஸ்டேஷனுக்கு எதிரில்) பம்பாய்-22 |
|---|---|---|

# பாவை விளக்கு

## அத்தியாயம் 22

## கல்லோவியத்தில் சொல்லோவியன்

"மனித மனத்தின் ரகசியங்கள் முழுவதையும் இன்னும் மனோதத்துவ ஆராய்ச்சி முறைப்படி விளக்க முடியவில்லை. கற்பனையாளர் சிலரிடம் ஏதோ ஒரு அபூர்வ சக்தி மறைந்து கிடக்கிறது. வெளித் தோற்றத்தை ஊடுருவி, மற்றவர்களுக்குப் புலப்படாத சில விந்தைக் காட்சிகளைக்கண்டு அவர்கள் ஆவேசங் கொள்ளுகிறார்கள்."
— விஞ்ஞான நூல்

'தாஜ்மஹாலைக் கண்டுவிட்டுத் தணிகாசலம் ஏன் அப்படிப் பைத்தியக்காரத்தனமாக நடந்து கொண்டான்?' என்று கேட்பவர்களுக்கு, மேற்கண்ட, விஞ்ஞானத்தின் முற்றுப் பெறாத ஆராய்ச்சியைத்தான் சமாதானமாகச் சொல்ல முடியும்.

தாஜ்மஹால், தணிகாசலத்தைப் பொறுத்த மட்டில் கந்தர்வலோகமில்லை பளிங்குக் கனவில்லை: மயன் படைப்புக்கு ஒப்பான 'அற்புத மாளிகையும் இல்லை. அது வேறு ஒன்று! முற்றிலும் மாறுபட்ட ஒன்று!



அவனால் தான் கண்ட காட்சியை ரசிக்க முடியவில்லை. தாஜ்மஹால் அவனுக்கு ஒரு ரகசியத்தை வெளியிட்டது. அந்த ரகசியத்தைக் கண்டு அவன் கதி கலங்கிப் போய் விட்டான். ஒரே ஒரு கணந்தான்; நீண்ட மின்னல் வானத்தில் படர்ந்து கொடி விடும் நேரந்தான்! திரும்பவும் அவன் தன் கண்களை மூடித் திறந்த போது, தாஜ்மஹால் வெறும் தாஜ்மஹாலாகவே தோன்றியது.

அது என்ன அந்தக் காட்சி?

தணிகாசலத்துக்கு அதை யாரிடமும் வெளியிடுவதற்கு அப்போது விருப்பமில்லை. தான் கண்ட காட்சியைத் தானே மறந்துவிட விரும்பினான். 'யாரிடம் சொன்னாலும் உமாவிடம் சொல்லக் கூடாது. இதைக் குறிப்பு நோட்டிலும் எழுதி வைக்கக் கூடாது. எழுதி வைத்தால் உமா கண்டுபிடித்து விடுவாள். வேண்டாம்; என் மனம் என்ற புதைகுழிக்குள் மண் போட்டு மூட வேண்டிய காட்சி இது.'

(தணிகாசலம் கண்ட காட்சியை, அவன் கதையை எழுதி வரும் நான் சொல்லக்கூடாதா என்று கேட்பீர்கள். உரிய காலத்தில், உரிய இடத்தில், அதற்குரிய சூழ்நிலையில் கட்டாயம் சொல்லத்தான் சொல்வேன்.)

உமாவும் பேராசிரியரும் ஆளுக்கொரு புறமாக நின்றுகொண்டு அவனைப் பார்த்து விழித்தார்கள். தணிகாசலமும் அதற்குள் நன்றாக விழித்துக் கொண்டான். அவர்களிடம் சொல்வதற்கு வாய் வரையில் வந்து விட்டது அந்தச் செய்தி. உடனடியாக அதைமாற்றிக் கொண்டு, அவர்கள் நம்பக் கூடிய வேறு காரணங்களைக் கற்பித்தான்.

"நான் எதிர்பார்த்து வந்த பேரழகு இதில் தென்படவில்லை. அதனால் சிறு அதிர்ச்சி ஏற்பட்டது. மற்ற எத்தனையோ மஹால்களை நாம் பார்த்து வந்தோமல்லவா? அவற்றைப் போல் இதுவும் மிகச் சாதாரணமான ஒன்று. செம்பூரான் கற்களுக்குப் பதில் பளிங்குக் கற்களில் கட்டியிருக்கிறார்கள். இவ்வளவு தானே!"

உமா தணிகாசலத்தை நம்பவில்லை. "பொய்! பொய்! மாமா மனதாரப் பொய் சொல்கிறார்!" என்றாள்.

பொய் கூறிய தணிகாசலம், உண்மையைக் கூறினால் நன்மை விளையாதென்பதற்காக, அதே பொய்யை மீண்டும் மீண்டும் மெய்யென்று சாதித்தான்.



பேராசிரியர் நம்பிவிட்டார்: "நல்ல மனிதரையா நீங்கள்! இதற்குப் போய் இவ்வளவு ஆர்ப்பாட்டம் செய்து விட்டீர்களே? உங்களைச் சொல்லிக் குற்றமில்லை. உங்கள் கண்களில் கோளாறு இருக்கிறது. யார் - யார் எந்தக் கண் கொண்டு பார்க்கிறார்களோ, அவர்களுக்குத் தக்கபடி தோன்றுகிறது இந்த சித்திரமாளிகை. நீங்கள் இதையே பௌர்ணமி நிலவில் பார்த்தால் அப்படியே மூர்ச்சைபோட்டு விழுந்து விடுவீர்கள்!"

"பௌர்ணமி நிலவில் கிழவி கூடத் தான் இளமையாய்த் தோன்றுவாள்!" என்றான் தணிகாசலம். — 'இந்தச் சோடா பாட்டில் அடி மூடிக் கண்ணாடிக்காரர் என் கண்களில் கோளாறு இருப்பதாய்ச் சொல்லலாமா?'

"மாமா தலைகீழ் மனிதரப்பா!" என்றாள் உமா. "படிக்கிற காலத்தில் படிப்பு மூளையில் ஏறுவதற்காகத் தலைகீழாக நின்று சிரசாசனம் செய்தாராம். அதிலிருந்து உலகமே இவருக்குத் தலைகீழாய்த் தோன்றுகிறது."

மூவரும் சேர்ந்து சிரித்தார்கள். அந்தச் சிரிப்பில் உண்மையை மழுப்பி விட்டு மேலே நடந்தான் தணிகாசலம்.

தணிகாசலத்தை விட்டுத் தள்ளுங்கள். தாஜ்மஹால் கலைஞர்கள் காண வேண்டிய ஓர் அற்புதச் சித்திரந்தான். வெளி வாசல் முகப்பைத் தாண்டி நடந்தால், இருபுறமும் நறுக்கி விடப்பட்ட தேவதாரு மரக் கன்றுகள் பசுமையான வேலி அமைத்து நிற்கின்றன. பளிங்கு நீர்த் தேக்கத்தில், படிகமாய்த் தெளிந்து நிற்கும் தண்ணீரில் மற்றொரு தாஜ்மஹால் தலைகீழாக நின்றது. பிரதிபிம்பம் என்று அதைச் சொல்லலாமா? அங்கே அல்லிக் கொடிகள், மரகதத் தாம்பாளங்களாலான இலைகளையும், பவளமணிகளாலான மலர்களையும் தாங்கி பிரதிபிம்பத்தை வழிபடுகின்றன.

மூன்று பேருக்கும் மூன்று விதமான உணர்ச்சிகளைக் கிளறிவிட்டது அந்தப் பளிங்குப் பள்ளியறை. மும்தாஜும் ஷாஜஹானும் அதற்குள் மீளாத நித்திரையில் அமைதியுடன் கண்ணயர்ந்து கொண்டிருந்தார்கள்.

உமாவுக்கு அது ஓர் உத்தியான நந்தவனமாய்த் தோன்றியது. அங்கே விண்ணுலகத்தின் மாய மங்கைகளான அப்ஸரசுகள் நடனமாடுவதை அவள் கண்டாள். யமுனை நதிக்கரையின் மடியில் மந்தமாருதத் தென்றல் வீசும், மலர் மாளிகை ஓவியம் அது.

உமா தன்னையறியாது ராமலிங்க வள்ளலாரின் அருட்பாக்களில் ஒன்றை



முணுமுணுத்தாள்: 'கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் குளிர் தருவே, தரு நிழலே, நிழல் கனிந்த கனியே, ஓடையிலே ஊறுகின்ற தீஞ்சுவைத் தண்ணீரே, அதனிடை மலர்ந்த சுகந்த மண மலரே, மேடையிலே வீசுகின்ற மெல்லிய பூங்காற்றே, மென் காற்றில் விளை சுகமே, சுகத்திலுறும் பயனே! சுகத்திலுறும் பயனே!'

தாஜ்மஹால் கோபுரத்தைச் சுற்றிலும் புறாக் கூட்டம் புற்றீசலாய்ப் பறந்தது. உமாவின் உள்ளம் ஆயிரம் வெண்புறாக்களாக மாறி, வான வெளியில் இன்பச் சிறகடிப்பதைக் கண்டு தணிகாசலம் ஆனந்தம் கொண்டான்.

எதிரில் வெள்ளைக்காரக் கிழவர் ஒருவர் தம் கிழட்டுக் காதலியின் தோளில் கையைப் போட்டுக் கொண்டு நடந்தார். உல்லாசமாக அவர்கள் ஒன்றி நடந்த காட்சி, அவர்களது வயதை அழித்தது. அவர் தோளில் 'காமிரா', 'தெர்மாஸ் பிளாஸ்க்' இன்னும் என்னென்னவோ தொங்கின. அவர்கள் வெளிநாட்டுப் பிரயாணிகள்.

தத்துவப் பேராசிரியர் சரித்திரப் பேராசிரியராக மாறி முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு நடந்த சரித்திரங்களை யெல்லாம் விளக்கிக் கொண்டு வந்தார்! கண்ணெதிரில் நடப்பது போல் ஷாஜஹானும் மும்தாஜூம் நடத்திய குடும்பவாழ்வும், அரசியல் வாழ்வும் அவரால் சித்திரிக்கப் பெற்றன.

படிக்கட்டுகளில் ஏறி, பளிங்கு மேடையைத்தாண்டி, அவர்கள்

நேரே கல்லறைகள் இருந்த கூடத்துக்குச் சென்றார்கள். அந்தச் சூழ்நிலையில் காண முடியாத பேரமைதி அந்த இடத்தில் மட்டும் நிலவியது. மூச்சுப் பேச்சின்றி நின்றார்கள் மூவரும். அங்கு காவல் நின்ற முஸ்லிம் இளைஞன் கணீரென்று ஒரு பெருங் குரல் எழுப்பினான்.

"ஆண்டவன் ஒருவனே! அந்த ஒருவனைத் தவிர வேறு கடவுள் இல்லை!"—அந்தக் குரல், அந்தக் கூடத்தின் மேல் சுழன்று சுழன்று சென்று, அதே ஆண்டவனின் தொண்ணூற்றென்பது திருநாமங்களாக எதிரொலி செய்து, அங்கு நின்றோரின் மேல் மலர்மாரியாகப் பொலபொலவென்று உதிர்ந்தது.

தணிகாசலத்தை அந்தக் குரல் பரவசமடையச் செய்தது. சொல்லின் அருமை



சொல்லில் உழைப்பவனுக்குத் தானே தெரியும்? மும்தாஜின் கல்லறைமேல் எழுதியிருந்த சில எழுத்துக்களைச் சுட்டிக் காட்டி, "இதற்கு என்ன பொருள்?" என்று பேராசிரியரைக் கேட்டான்.

"ஆண்டவனே! நிகழ்காலம், எதிர்காலம் இரண்டையும் அறிந்தவன் நீ. எங்களால் எந்தச்சுமையைத் தாங்கமுடியாதோ, அந்தச் சுமையை எங்களுக்குத் தந்து விடாதே! நாங்கள் வலுவிழந்த மனிதர்கள்!"

தணிகாசலத்துக்கு அந்தச் சொற்கள் ஏதோ ஒரு மறை பொருளை, காண முடியாத உண்மையை உணர்த்தின. அவன் கண்ட காட்சிக்கும் அவற்றுக்கும் நேரடியான தொடர்பு இருந்தது. தணிகாசலம் கலகலத்துப் போனான்.

"திருக்குரானின் பொன் மொழிகள் இவை" என்றார் பேராசிரியர்.

தணிகாசலம் நிதானமாக, "மன்னர் ஷாஜஹான் தம்முடைய துன்பச் சுமை இந்த வரிகளில் படிந்திருப்பதைக் கண்டிருக்கிறார்" என்றான்.

அவனுக்கு அதற்கு மேல் அந்த இடத்தில் நிற்பதற்குத் துணிவில்லை. நின்றால் அந்த வரிகளின் பொருள் அவனைப் போகுமிடங்களுக்கெல்லாம் துரத்திக் கொண்டு வரும் போல் தோன்றியது. முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த ஷாஜஹான் அவனுடன் அந்த எழுத்துக்களின் வாயிலாகப் பேசப் பார்த்தார். தாஜ்மஹாலைப் பார்க்க வந்த தணிகாசலம், அதைப் பார்த்துவிட்டு, ஒரு சோகக் கதை எழுத விரும்பாததால் 'சட்'டென்று வெளியே வந்தான்.

தாஜ்மஹாலை வலம் வந்தார்கள் அவர்கள். பின்புறத்தில், அன்றைக்கு ஓடிக் கொண்டிருந்த அதே யமுனை இன்றைக்கும் ஆழ்ந்த நிதானத்துடன் அசைந்து கொண்டிருந்தாள். பேராசிரியர் உமாவுக்கும் தணிகாசலத்துக்கும் பளிங்கு மேடையில் நின்றபடியே ஆக்ரா கோட்டையைச் சுட்டிக் காட்டினார். "அதோ, அந்த மிகப் பெரிய கோட்டையின் ஒரு அறையில்தான் ஷாஜஹான் தம்முடைய மகன் ஔரங்கசீப்பால் சிறை வைக்கப்பட்டிருந்தார். சாகும்போது கூடத் தம்முடைய புனிப் பெண்ணின் கைத்தாங்கலில் இருந்து கொண்டு தாஜ்மஹாலைப் பார்த்துக் கொண்டே கண்களை மூடினாராம்!"

"காதலும் சாதலும் இங்கே எதற்கு?" என்று வெறுப்போடு கேட்டான் தணிகாசலம்.

"உங்களுக்குப் பிடிக்கா விட்டால் நீங்கள் சும்மா இருங்கள். ஏன் அப்பா, முகலாய மன்னர் ஷாஜஹானுக்கு எப்படியப்பா ஒருத்தியிடம் மட்டும் இத்தனை அன்பு ஏற்பட்டது?"

அதற்கு நேரடியாகப் பதில் சொல்லாமல், எங்கோ நினைவைச் செலுத்திய படி "உடலும் உயிரும்!" என்று நெடுமூச்செறிந்தார் பேராசிரியர். "மும்தாஜின் உடலழகில் அவள் கணவனுக்கு ஏற்பட்டிருந்த பற்றுதல் அவள் உடலையே அழித்தது. உயிரிடம் உயிர் கொண்டிருந்த அன்பு இன்றும் நிலைத்து நிற்கிறது.—உமா! தாஜ்மஹால் அவர்களுடைய இரு உருவம்" என்றார்.

தணிகாசலத்தின் சிந்தனை சுறுசுறுப்படைந்தது. அவன் உமாவைப் பார்த்தான். உமா, "எனக்கு உங்கள் தத்துவம் புரியவில்லை, அப்பா!" என்றாள்.

தத்துவப் பேராசிரியர் அன்பின் அடிப்படையை விளக்கினர்: "மும்தாஜ் தன் பத்தொன்பதாவது வயதில் ஷாஜஹானை மணந்து கொண்டாள். அவர்கள் பதினெட்டு வருடங்கள் இணை பிரியாமல் வாழ்ந்தார்கள். அந்தப் பதினெட்டு வருடங்களில் மும்தாஜுக்குப் பதினன்கு குழந்தைகள். பதினன்காவது குழந்தையின் பிரசவத்தின் போதுதான் அவள் இறந்து போனள்.—அதனல், ஷாஜஹான் அவள் மீது கொண்டிருந்த உடலன்பு குற்றமற்ற தூய அன்பாக இருந்தாலும், அவளுடைய சாவுக்குக் காரணம் ஷாஜஹான் என்றே நான் நினைக்கிறேன்!"

ஆசிரியரின் ஆராய்ச்சி தணிகாசலத்தைத் திடுக்கிட வைத்தது. அத்துடன் அவர் நின்றிருந்தால், அவரது வாதத்தை அவன் ஏற்கத் தயங்கியிருப்பான். உடலை விட்டு உயிருக்குச் சென்ருர் சந்திரசேகரன்.

"உயிருக்கு உயிர் அவர்கள்! மும்தாஜைப் போல் காதலியைப் பெற்ற அந்த மனிதர் உலகத்திலேயே மிகப் பெரிய பாக்கியசாலி. அவளை விட அழகிகள் வேறு இல்லையா என்ன? உடலழகு வயதை ஒட்டியது. கன்னிப் பருவத்திலும் காளைப் பருவத்திலும் எல்லோருமே அழகாய்த்தான் இருக்கிறார்கள். முதுமைப் பருவத்தின் சக்தி, அதனல் ஏற்படும் முகச் சுருக்கம் யாரைத்தான் விட்டுவைக்கிறது? தேயும் பொருள் உடல், மாறும் பொருள் உடல், அழியும் பொருள் உடல்!"

பேராசிரியரின் கண்கள் பிரகாசமாய் ஒளி வீசின: "மும்தாஜின் உள்ளம் இருக்கிறதே, அது ஒரு அன்புச்சுரங்கம். அதற்காகவே ஐம்பது தாஜ்மஹால்களை அவர் எழுப்பியிருக்கலாம். ஷாஜஹானுக்கு அவள் உயிர்த்தோழியாக, அந்தரங்க மந்திரியாக, அரசியல் தந்திரியாக அடிமைப் பணியாளாக, ஆட்டிவைக்கும் வீட்டரசியாக விளங்கினள். அவள் கலையரசி, அன்பரசி, அறிவரசி! உலகத்தின் எந்தச் சாதனையாளனின் வாழ்க்கையைத் தோண்டித் துருவிப் பார்த்தாலும் இந்த ரகசியம் தெரியும்: நேரடியாகவோ, மறைமுகமாகவோ ஓர் மூல சக்தி அவனைஇயக்கிக்கொண்டிருக்கும்."

உமா தணிகாசலத்தைப் பார்த்தாள். தணிகாசலம் அவள் அப்பாவைப் பார்த்தான். தம்முடைய பெண்ணுக்கு எதிரிலேயே, அவர், விகற்பமின்றிப் பல உண்மைகளை, வெளியிட்டது அவனுக்கு வியப்பைத் தந்தது.

பேராசிரியர் புதிய உற்சாகம் பெற்றவர் போல் தம்முடைய கைகளையும் கால்களையும் ஆட்டிக் கொண்டு வேகமாக நடந்தார். அவருடன் நடையில் போட்டிபோடுவதற்கு உமாவால் முடியவில்லை. சந்தர்ப்பம் தெரியாமல் மிகவும் உயரத்தில் போய்க் கொண்டிருந்த பேராசிரியரை அவள் கீழே தரைக்கு இழுத்துக் கொண்டு வந்தாள். வானத்தில் வட்டமிட்ட பருந்தைச் சுட்டு வீழ்த்தினல் எப்படியிருக்கும்?

"ஏன் அப்பா, இவ்வளவும் தெரிந்த நீங்கள், என் அம்மா செத்துப் போன பிறகு எப்படியப்பா சித்தியைக் கல்யாணம் செய்து கொண்டீர்கள்?"

அவர் தயங்கினர்; கலங்கினர்; பிறகு தம்மைத் தாமே தேற்றிக் கொண்டார்.



"எல்லோரும் ஷாஜஹான்-மும்தாஜாக இருக்க முடியாது."

தம்முடைய பெண்ணின் கேள்வி அவரைக் கடுமையாகத் தாக்கி இருக்க வேண்டும். ஒரு நிமிஷத்துக்கு முன்பு தோன்றிய உற்சாகம், மறு நிமிஷமே கரைந்து போய்விட்டது. "கால்கள் வலிக்கிறது, உமா! இப்படிக் கொஞ்சம் உட்காருவோம்" என்று தாஜ்மஹாலின் இடது பக்கத்துக் கோபுரத் தூணின் கீழே நிழலில் உட்கார்ந்தார்.

அவர் குரலில் உருக்கம் நிரம்பியிருந்தது. அன்பு ததும்பியது.

"உமா! எத்தனையோ பேர்கள் என்னைக் குறை சொன்னர்கள். நான் பொறுத்துக் கொண்டேன். ஆனல், நீ குறை சொல்லாதே. விவரம் தெரிந்

தால் உன் அப்பா அவ்வளவு மோசமில்லை என்று நீ முடிவுக்கு வருவாய். உனக்கே தெரியாத விவரங்கள் சில இருக்கின்றன. சொல்கிறேன்.''

தணிகாசலத்துக்கு உமாவின் வாயைக் கிழிக்க வேண்டும் போல் ஆத்திரம் வந்தது. குழந்தை மனம் படைத்தவரைக் கிளறி விட்டு விட்டாளே?

''உமா! மும்தாஜ் போன பிறகு ஷாஜஹானைக் கவனித்துக் கொள்ள எத்தனையோ பேர்கள் அரண்மனையில் இருந்தார்கள். உன் தாய் போன பிறகு எனக்கு யாருமில்லை. புத்தகங்களை வைத்துக் கொண்டு காலத்தை ஓட்ட நினைத்தேன். காலமே என்னை அவளிடம் தள்ளி விட்டது.'' அவர் நீண்ட பெருமூச்சுக்குப் பின் மேலே தொடர்ந்தார். ''நானும் அவளும் வாழ்கிற வாழ்க்கையைக் கேட்டால் நீ வருத்தப்படுவாய். சந்திரலேகாவுக்குக் காசநோயின் சின்னங்கள் தோன்றிய பிறகு நான் அவளைக் கல்யாணம் செய்து கொண்டேன். கல்லூரியை விட்டு அவளை வெளியே பிடித்துத் தள்ளி, ஆஸ்பத்திரியில் கொண்டு போய்ச் சேர்த்தேன். எத்தனை மாதங்கள் அவள் தன் உயிருக்கு மன்றாடினாள் தெரியுமா? இப்போது நாங்கள் வெளி உலகத்தின் கண்களுக்குக் கணவன் மனைவியாய் வாழ்கிறோம். அவள் எனக்குப் பேச்சுத் துணை; வீட்டுத் துணை; வேலைக்காரி அவ்வளவுதான். ஒருவருக்காக ஒருவர் கஷ்டப்படுவதில் கிடைக்கும் சுகம், மிக உயர்ந்த சுகம், உமா! நீ ஒரு சுண்டெலிக் குஞ்சாக மாறி, வீடுதோறும் போய், அங்கே நடக்கும் அதிசயங்களைக் கண்டு வரமுடியுமானால், அப்போது தெரியும் உனக்கு மனிதரின் உள்வாழ்க்கை!''

உமா கரகரவென்று கண்ணீர் வடித்தாள். ''என்னை மன்னித்து விடுங்கள், அப்பா!'' என்று கெஞ்சினாள்.

தணிகாசலத்துக்கு, கதைகள் எழுதுவதற்கு வேண்டிய மூலப்பொருள் சேகரிப்பதற்காகவாவது, தான் ஒரு சுண்டெலிக் குஞ்சாக மாற வேண்டும் என்ற எண்ணம் பிறந்தது.

சுண்டெலிகளுக்காக வீட்டுக்கு வீடு பொறிகள் காத்திருப்பது அப்போது அவன் நினைவுக்கு வரவில்லை.

## அத்தியாயம் 23.

# உடல், உள்ளம், ஆவி!

வானத்திலே பொன்னிறத் தகடுகள் மிதந்தன. தங்க நதிகள் தவழ்ந்தோடின. செந்நிறப் பூக்கள் சிரித்தன. அந்த வானத்தைச் சுட்டிக் காண்பித்த தாஜ்மஹாலின் மத்திய கோபுரத்தையும், சுற்றியிருந்த நான்கு பெரிய கோபுரத் தூண்களின் உச்சிகளையும் கவனித்து வந்தான் தணிகாசலம். அவனுக்கு எப்போதுமே உயரத்தில் நின்று கொண்டு உலகத்தைப் பார்க்க வேண்டுமென்கிற ஆவல். அது அவனுடைய ஆவல் மட்டுமல்ல; அவனது தமிழ்ப்பரம்பரையின் ஆவல். குன்றுகள்தோறும் குமரனை ஏற்றுவித்து, அவனை அழகனாக, இளைஞனாக, கலைஞனாக, அருளாளனாக வாழ்த்தி, வழிபட்டு மகிழ்ந்து வந்தவர்களல்லவா தமிழர்கள்?

இடதுபுறத்துத் தூணின் கீழ் மூவரும் அமர்ந்து, மந்திரத்தால் கட்டுண்டவர்களைப் போல், அந்தக் காட்சியில் மெய்ம்மறந்திருந்தார்கள். பேராசிரியரின் வாழ்க்கையைக் கேட்ட பிறகு, தணிகாசலத்துக்கு அவரிடமிருந்த மதிப்பு பன்மடங்கு உயர்ந்தது. 'காதல்-தியாகம்' என்ற இரு சொற்களும் அவனிடம் வளைய வளைய வந்து கதைகள் கூறின.

பேராசிரியர் வாயைத் திறந்து மெல்லப் பாடத் தொடங்கினார்:

''காதலினால் மானுடர்க்குக் கவிதை யுண்டாம்;
காநமுண்டாம் சிற்பமுதற் கலைகளுண்டாம்;
காதலினால் சாகாமலிருத்தல் கூடும்;
கவலைபோம், அதனாலே மரணம் பொய்யாம்''

பாரதியிலிருந்து தமக்குப் பிடித்த வரிகளை மட்டும் பிரித்துப் பாடினார் பேராசிரியர். ''சிங்கமண்ட் பிராய்டின் மனோதத்துவ ஆராய்ச்சிக்கும் பாரதிக்கும் தொடர்பிருக்கிறது பார்த்தீர்களா?'' என்று தணிகாசலத்திடம் கேட்டுவிட்டு, ''ஷாஜஹான் கல்லோவியத்தில் காதலை எழுப்பினார்; பாரதியும் பாரதிதாசனும் சொல்லோவியத்தில் காதலை எழுப்பி யிருக்கிறார்கள்'' என்றார்.

''ஆமாம்! பாரதி தாசனின் 'குடும்ப விளக்கு' தாஜ்மஹாலுக்குச் சமம்'' என்றாள் உமா. ''ஏன் மாமா, நீங்கள் கட்டாயம் இதைப்போல் ஒரு உரைநடை மாளிகை எழுப்ப வேண்டும். இல்லாவிட்டால் நான் உங்களைச் சும்மா விட்டு வைக்க மாட்டேன்!''

தணிகாசலம் புன்னகை செய்தான். தாஜ்மஹாலை நேரில் பார்க்கும் வரை



# குடும்பத்துக்கு உத்தமமான சோப்

மார்கோ சோப்பை வழக்கமாக உபயோகிப்பதால், சருமம் மிருதுவாகவும் வழவழப்பாகவும் கெடாமலும் இருக்கிறது. அதிலிருந்து வரும் ஏராளமான நுரை சரும துவாரங்களில் ஆழமாகச் சென்று, முற்றிலும் சுத்தப்படுத்துகிறது. இது குடும்பத்திற்கு உத்தமமான சோப். காருக்கான மணம் உடையது. மிக மெல்லிய சருமமுடையவர்களுக்கும் சிறிதும் தீங்கிழைக்காதது. வாட்டுக் குளிரிலும் உற்சாகமளிக்கும் சக்திவாய்ந்தது.

# மார்கோ சோப்

வாசனை நீக்கப்பட்ட வேப்ப எண்ணெயில் தயாரிக்கப்பெற்றது.

கல்கத்தா கெமிகல் கம்பெனி லிட்., கல்கத்தா - 29.

தென் இந்திய ஆபீஸ்: 5/149, பிராட்வே, சென்னை - 1




# வஸந்தத்தின் புத்துணர்ச்சி

## உங்களுக்கு இன்றும்..என்றும்

மிக்க கீர்த்தி வாய்ந்த காஷ்மீர் பொக்கே
உங்கள் உடலுக்கு இளவேனிற்கால
மின் புத்துணர்ச்சியளிக்கிறது...
அதைக் குளிர்ச்சியாகவும்
வாசனை திகழவும்
வைக்கிறது.




# காஷ்மீர் பொக்கே

## டால்கம் பௌடர்

# கரப்பான் சொறி

## 7 நிமிஷத்தில் கொல்லப்படுகின்றன

உங்கள் சருமத்தில் ஏறக்குறைய 7 கோடி மெல்லிய துவாரங்களும் மடிப்புகளும் உள்ளன. கிருமிகள் அவைகளில் ஒளிந்து கொண்டு, தாங்கமுடியாத அரிப்பு, வெடிப்பு, கரப்பான், தோல் உரிதல், எரிச்சல், படை, முகப்பருக்கள், கால்வலி முதலிய இதர கோளாறுகளை உண்டு பண்ணுகின்றன. சாதாரண சிகிச்சைகள் தற்காலிகமான குணத்தையே அளிக்க வல்லது — ஏனெனில் இவை கிருமிகளுக்கான காரணத்தை கொல்வதில்லை. இந்தப் புதிய சிகிச்சை முறையான நிக்ஸோடர்ம் (Nixoderm) இந்தக் கிருமிகளை 7 நிமிஷத்தில் கொன்று விடுகிறது. தவிரவும் இது உங்களுக்கு மிருதுவான, மாசற்ற வசீகரமான, வழவழப்பான சருமத்தை ஒரே வாரத்தில் அளிக்க உத்தரவாதம். அன்றேல் வெற்றுப் பெட்டியை அனுப்பினால் பணம்வாபஸ். இன்றே உங்கள் கெமிஸ்டிடமிருந்து உத்தரவாதம் பெற்ற நிக்ஸோடர்ம் (Nixoderm) வாங்கி உங்கள் சரும உபாதைகளின் உண்மையான காரணத்தை அகற்றுங்கள்.

**Nixoderm**

நிக்ஸோடர்ம்

சரும உபாதைகளுக்கு

# ஆஸ்த்மா-ஜலதோஷம் ப்ராங்கைட்டிஸ் செய்தி

## பல்லாயிரம் பேருக்கு உற்சாகம் தருகிறது

ஆஸ்த்மா, ப்ராங்கைட்டிஸ், ஜலதோஷத்தால் மூச்சுத் திணறல், இருமல், தும்மல் மூச்சடைப்பு உபாதைகளால் அவதிப்படும் பல்லாயிரக்கணக்கானவர்கள் இப்போது மெண்டாகோ (Mendaco) அருந்தி அற்புத நிவாரணம் அடைகிறார்கள். இந்த நவீன, விஞ்ஞான அமெரிக்க மருந்து இரத்தத்தின் வழியே சுவாசப் பைகள், சுவாசக் குழாய்கள், மூக்குக்குச் சென்று அங்கு கெட்டியாக அடர்ந்துள்ள சளியை இளக்கி கரைக்கிறது. பின்னர் நீங்கள் இருமல் தும்மலின்றிச் சுகமாகச் சுவாசித்துக் குழந்தைபோல் தூங்கலாம். கெமிஸ்டிடம் மெண்டாகோ (Mendaco) வாங்குக. திருப்தி இன்றேல் பணம்வாபஸ்.

யில் அவனுக்கு இப்படி ஒரு எண்ணம் இருந்தது உண்மைதான். ஆனால் பார்த்த பிறகு அது மாறி விட்டது. அதை வெளியில் சொன்னால், உமா வீண் வம்பு வளர்ப்பாள் என்று சும்மாயிருந்தான். 'பையன் பரமசிவத்துக்கும், பிறக்கப் போகும் குழந்தைக்கும் இரண்டு தாஜ்மஹால் பொம்மைகள் வாங்கிக்கொண்டு போனால் போதும்.

''கோபுரத்தின் உச்சியில் போய்ப் பார்த்து விட்டு வருகிறேன்'' என்று கிளம்பினான் தணிகாசலம். உமாவும் எழுந்து நின்றாள். பேராசிரியர் புறப்படவில்லை. ''என்னால் இனிமேல் படிகளில் ஏறி-இறங்க முடியாது; பார்த்து விட்டுத் திரும்பி வாருங்கள்; ஐம்பது தடவைகள் அதன் உச்சியில் போய்ப் பார்த்திருக்கிறேன்'' என்றார்.

அதோடு அவர் நிற்கவில்லை. ''உமாவைப் பத்திரமாய் அழைத்துக்கொண்டு போங்கள். இக் கோபுரத்தின் உச்சியில் ஏறிச் சிலர் தற்கொலை செய்து கொண்டிருக்கிறார்கள். இளம் காதலர்களின் ஆவி சுற்றுமிடம் என்று ஓர் பயங்கர வதந்தியும் உலவுகிறது.''

'இந்த வீண் புரளியை இவர் எதற்காக இந்த நேரத்தில் கிளப்பி விடுகிறார்?' என்று வருந்தினான் தணிகாசலம். பேராசிரியருக்குச் சிலவேளைகளில் சமய சந்தர்ப்பங்கள் தெரியவில்லை. கருக்கிருட்டு நேரத்தில் வயது வந்த இளம் பெண்ணை வைத்துக்கொண்டு பிசாசுகளைப் பற்றிப் பேசலாமா?

உமா ஓடிப்போய் முன்னால் தாவினாள். புள்ளிமான் குட்டியின் பரபரப்போடு அவளுடைய பாதங்கள் படிகளில் நடனமாடின. வளைந்து வளைந்து செல்லும் படிகளில் அவள் அநாயாசமாக விரைந்து சென்றாள். தணிகாசலத்துக்கு வியப்புத் தாங்க முடியவில்லை. முற்பகலில் 'சிக்கிரி'யிலிருந்து திரும்பும்போது, தன் கால்களைப் பிடித்துக் கொண்டு அழுது வடிந்தவளுக்கு, இத்தனை பலம் எங்கிருந்து வந்தது?-தணிகாசலத்தின் கால்கள் தூண்களாகி உணர்ச்சியிழந்து வலித்தன.

நூற்றறுபதடிகளுக்கு மேல் உயரமுள்ள தூண். படிகளின் எண்ணிக்கைக்கு முடிவே கிடையாது போலும்! பாதிப் படிகள் ஏறுவதற்குள் மான் குட்டி ஆமைக்குட்டியாக மாறிவிட்டது. இளைக்க இளைக்க மேல் மூச்சுக் கீழ் மூச்சு வாங்கிக்கொண்டு, ஒரு ஓரமாக நின்றாள் உமா. அவளுடைய சிரமத்தைப் பார்க்க அவனுக்குப் பரிதாபமாக இருந்தது. நெற்றிப் புருவங்களுக்கு மேல் முத்து முத்தாய் வேர்வைத் துளிகள். வாயைத் திறப்பதற்கு அவளிடம் உயிர் இல்லை.

''போய், அடுத்த சாளரத்தில் நின்று கொண்டு காற்று வாங்கு; அதற்கடுத்தாற்போல் உச்சிதான்.''

மூச்சுத் திணற உமா பதிலளித்தாள். ''உச்சிக்குப் போகும் வரையில், வழியில் வேடிக்கை பார்க்க மாட்டேன்.''

அவள் தன் பல் தெரியச் சிரித்தாள்.

''உன்னை நான் என்ன செய்து தொலைப்பது?'' என்று கத்தினான் தணிகாசலம். கம்பளிப் பூச்சியைத் தூக்கித் தன் கழுத்தில் சுற்றிக் கொண்டதுபோல் எரிச்சல் வந்தது அவனுக்கு.

''என்ன செய்து தொலைப்பது? கோபுரத்தின் உயரத்துக்குப் போனவுடன் கீழே தள்ளி விடுவது, ஒட்டிக் கொண்ட



கம்பளிப் பூச்சியை உதறி எறிந்து விடுவது போல!''

தணிகாசலம் மிரண்டு நின்றான். உள்ளத்துக்குள்ளே உருவாகும் அதே சொற்களை வெளியே இழுத்துவரும் சூனியக்காரியா இவள்? அல்லது ஆவி உலகப் பெண்ணா?

உமா கலகலவென்று நகைத்தாள். ''அப்படித் தள்ளி விட்டாலும் நீங்கள் தப்ப முடியாது. உங்களுடன் ஆவியாக ரயிலில் பிரயாணம் செய்து, உங்களை அறியாமலே உங்களுடைய எழுத்தறைக்குள் புகுந்து விடுவேன்.''

தணிகாசலத்தைப் பயப்படுத்தி விட்டு அவள் மேலே நடந்தாள். ஏற்கனவே அச்சத்தை எழுப்புகிற சூழ்நிலை அது. அங்கே வெளிச்சமில்லை; காற்றில்லை; போகப் போகப் படிகள் சிறுத்தன; வழி குறுகலாகிக் கொண்டே வந்தது. லட்சியவாதியின் முன்னேற்றத்துக்கு முன் குறுக்கிடும் வலுவிழந்த எதிர்ப்புச்

சக்திகளின் கூட்டு முயற்சிபோல் ஏதோ ஒன்று அவனைக் கீழே தள்ளப்பார்த்தது.

'இறங்கித் திரும்பி விடலாமா?' என்று கணநேரம் தயங்கித் தவித்த தணிகாசலம், தனக்கு முன்னால் உமா தள்ளாடி நடந்து செல்வதைக் கண்டு புது வலிமை பெற்றான். தனக்கு அவள் வழி காட்டுகிறாளா? 'சே! பெண் பின்னை முன்னால் நடக்கும்போது...'

உமாவின் உருவம் நிழலைப் போல் அவன் கண்களில் ஊசலாடியது. முக்கால் பகுதிப் படிகள் தீர்ந்தவுடன், அந்த உருவம் தன் கரங்களில் முகத்தைக் கவிழ்த்துக் கொண்டு, நடுப்படியில் உட்கார்ந்தது. பெருமூச்சின் சீற்றத்தை அவன் செவிகள் உற்றுக் கேட்டன.

''இன்னும் பத்தே பத்து படிகள் தான்!'' என்றான் தணிகாசலம்.

அவள் எழுந்து நடந்தாள். ஆயிற்று: ஒன்று, இரண்டு, மூன்று...ஒன்ப—

நீலவானம் கண்களுக்குத் தெரிந்தது. மேகங்கள் மிதந்தன. காற்று சில்லென்று முகத்தில் வீசியது. ஏன் உமா நடுங்குகிறாள்? ஏன் உமா பதறுகிறாள்? கடைசி மூச்சைப் பிடித்து, கால்களைத் தரையில் ஊன்றிக் கொண்டால், பிறகு யமுனை, பூங்கா, தாஜ்மஹால், ஆக்ரா நகரம் அனைத்தையும் காணலாமே!

கடைசிப் படி -

அதில் காலெடுத்து வைக்கும் வேளையில் தலை சுற்றிக் குப்புற விழுந்தாள் உமா. நினைத்துப் பார்க்க நேரமேது? 'ஆபத்துக்குப் பாவமில்லை! ஆபத்துக்குப் பாவமில்லை!' என்ற அவனது உள் மனத்தின் சவுக்கடி தாங்க முடியாமல், ஓடிப் போய் அவளைத் தாங்கிப் பிடித்தான் தணிகாசலம். கைத்தாங்கலாக, அந்தக் கடைசிப் படியேறி, அவளைத் தரையில் உட்கார வைத்தான். உமாவால் உட்கார முடியவில்லை. துவண்டு சரிந்து தரையில் சாய்ந்தாள்.

விழிகள் இரண்டு மூன்று முறை மேலும் கீழும் போய் வந்து பிறகு எங்கோ செருகிக் கொண்டன. இமைகளை மூடினாள். கை கால்கள் துவண்ட நிலையிலிருந்து மாறிக் கட்டைகளைப் போல் இறுகி விட்டன. 'ஐயோ, உமா! மோசம் செய்து விட்டாயா?'

உயிர் இருக்கிறதா, பிரிந்து விட்டதா என்று அவனுக்குத் தெரிய வில்லை. மண்டியிட்டு அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். மூடிய கண்களைத் திரும்பவும் திறந்தாள்; இமைகள் மறுபடியும் மூடிக் கொண்டன. மூச்சுக் காற்று இழைகிறதா, இல்லையா? நாடித் துடிப்பு நடுங்குகிறதா இல்லையா? உமா இருக்கிறாளா, இறந்து விட்டாளா? 'ஏ, உமா! கண்களைத் திறக்க மாட்டாயா?'

அவனுடைய தொழிற்சாலைக்கு அடுத்த தொழிற்சாலையில் நடந்த பயங்கரச் சம்பவம் ஒன்று அப்போது நினைவுக்கு வந்தது. கட்டுக் குலையாத உடல் வலிமையுள்ள ஒரு தொழிலாளி, திடீரென்று மயங்கிவிழுந்து உயிர் நீத்தான். பேராசிரியர் எதற்காக இந்த வேளையில் தற்கொலை செய்து கொண்டவர்களைப் பற்றிச் சொல்லி அனுப்ப வேண்டும்? எதற்காக இந்தத் தாஜ்மஹால் அவனுக்கு முதல் பார்வையில் வெறுப்பூட்ட வேண்டும்? இதே கோபுரத்தின் தூண் தான் அவனை நோக்கி வந்து...

தணிகாசலத்தின் உடல், உள்ளம், ஆவி தவித்த தவிப்பை எனக்கு இங்கே சொல்வதற்குத் திறமையில்லை. ''உமா! உமா! உமா! எங்கே போய் விட்டாய் உமா?'' என்று அவன் தலைமயிரைப் பிய்த்துக் கொண்டு கதறினான்.

நினைவுகள் அலைமோதின: 'அந்தப் பேராசிரியருக்கு மூளை எங்கே பறிபோய் விட்டது? எப்படி இவளை என்னோடு அவர் தனியே அனுப்பலாம்?' கௌரியையும் கல்யாணி அம்மாளையும் அவன் நினைத்தான். தன்னிடம் தாஜ்மஹால் வாங்கிக் கொண்டு வரச் சொன்ன தன் மகன் பரமசிவத்தை நினைத்தான். 'ஏ, பரமசிவம்! உன் அம்மாளையும் பாட்டியையும் இங்கே கொஞ்சம் அழைத்துக் கொண்டு ஓடி வாடா! உன்னைத் தூக்கி வளர்த்த படுபாவி பேச்சு மூச்சில்லாமல் இங்கு கிடக்கிறாளடா! இந்த நிலையில் என்னையும் அவளையும் பார்த்தால் இந்த உலகமெல்லாம் தூற்றுமடா!'

வெறி கொண்டவனைப் போல் பத்துப் படிகள் கீழே இறங்கி விட்டுத் திரும்பவும் மேலே வந்தான் தணிகாசலம். பேராசிரியரை இழுத்து வரவேண்டுமென்ற எண்ணம், ஆனால் அது நடுவில் அறுபட்டுத் துடிதுடித்தது.

நல்லவர் பொல்லாதவர் வரக் கூடிய இடம் அது. அவர்கள் ஏறும் போதே எதிரில் இறங்கி வந்த இரண்டு காலிகள் அவர்களைப் பார்த்துச் சீட்டி அடித்து விட்டுச் சென்றார்கள். தனியிடத்தில் அநாதையாக இளம் பெண்ணைப் போட்டு விட்டுச் செல்வதா?

வேறு என்ன செய்வது? இந்த இடத்தில் அவன் வேறு என்னசெய்வது?

'தாஜ்மஹாலே! நீ சாவின் சந்நிதானம், பயங்கரப் புதைகுழி, காதலர்களின் உடல்களைப் போட்டு மூடிக் கொண்ட ஈவு இரக்கமற்ற பாழுங் கல்லறை! உன்னை நான் வெறுத்ததற்காக நீ என் மீது வஞ்சம் தீர்த்துக்

கொண்டிருக்கிறாயா? என்னை என்ன வேண்டுமானாலும் செய்து கொள். நான் தாங்கிக் கொள்வேன். பெண்ணுக்காக எழுந்த பெருமானிகையே, உனக்கு உன்னைப் போல் வேறொரு பெண்ணிடம் இரக்கமில்லையா? பொறுமையா உனக்கு!'

அட, தணிகாசலம்! இந்த அதிசயக் கற்பனையைத் தூற்றாதே! ஆண்டவன் திருச் சபையின் அணுத்துளியடா இது! அகங்காரத்தை அழித்து விட்டு 'ஆண்டவனே' என்று கதறி அழு.

அவன் கதறியழுதான்: 'ஆண்டவனே! ஆண்டவனே!'

'ஆண்டவன்!' மனிதனின் அறிவு தன்னுடைய அறியாமையை உணரும் போது, அவனுடைய இறமை அவனுக்குப் பள்ளம் பறிக்கும்போது, அவனுடைய உற்றம், சுற்றம், நண்பர், பணம், பதவி, அதிகாரம் அனைத்தும் அருகில் இருந்தும் அவனுக்கு உதவாமல் புறக்கணிக்கும் போது, அவனுடைய நெஞ்சைக் கிழித்துப் பார்த்தால் அங்கே ஆண்டவன் தோன்றுவான். இன்றைக்கு ஆண்டவனை நம்பாத இளங் காளைகள் யாருமிருந்தால், இன்னும் இருபது ஆண்டுகளுக்குப் பின்பு இந்த வரிகளையே தயவுசெய்து திருப்பிப் பாருங்கள்,-அப்போது இந்த வரிகளும் நீங்களும் உயிரோடிருந்தால்!

பக்தியில் நம்பிக்கை கொண்ட பகுத்தறிவுவாதி தணிகாசலம். மசூதி கோபுரங்கள் அவனுக்கு வானத்தைச் சுட்டிக் காட்டின. மண்ணின் உச்சியிலும் விண்ணுக்குக் கீழேயும் நின்று கொண்டிருந்த அவன் தன் இரு கரங்களையும் விரித்து இறைவனைக் கூவினான்.

பொழுது விடியுமுன்பும், பொழுது மறையும் முன்பும், வைகறையின் கிழக்கு வெளுப்பிலும், அந்தி மாலையின் மயக்கிருளிலும் அவன் மசூதிகளிலிருந்து முஸ்லிம் பக்தர்களின் இதய ஒலிகளைக் கேட்டிருக்கிறான். இக்கற்றவர்களின் இசை காட்டி தெய்வ அருள்; நடுக் கடலில் விழுந்து தவிக்கும் மனிதனுடைய கலங்கரை விளக்கம் அது.

மின்னல் போல் மும்தாஜின் கல்லறையின் மீது பொறிக்கப்பட்டிருந்த சில சாகாச் சொற்கள், அப்போது அவன் மூளையில் பளிச்சிட்டன. முன்பே அவன் படித்த திருக்குரானின் வரிகள்.

காதுகளை அடைத்துக் கொண்டு அவன் கதறினான்: ''ஆண்டவனே! உன்னைத் தவிர வேறு துணையில்லை! எங்களால் எந்தச் சுமையைத் தாங்க முடியாதோ, அந்தச் சுமையை எங்களுக்குத் தராதே! நாங்கள் வலுவிழந்த மனிதர்கள்!'' என்று அலறினான்.

தொண்டை காய்ந்த பிறகு கீழே உட்கார்ந்து அவளுக்குத் தன் கைக்குட்டையால் விசிறி விட்டான். மூக்கருகில் வைத்துப் பார்த்த கைக்குட்டையின் சலனத்திலிருந்து அவளுடைய உயிருக்கு ஆபத்தில்லை என்று தெரிந்தது. உமாவின் உதடுகள் உலர்ந்து போயிருந்தன. இலேசாக இருள் கவிழ்ந்த வேளையில் கண்களைத் திறந்தாள் உமா.

'' உமா! உமா! உமா!'' ஆனந்தக் கூத்தாடியது அவன் மனம்.



வாயைத் திறக்க முயன்றாள் உமா. வாய் கோணியது. நாக்கைச் சுழற்றிப் பார்த்தாள். மேலுதட்டில் ஒட்டிக் கொண்டது. மெதுவாகத் தன் வலது கரத்தால், தனக்குத் தண்ணீர் வேண்டுமென்று சைகை செய்தாள்.

'' தண்ணீரா, உமா?''

'ஆம்' என்பது போல் அவள் மெதுவாகத் தலையசைத்தாள்.

கண்ணீரைத் தவிர அங்கு தண்ணீர் ஏது? விழுந்தடித்துக் கொண்டு கீழே ஓடி வந்தான். எதிரில் யாரும் காலிகள் வந்தால், ஒன்று அவர்களை அடித்துத் தள்ளி விட்டுக் கீழே ஓட வேண்டும்; அல்லது அவர்களைக் கெஞ்சித் தண்ணீர் கொண்டு வரச் சொல்ல வேண்டும்.

எதிரில் ஆளரவம் கேட்டது. ஆங்கிலமும் ஒலித்தது. முன்பு தணிகாசலம் பார்த்த அந்தக் கிழட்டு வெள்ளைத் தம்பதிகள் ஆடி அசைந்து வந்து கொண்டிருந்தார்கள்.

அவர்களுடன் இரும்பவும் மேலே வந்து நடந்ததைச் சொல்லி, ''கொஞ்சம் இவளைப் பார்த்துக் கொள்ளுங்கள். ஒரு நொடியில் தண்ணீருடன் வருகிறேன்'' என்று ஓடப் போனான்.

கிழவர் அவனுடைய தோளைப் பற்றி இழுத்து நிறுத்தினர். '' நில்லடா,

பைத்தியம்!'' என்று சிரித்து விட்டு, ''மனைவியைத் தோளில் தூக்கிவைத்துக் கொண்டு கூத்தாட வேண்டிய இடத்தில், இப்படி நடத்தி அழைத்து வரலாமா?'' என்று கடிந்து கொண்டார். மளமள வென்று தம் தோளில் தொங்கிய பிளாஸ்கைக் கழற்றி, சூடான காப்பி ஊற்றி மனைவியிடம் நீட்டினார்.

கிழவி உமாவை மடியில் தூக்கி வைத்துக் கொண்டு அவளுக்குக் காப்பி கொடுத்தாள். தேவையான சிகிச்சை செய்தாள். உமாவுக்குச் சிறிதுசிறிதாகத் தெம்பு வந்தது. கண்களை அகலத் திறந்து நடந்தவற்றை நினைவுக்குக் கொண்டு வந்தாள். கிழவியைத் தழுவிக் கொண்டு தன் அன்பைச் சொரிந்தாள்.

கிழவரோ அவர்களை மனங்கொண்ட மட்டும் பரிகாசம் செய்யத் தொடங்கினார். ''இரண்டு பேரும் ஒன்றாய் நில்லுங்கள்; படம் பிடிக்க வேண்டும்! இந்தக் கோபுரத்தின் உச்சியில் நின்று கொண்டு படம் எடுத்துக் கொள்வதற்காகவே இங்கு வரலாமே?''

தணிகாசலம் கெஞ்சுகிற முறையில் அவரிடம் மறுத்தான். ''கடவுள் அனுப்பி வைத்த பெருந் துணை நீங்கள்; உங்கள் படமிருந்தால் எங்களுக்குக் கொடுங்கள்'' என்றான்.

''சும்மா நில் தம்பி! அழகாய் ஆங்கிலம் பேசிக் கொண்டு பட்டிக்காட்டுத் தனமாய் நடந்து கொள்ளுகிறாயே? நாங்கள் எந்தப் பத்திரிகையிலும் போட மாட்டோம். நில்லுங்கள்.''

''நாங்கள் கணவன் மனைவியில்லை.''

''காதலர்களாயிருந்தால் இன்னும் நல்லது!''

''அதுவுமில்லை.''

''அண்ணன் தங்கையாக இருக்கும். ஏன் அவர்களைத் தொல்லைப்படுத்துகிறீர்கள்?'' என்றாள் கிழவி.

உமாவுக்கு அது பொறுக்கவில்லை. ''இவர் என் மாமா!'' என்று சொல்லித் தன் உரிமையை அவர்களுக்கு மத்தியில் நிலைநாட்டிக் கொண்டாள்.

பிறகு எல்லோருமே அதை விட்டுத் திரும்பினார்கள். கிழவியின் கைத்தாங்கலில் உமா வந்து சேர்ந்தாள். நீண்ட நேரம் அவர்களுக்காகக் காத்திருந்த பேராசிரியர், அவர்கள் வந்தவுடன் துள்ளிக் கொண்டு எழுந்தார்.

''எங்கே, அங்கேயே உட்கார்ந்து இரண்டுபேரும் கதை எழுதத்தொடங்கி விட்டீர்களோ என்று நினைத்தேன். சிறு கதையா, பெருங்கதையா?'' சந்திரசேகரன் சிரித்தார்.

பேராசிரியரை அப்படியே தூக்கிப் போய் உச்சியிலிருந்து மாடிப் படிகளில் உருட்டிவிட வேண்டும் போலிருந்தது தணிகாசலத்துக்கு. (தொடரும்)

## மார்ச் மாதச் சிறுகதைப் போட்டி

1. மாதந்தோறும் நடக்கும் இந்தச் சிறுகதைப் போட்டியில் எழுத்தாளர்கள் எல்லோரும் கலந்து கொள்ளலாம்.

2. எழுத்தாளர்கள் சொந்தமாகவே கதைகள் புனைந்து அனுப்ப வேண்டும். கதைகள் கல்கியில் ஆறு பக்கத்திலிருந்து பத்து பக்கம் வரையில் வெளியிடக் கூடியதாக இருக்கலாம்.

3. ஒவ்வொரு மாதமும் அந்தந்த மாதப் போட்டிக்கு வந்த கதைகளில் சிறந்ததற்கு நூறு ரூபாய் பரிசு வழங்கப்படும்.

4. மார்ச் மாதப் போட்டிக்கு மார்ச் 1-ந் தேதியிலிருந்து 31-ந் தேதி வரை கதைகள் எழுதியனுப்பலாம். மார்ச் மாதப் போட்டிக்கு வந்த கதைகள் ஏப்ரல் மாதம் முழுதும் பரிசீலனை செய்யப்படும். பரிசு பெற்ற கதை மே மாதத்தில் பிரசுரமாகும். அதேபோல் அந்தந்த மாதக் கதைகள் அடுத்த மாதத்தில் பரிசீலனை செய்யப்பட்டு, அதற்கடுத்த மாதத்தில் பிரசுரமாகும்.

5. கதைகளை நல்ல காகிதத்தில் இடைவீடுகள் விட்டு ஒரே பக்கத்தில் எழுத வேண்டும். காகிதத்தின் மறு பக்கத்தில் எழுதக் கூடாது.

6. தேர்ந்தெடுக்கப்படாத கதைகளைத் திரும்பிப் பெற விரும்புவோர் அவற்றுடனேயே போதிய தபால் பில்லைகள் வைத்து அனுப்ப வேண்டும். தபால் பில்லைகள் வைத்து அனுப்பாதவற்றைத் திருப்பியனுப்புவதற்கில்லை.

7. போட்டிக் கதை சம்பந்தமாக எந்தவிதக் கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்வதற்கில்லை.

8. தேர்ந்தெடுத்த கதைகளைத் திருத்துவதற்கும் குறைத்து வெளியிடுவதற்கும் ஆசிரியருக்குப் பூரண உரிமை உண்டு.

—ஆசிரியர், கல்கி



# வழிகளால் நரையை



## ஒழிக்கலாம்...

'சிரசாஸனம்' ஒழுங்காகச் செய்துவந்தால், நரைமயிர் நாளடைவில் கருப்பாக மாறும் எனச் சொல்லப் படுகிறது. ஆனல் அதைப் பழக, ஓய்வு நேரமும், மன நிம்மதியும் அவசியம்.

தற்காலத்தில் "லோமா"வைத் தவருமல் உபயோகிப்பதுவே, நரையை ஒழிக்க நிச்சயமானதும், பத்திரமானதும், சுலபமானதுமான வழியாகும்.



"லோமா" இப்பொழுது திருட இயலாத மூடியுள்ள பிரத்தியேகமாகத் தயாரித்த பாட்டிலில் வழங்கப்படுகிறது.






ஸோல் ஏஜெண்டுகள் : எம். எம். கம்பாட்வாலா, ஆமதாபாத்-1
ஏஜெண்டுகள்: வி. நரோட்டம் அண்ட் கோ., பம்பாய்-2 போன்: 30575

சென்னை ஏஜண்டுகள்: ஜே பாலபாய் அண்டு கம்பெனி 260, எஸ்பிளனேட், மதராஸ்-1
இலங்கை ஏஜண்டுகள்: சிர்குல் கதிர் & கோ., 41&43, இரண்டாம் குறுக்குத் தெரு, கொழும்பு-11

பொருளாதாரமும் பொதுமக்களும் 14

# அரசாங்கமும் பொருளாதாரமும்

கு. சந்தானம்

ஒரு நாட்டின் பொருளாதாரத்துக்கும் அதன் அரசாங்கத்துக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. நாட்டில் சமாதானமில்லாமல் போனால் எல்லாப் பொருளாதார முயற்சிகளிலும் கஷ்டம் ஏற்படும். விவசாயம் நில உரிமைகளைப் பொறுத்திருக்கிறது. அதை மாற்றியமைக்க அரசாங்கத்துக்கு உரிமையும், கடமையும் உண்டு. தொழில்களையும், வியாபாரங்களையும் சரிவர நடத்துவதற்கு வேண்டிய சட்டதிட்டங்களை இயற்றி அமுல் செய்வது அரசியல் நிர்வாகத்தின் இன்றியமையாத அம்சமாகும். அரசாங்கத்தின் நாணய முறைக்கும் வட்டி விகிதத்துக்கும், விலைவாசிகளுக்கும் பரஸ்பர சம்பந்தம் மிகவும் சிக்கலானது. அதைப்பற்றிப் பொருளாதார ஆசிரியர்கள் தீவிரமாக வாதப் பிரதிவாதம் செய்து வருகின்றனர். பொது மக்கள் அவ்வப்போது விலைகள் ஏறி இறங்குவதால் மிகவும் பாதிக்கப்படுகிறார்கள். விலைகள் உயர்ந்தால் குடியானவர்களுக்கும், சாமான்களை உற்பத்தி செய்வோர்களுக்கும் லாபம். ரூபாயில் சம்பளம் வாங்குவோருக்கும், வட்டியினால் ஜீவிப்போருக்கும் நஷ்டம். அவ்வித ஏற்றத்தாழ்வைக் கட்டுப்படுத்துவது தற்கால அரசாங்க பரிபாலன முறையில் முக்கியமானது.

மேற்கூறிய பொதுத் தொடர்புகளைத் தவிர, அரசாங்கம் நேரடியாகப் பொருளாதாரத்தில் மூன்றுவிதப் பங்கு எடுத்துக் கொள்ளுகிறது. அரசியல் நிர்வாகத்துக்காகக் கோடிக்கணக்கான ரூபாய்களை வரியாக வசூலித்து லக்ஷக்கணக்கான உத்தியோகஸ்தர்களையும் சிப்பந்திகளையும் வேலையில் அமர்த்தி அவர்களுக்கு ஊதியம் கொடுக்கிறது.

மத்திய ராஜ்ய அரசாங்கங்கள் நேரில் பல தொழில்களையும் தொழிற்சாலைகளையும் ஏற்படுத்தி நிர்வகித்து வருகின்றன. மத்திய அரசாங்கம் ரயில்வே, தபால், தந்தி, டெலிபோன், விமான யாத்திரை முதலிய இலாக்காக்களை நடத்துவதோடு சித்தரஞ்சன் ரயில் எஞ்சின் தொழிற்சாலை, சிந்திரி ரசாயன உர உற்பத்தி சாலை, பங்களூரில் விமானத் தொழிற்சாலை, யந்திர உற்பத்தி சாலை, பெரம்பூர் பிரயாண ரயில் பெட்டி கட்டும் தொழிற்சாலை முதலிய தொழிற்சாலைகளையும், சைனியத்துக்காக ஆயுதம் முதலிய சாமான்கள் தயார் செய்யும் ஆலைகளையும் நிர்வாகம் செய்து வருகின்றனர். பிரதேச அரசாங்கத்தார் நீர்ப்பாசனம், பிரயாணிகளின் பஸ் போக்குவரத்து, மின்சார உற்பத்தி, சப்ளை முதலிய தொழில்களைச் செய்து வருகின்றனர். உத்தரப் பிரதேசத்தில் சிமெண்டுத் தொழிற்சாலையும், மத்தியப் பிரதேசத்தில் பத்திரிகைக் காகித உற்பத்தியும் சர்க்கார் நிர்வாகத்தில் இருக்கின்றன. மைசூர், காச்மீர அரசாங்கங்கள் பல தொழிற்சாலைகளை நடத்தி வருகின்றன.

மூன்றாவதாக ரிசர்வ் பாங்கி, இந்திய அரசாங்க பாங்கி, ஆயுள் இன்ஷூரன்ஸ் ஸ்தாபனங்கள் முதலியவற்றை நடத்துவதோடு, கடன் மூலமாகவும், சிறு தொகைச் சேமிப்பு வசதிகள் வாயிலாகவும் சமூகத்தில் மிச்சமாகும் பணத்தை மத்திய அரசாங்கமும் ராஜ்ய அரசாங்கங்களும் கடனாக வாங்கிச் செலவழிக்கின்றன.

இந்தியாவில் பொதுநல சமுதாயம் (சோஷலிஸ்ட் சமூகம்) ஸ்தாபிப்பதே லட்சியம் என்று காங்கிரஸ் மகாசபையும், அதன் பிரதிநிதிகள் நிர்வகிக்கும் அரசாங்கங்களும் 1954-ல் தீர்மானம் செய்தன. ஜனநாயக ஆட்சிமுறைக்கு எவ்விதத்திலும் முரண்படாத முறையில் தற்போதையப் பொருளாதாரம் மாற்றப்பட வேண்டும் என்றும் முடிவாகியிருக்கிறது.

பொதுவாக, செல்வ உற்பத்தியும் பிரிவினையும் பொதுமக்களின் நலத்துக்காகவே பயன்பட வேண்டுமென்பதைத் தவிர இந்த லட்சியத்தின் மூலம் பாரதத்தில் முதலாளித்துவமும், தனியார் தொழிலும் எவ்வளவு தூரம், எத்தனை காலம் இருக்கவேண்டுமென்று கூற முடியாது. 1956-ம் வருஷம் ஏப்ரல் மாத முடிவில், மத்திய சர்க்கார் ஒரு 'தொழிற் கொள்கைத் தீர்மான'த்தை வெளியிட்டனர். அதில் தொழில்கள் மூன்று தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. முதல் தொகுதியில் அடங்கியிருக்கும் தொழில்களில் இனி புதிய தொழிற்சாலைகளை ஸ்தாபிக்கும் உரிமை அரசாங்கத்துக்கேதான் இருக்கும். ரயில் போக்குவரத்து, விமான யாத்திரை, ஆயுத உற்பத்தி, அணு சக்தி சர்க்காரின் ஏகபோகத் தொழில்கள். இத் தொகுதியிலுள்ள இதரத் தொழில்களில் தீர்மானத் தேதியில் ஈடுபட்டிருப்பவர்கள் அதைத் தொடர்ந்து நடத்த உரிமையுண்டு. சர்க்காரின் அனுமதியின்

பெயில் அந்தத் தொழிற்சாலைகளை விரிவுபடுத்தலாம். ஆனால் புதிய ஆலைகள் அமைக்கலாகாது. அத் தொழில்கள் கீழ்க்கண்டவாறு:

1. ஆயுதம், சைனிய தளவாடங்கள்.
2. அணுசக்தி.
3. இரும்பு, எஃகு.
4. இரும்பு, எஃகு இவற்றில் கனமான வார்ப்புகள்.
5. இரும்புத் தொழில், சுரங்கத்தொழில், யந்திரம் செய்யும் தொழில் முதலிய அடிப்படையான தொழில்களுக்கு வேண்டிய யந்திரங்களும், தளவாடங்களும் உற்பத்தி செய்தல்.
6. நீர்வீழ்ச்சியாலும், நீராவியாலும் மின்சாரம் உற்பத்தி செய்யும் கனமான யந்திரங்களும், தளவாடங்களும்.
7. நிலக்கரியும், பழுப்புக்கரியும் (லிக்னைட்)
8. மண்ணெண்ணெய் வகையறு.
9. இரும்பு, மங்கனீஸ், குரோம், ஜிப்ஸம், கந்தகம், தங்கம், வைரம் இவற்றின் சுரங்க வேலைகள்.
10. செம்பு, ஈயம், ஸிங்க், தகரம், மாலிப்டினம், ஓல்ப்ராம் முதலிய சுரங்கப் பொருள்களை எடுத்துப் பக்குவம் செய்தல்.
11. அணுசக்திக்குரிய சுரங்கப்பொருள்கள்.
12. விமானத் தொழில்.
13. விமானப் போக்குவரத்து.
14. ரயில் போக்குவரத்து.
15. கப்பல் அமைத்தல்.
16. டெலிபோன், அதற்கு வேண்டிய குழாய்கள், தந்தி, வானச்செய்தி யந்திரங்கள் (ரேடியோ பெட்டியைத் தவிர.)
17. மின்சார உற்பத்தியும், அதை வேண்டுவோருக்கு வழங்குவதும்.

இரண்டாவது தொகுதியில் அடங்கிய தொழிலில் முதலாளிகளும், முதலாளி ஸ்தாபனங்களும் ஈடுபடலாம். ஆனால் அத் தொழில்களை விரைவில் விருத்தி செய்ய அரசாங்கமும் தொழிற்சாலைகள் ஏற்படுத்திப் போட்டியிடலாம். அவையாவன:

1. 'அல்ப உலோகங்கள்' என்று சட்டத்தில் குறிப்பிட்டவைகளைத் தவிர இதர உலோகங்களின் சுரங்க வேலைகள்.
2. முதல் தொகுதியில் சேராத அலுமினியம், இதர இரும்பில்லாத வேறு உலோகங்களைச் சேர்ந்த தொழில்கள்.
3. யந்திரத் தொழில்.
4. இரும்பு சேர்ந்த கலப்பு உலோகங்கள், கருவி எஃகுகள்.
5. மருந்து, சாயம், பிளாஸ்டிக் முதலியவற்றுக்கு வேண்டிய ரசாயனப் பொருள்களின் உற்பத்தி.
6. பென்சிலின் முதலிய விஷக் கிருமி தடுக்கும் மருந்துகள்.
7. ரசாயன உரங்கள்.
8. செயற்கை ரப்பர்.
9. நிலக்கரியைப் பக்குவப்படுத்தல்.
10. ரசாயனக் காகிதச் சத்து.
11. மோட்டார் போக்குவரத்து.
12. கடல் போக்குவரத்து.

இவ்விரண்டு தொகுதிகளிலும் அடங்காத எல்லாத் தொழில்களும் தனியார் தொழில்களாக விடப்பட்டிருக்கின்றன.

---

**முதல் பையன்!**

தாயார் (பையனிடம்):— ஏண்டா, கோபு! நீ வகுப்பில் முதல் பையனாக இருக்கிறாயா?

பையன்: ஆமாம், அம்மா! நான் தான் முதல் லே வகுப்புக்குள்ளே போவேன்! பள்ளிக்கூடம் விட்டதும் நான்தான் முதல்லே வெளியே ஓடிப்போவேன்!

---

## 15. மத்திய அரசாங்க வரவு செலவுகள்

நூறு வருஷங்களுக்கு முன் எந்த அரசாங்கம் குறைந்த வரி வசூலித்து ராஜ்ய நிர்வாகம் செய்கின்றதோ அதே சிறந்ததென்று கருதப்பட்டது. அரசியல் வேலைகளும் மிகவும் குறைவாகவே இருந்தன. சைனியம், உள்நாட்டுப் பாதுகாப்பு, அரசர் குடும்பப் பராமரிப்பு முதலியவைகள் கவனிக்கப்பட்டாலே போதுமானதென்று கருதப்பட்டது. சாலைகள், பள்ளிக்கூடங்கள் போன்ற பொதுக் காரியங்களையும் சிறிதளவு ஆதரித்தால் போற்றப்பட்டது. இப்பொழுதோ அரசாங்கத்தின் அலுவல்கள் கணக்கின்றிப் பெருகி விட்டன. அதற்கான செலவும் அதிகரித்து விட்டது. 1939-ம் ஆண்டில் அமெரிக்க ஐக்கிய நாட்டின் மத்திய அரசாங்கத்தின் வருமானம் 500 கோடி டாலர். 1957ல் அது 6900 கோடி டாலராயிற்று. செலவும் அதே அளவில் பெருகியது. பிரிட்டனின் வரவு 1939ல் 94 கோடி பவுன், செலவு 110 கோடி; 1957ல் வரவு 542 கோடி, செலவு 576 கோடி. இதே காலத்தில் இந்திய மத்திய அரசாங்கத்தின் வரவு, செலவுகள் 100 கோடி ரூபாயிலிருந்து 500 கோடியாயிற்று. 1955ல் இம் மூன்று தேசங்களின் மொத்த வருமானங்களும், வரிப் பளுவும் பின்வருமாறு: [எல்லாத் தொகைகளும் தற்போதைய மாற்று விகிதப்படி கோடி ரூபாயாகக் கணக்கிடப்பட்டிருக்கின்றன:]

| தேசம் | மொத்த வருமானம் | வரிப் பளு | நூற்று விகிதம்% |
|---|---|---|---|
| அமெரிக்க ஐக்கிய நாடு | 162,000 | 35,000 | 22 |
| பிரிட்டன் | 20,307 | 7,226 | 35 |
| பாரதம் | 10,000 | 504 | 5 |

பிரிட்டன் தனிப்பட்ட அரசாங்கமாதலால் அதன் வரி வசூலில் அமெரிக்க ஐக்கிய நாட்டிலும், பாரதத்திலும் ராஜ்ய அரசாங்கங்கள் வசூல் செய்யும் தொகைகளும் சேர்ந்திருக்கின்றன. அதற்காக ஒத்திட்டுப் பார்ப்பதற்காக, மூன்றில் ஒரு பாகம் குறைத்தாலும், மத்திய அரசாங்கம் நாட்டு வருமானத்தில் நூற்றுக்கு 20க்கு மேல் எடுத்துக் கொள்ளுகிறது. பாரதத்தில் 1955-ல் மத்திய அரசாங்கம் நூற்றுக்கு 5 வீதமும் ராஜ்ய அரசாங்கங்கள் 3 வீதமும் மொத்தம் 8 வீதம் வரிகள் மூலம் வசூலாயிற்று. புதிய வரிகளைச் சேர்த்தால் இப்பொழுது நாட்டின் வரியின் பளு வருமானத்தில் 100க்கு 10 ரூபாயாகும். மொத்த வருமானம் குறைவாச

இருப்பதால் இதுகூடக் கஷ்டமா யிருக்கிறது. ஆதலால் எதிர்ப்புத் தோன்றுவதில் ஆச்சரிய மில்லை. ஆனால் வரியின் சுமை உலகத்தில் எல்லா நாடுகளிலும் அதிகரித்து வருகிறது. சர்க்கார் பணியும் பெருகுகிறது. வரியைக் குறைக்க வேண்டுமென்றால், அரசாங்க வேலை களையும் குறைக்க வேண்டும். ஒருபுறம் அதிகக் கல்வி வேண்டும், சுகாதாரம் வேண்டும், விஞ்ஞான ஆராய்ச்சி வேண்டும், இதர விஷ யங்களிலும் மற்றத் தேசங்களைப் போல் முன் னேற்றம் வேண்டுமென்று கிளர்ச்சி செய்து மறுபுறம் வரிச்சுமை தாங்க முடியவில்லை, அதைக் குறைக்க வேண்டும் என்று பிடி வாதம் செய்வது நியாயமில்லை.

மத்திய அரசாங்கத்தின் வருமானம் சென்ற ஐந்து வருஷங்களில் பின்வருமாறு மாறி யிருக்கிறது.

| | கோடி ரூபாய்கள் | |
|---|---|---|
| முக்கிய இனங்கள் | 1951—52 | 1956—57 |
| சுங்கம் | 232 | 171 |
| உற்பத்தி வரிகள் | 86 | 189 |
| கார்ப்பரேஷன் வரி | 41 | 48 |
| வருமான வரி | 146 | 141 |
| எஸ்டேட் வரி | — | 3 |
| ஓபியம் | 3 | 2 |
| வட்டி | 2 | 5 |
| அரசாங்க இலாகாக்கள் | 13 | 15 |
| நாணயம் | 11 | 25 |
| கட்டடங்கள் | 2 | 3 |
| இதர வரிகள் | 23 | 19 |
| தபால் தந்தி | 3 | 5 |
| ரயில்வே | 7 | 6 |
| | 569 | 632 |
| பிரதேச அரசாங்கங் களுக்கு வரிப் பங்குகள் | 53 | 64 |
| | 516 | 568 |

மத்திய அரசாங்கச் செலவுகள்:

| இனம் | 1951—52 | 1956—57 |
|---|---|---|
| வரி வசூல் | 16 | 38 |
| வட்டி | 39 | 38 |
| அரசாங்க இலாகாக்கள் | 54 | 134 |
| நாணயம் | 3 | 5 |
| கட்டட வேலை | 11 | 15 |
| பலவகை | 65 | 59 |
| சைனியம் | 171 | 203 |
| பிரதேச மான்யம் | 17 | 30 |
| விசேஷ இனங்கள் | 11 | 12 |
| | 387 | 534 |

மேற்கண்ட புள்ளி விவரங்களிலிருந்து சில முக்கியமான மாறுதல்கள் வெளியாகின்றன. சுங்க வருமானம் குறைந்து வருகின்றது. நமது நாட்டில் புதிதாகப் பல சாமான்கள் செய்யப்படுவதால் வெளிநாடுகளி லிருந்து இறக்குமதி குறைந்து அவற்றின் வாயிலாகக் கிடைக்கும் சுங்க வருமானமும் சுருங்கி வரு கின்றது. நாணயத்தின் மூலம் கிடைக்கும் வருமானம் அதிகரித்திருக்கிறது. முதல்

**அவள் யோசனை!**

வீட்டு எஜமானி (வேலைக்காரியிடம்): இதோ பாரு! உனக்குக் கொடுக்கிற சம்பளத்துக்கு மேலே பல சாமான்களை உடைச்சுட்டே! இப்போ என்ன பண்ணறது?

வேலைக்காரி:—என் சம்பளத்தை உயர்த்திடுங்களேன்!

ஐந்து வருஷத் திட்டத்துக்காக ஏராளமான நோட்டுகள் வழங்கப்பட்டதனால் ஏற்பட்ட லாபம். இந்த வருமானப் பெருக்கால் நாட்டுக்கு நன்மையா தீமையா வென்று நிர்ணயிப்பது சுலபமல்ல. பல புதிய திட்டங்கள் அமுல் செய்யப்படுவதால் நாட்டுக்கு நலம். ஆனால் அவை பயனளிக்கும் வரையில், நாணயப் பெருக்கின் காரணமாக விலைகள் உயர்ந்து பலவிதக் கிளர்ச்சிகளுக்கும் சிக்கல்களுக்கும் இடமுண்டாகின்றது. 1939-ம் வருஷத்திய பொது விலை மட்டம் (இண்டெக்ஸ்) 100 ஆகக் கணக்கிட்டால் அது 1951—52 ல் 434·6, 1956—57 ல் 414, 1957 மார்ச்சு மாதத்தில் 421·3 ஆக விருந்தது. உணவுப் பொருள்களின் விலை மட்டம் 1951—52 ல் 398·6, 1956—57 ல் 388·5, 1957 மார்ச்சில் 402·7. 1951—52ல் விலைகள் உயர்ந்திருந்தன. அடுத்த மூன்று வருஷங்களில் குறைந்து வந்தன. திரும்பவும் 1956 ல் ஏற ஆரம்பித்தன. இன்னும் ஏறிக்கொண்டே இருக்கின்றன. அதன் காரணமாக, சர்க்கார் சேவகர்களும், பாங்கி சிப்பந்திகளும், மற்றச் சம்பளக்காரர்களும் சம்பள உயர்வுக்காகக் கிளர்ச்சிகள் செய்து ஆங்காங்கு வேலைநிறுத்தமும், சத்தியாக்கிரகமும் செய்கின்றனர். மத்திய அரசாங்க சேவகர்களின் ஊதியத்தைப் பற்றி விசாரணை செய்ய ஒரு கமிஷன் 1957 செப்டம்பர் மாதத்தில் நியமிக்கப்பட்டது.

மத்திய அரசாங்கத்தின் வருமான வரி அதிகரிக்காமல் இருப்பது கவனிக்கத் தக்கது. வருமான வரி செலுத்துவோரின் மொத்த வருமானம் ஒரே அளவில் இருந்து வருகிற தென்று ஊகிக்கலாம்.

1954 - 55ல் 4,95,720 ஆசாமிகளிடம் வருமான வரி வசூலிக்கப்பட்டது. இந்தியா வில் விவசாயத்திலிருந்து கிடைக்கும் வரு மானத்துக்கு வருமான வரி விதிக்க மத்திய அரசாங்கத்துக்கு அதிகாரமில்லை. ராஜ்ய சர்க்கார்களுக்கே அது உரிமையாகும். சம்ப ளம் பெறுவோர் வியாபாரம் அல்லது வேறு தொழிலில் சம்பாதிப்போர், முதலுக்கு வட்டி வாங்குவோர், நகரங்களில் வீட்டு வாடகை பெறுவோர் இவர்களிடமிருந்தே வருமான வரி வசூலாகிறது. வருமான வரி செலுத்திய சுமார் ஐந்து லக்ஷம் ஆசாமிகளின் மொத்த வருமானம் ரூ. 760 கோடி. அதில் ரூ. 100 கோடி சாதாரண வருமானவரி; ரூ. 71 கோடி உயர்வரி (சூபர்டாக்ஸ்); ரூ. 5·6 கோடி உபரி வரி (சர்சார்ஜ்) மொத்தம் ரூ. 177 கோடி வரி செலுத்தினர். அவர்களுக்குள் வருஷத் துக்கு ரூ. ஒரு லக்ஷத்துக்கு மேல் வருமான

முள்ளவர்கள் 4794, ரூ. 55,001 லிருந்து லக்ஷம் வரையில் 5889, ரூ. 15001 லிருந்து ரூ. 55,000 வரையில் 72824, ரூ. 10001 லிருந்து ரூ. 15000 வரையில் 68586, ரூ. 4200 த்திலிருந்து ரூ. 10,000 வரையில் 343627. ரூ. 4200க்கு குறைந்த வருமானத்துக்கு அப்பொழுது வருமான வரி இல்லை. ரூபாய் 70,000க்கு மேலுள்ள வருமானங்களுக்குச் சாதாரண வருமான வரி, உயர் வரி, உபரி வரி எல்லாம் சேர்ந்து ரூபாயில் 12 அணாவுக்குச் சிறிது அதிகமாகும். ஒவ்வோர் குழந்தைக்கு ரூ. 300 வீதம் ரூ. 600 வரையில் வரியில்லாத வருமானம் அதிகரிக்கும். சொந்தமாகச் சம்பாதிக்காமல் வட்டி, லாபத்தினால் கிடைக்கும்வருமானத்துக்கு உபரி வரி அதிகம்.

பிரிட்டனில் 1954-55ல் 205 லக்ஷம் பேர்கள் 168 கோடி பவுன் வருமான வரி செலுத்தினர். அவற்றில் வருஷத்துக்கு 6000 பவுனுக்குமேல் வருமானமுள்ளவர்கள் 190 பேர்களே. அவர்களுடைய மொத்த வருமானம் 177 லக்ஷம் பவுன். அதில் 162 லக்ஷம் பவுன் வரியாகச் செலுத்தினர்.

இந்தியாவில் தற்போதைய வருமான வரி பின்வருமாறு:

| வருமானம் ரூபாய் | நூற்று விகிதம் |
|---|---|
| முதல் ரூ. 3000 | 0 |
| அடுத்த ரூ. 2000 | 3% |
| ,, ரூ. 2500 | 6% |
| ,, ரூ. 2500 | 9% |
| ,, ரூ. 2500 | 11% |
| ,, ரூ. 2500 | 14% |
| ,, ரூ. 2500 | 18% |
| அதற்குமேல் | 25% |

உயர்வரி (சூபர் டாக்ஸ்)

| | |
|---|---|
| முதல் ரூ. 20,000 | இல்லை |
| அடுத்த ரூ. 5,000 | 5% |
| ,, ரூ. 5,000 | 15% |
| ,, ரூ. 10,000 | 20% |
| ,, ரூ. 10,000 | 30% |
| ,, ரூ. 10,000 | 35% |
| ,, ரூ. 10,000 | 40% |
| அதற்குமேல் | 45% |

மத்திய அரசாங்கத்தின் செலவு இனங்களைக் கவனித்தால் சைனியத்தின் செலவும், இதர இலாக்காக்களின் செலவும், ராஜ்யங்களின் மானியமும் அதிகரித்து வருகின்றன. பாகிஸ்தானுக்கும் பாரதத்துக்குமுள்ள மனஸ்தாபமும், அமெரிக்க ஐக்கிய நாடு பாகிஸ்தானின் சைனிய விருத்திக்கு அளிக்கும் உதவியுமே நமது சைனியச் செலவின் பெருக்குக்குக் காரணமாகும். முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் பலனாக மத்திய அரசாங்க இலாகாக்கள் வளர்ந்து அவற்றின் செலவு இரு மடங்குக்கு மேலாகி விட்டது. மத்திய சர்க்காரின் அலுவல்களும், தொழில்களும் அதிகரித்துக் கொண்டே போனால், இச் செலவும் பெருகிக் கொண்டுதானிருக்கும். ஆனால் வீண் செலவு அதிகரிக்காமல் இருக்கிறதா, செலவழிக்கும் பணத்துக்குப் பூர்ண பலன் கிடைக்கிறதா என்று நிச்சயமாக முடிவு செய்வது சாத்தியமல்ல. ஓயாமல் இதில் கவனம் செலுத்துவது பார்லிமெண்ட் அங்கத்தினர்களின் கடமையாகும். அவர்கள் அதைச் செய்யத் தவறினால், அவர்களைத் தேர்ந்தெடுத்த வாக்காளர்களின் குற்றமாகும். ஜனநாயகத்தில் அரசாங்கச் செலவுகளைக் கட்டுப்படுத்த வேறு வழியில்லை.

ஐந்தாண்டுத் திட்டத்துக்காக ராஜ்ய அரசாங்கங்கள் தங்கள் வருவாய்க்கு அதிகமாகச் செலவு செய்கின்றன. துண்டுகளை ஈடு செய்ய மத்திய சர்க்கார் பல வழிகளில் உதவ வேண்டியிருக்கிறது. நமது அரசியலின் திட்டத்தின்படி வருமானவரியில் ஒரு பாகம் பிரதேசங்களுக்குப் பங்கிட்டுக் கொடுக்கப்பட வேண்டும். உற்பத்தி வரியிலும் பங்கு கொடுக்கப் பார்லிமெண்டுக்கு அதிகாரம் கொடுக்கப் பட்டிருக்கிறது. மூன்றாவதாக இவ்விரண்டு வழிகளாலும் பெற்ற உதவி போதாமல் வருந்தும் ராஜ்யங்களுக்கு ரொக்க மானியம் கொடுப்பதற்கும் அனுமதி கொடுக்கப்பட்டிருக்கிறது. இவைகளைப்பற்றி மத்திய அரசாங்கத்துக்குச் சிபார்சுகள் செய்வதற்கு ஐந்து வருஷங்களுக்கு ஒரு முறை ஒரு நிதிக் கமிஷன் நியமித்து, அதன் சிபார்சுகளை ஆராய்ந்து பிரதேசங்களுக்கு உதவ வேண்டுமென்று நிபந்தனை செய்யப்பட்டிருக்கிறது. 1951ம் வருஷம் நவம்பர் மாதத்தில் முதல் நிதிக்கமிஷன் நியமிக்கப்பட்டு அது 1952 முடிவில் யாதாஸ்து சமர்ப்பித்தது. அதன் சிபார்சுகளின் பிரகாரமும் வருமானவரியில் 55 சதவிகிதம் (நூற்று விகிதம்) புகையிலை, வனஸ்பதி, நெருப்புப்பெட்டி இவற்றின் மீது விதிக்கப்படும் உற்பத்தி வரியில் 40சதவிகிதம் சில ஏழைப் பிரதேசங்களுக்கு மானியமுமாகச் சேர்ந்து வருஷத்துக்குச் சுமார் ரூ 90 கோடி ராஜ்ய அரசாங்கங்களுக்கு உதவி செய்ய மத்திய சர்க்கார் ஏற்றுக் கொண்டனர். மேலும் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின், பல இனங்களின் செலவுகளின் ஒரு பாகத்தை மத்திய சர்க்கார் ஏற்றுக் கொண்டனர். இந்த உதவி 1951-52 ரூ 17 கோடியிலிருந்து 1955-56ல் ரூ 78 கோடிக்கு அதிகரித்தது.

1956ம் வருஷம் ஜூன் மாதத்தில் இரண்டாவது நிதிக்கமிஷன் நியமிக்கப்பட்டு அது தனது யாதாஸ்தை 1957 செப்டம்பர் முடிவில் சமர்ப்பித்தது. அதன் சிபார்சுகளை அனுசரித்து 1957 ஏப்ரல் 1ம் தேதியிலிருந்து ஐந்து வருஷங்களுக்கு வருமான வரியில் 60 சத விகிதமும், புகையிலை, வனஸ்பதி, நெருப்புப் பெட்டி, சர்க்கரை, காப்பி, தேயிலை, காகிதம், எண்ணெய் ஆகிய சாமான்களின் மீது விதிக்கப்படும் உற்பத்தி வரியில் 25 சத விகிதமும், ரொக்க மானியமாகவும், பிரதி வருஷம் 39·5 கோடி ரூபாயும் தொகை கொடுத்து உதவ முடிவு செய்திருக்கின்றனர். இதைத்தவிர இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் அம்சங்களுக்கு மத்திய சர்க்கார் கொடுப்பதாக ஒப்புக் கொண்டிருக்கும் ஈவுத் தொகை வருஷத்துக்கு ரூ 55 கோடி. இரண்டையும் சேர்த்தால் மத்திய சர்க்காரின் மொத்த உதவி பிரதி வருஷம் ரூபாய் 195 கோடியாகும்.

# கால்கேட் குளோரோபில்* ஈறுகளை பலப்படுத்துகிறது

## வைத்திய சோதனை நிரூபிக்கிறது!



**ஈறுகளைப் பலப்படுத்துகிறது!**

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை வழக்கமாகத் தேய்ப்பதால், குளோரோபில் மூலம் அது ஈறுகளைப்பலப்படுத்துகிறது.

**வாய்நாற்றத்தை அதி தீவிரமாய் ஒழிக்கிறது!**

வேறு சாதாரண பற்பசையை விட மிக மிகத்தீவிரமாக வாய்நாற்றத்தை கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் ஒழிக்கிறது என்பது ருசுவான உண்மை.

**சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது!**

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை ஒவ்வொரு முறையும் சாபபிட்டவுடன் தேய்ப்பதால் பல் எனுமலை அரிக்கும் நாச அமிலங்களும், அவற்றை விளைவிக்கும் கிருமிகளும் குறைகின்றன!

**வேறு எந்த பற் பசையிலும் இதை விட அதிக வீரிய குளோரோபில் இல்லை!**




* நீரில் கரையும் குளோரோபிலின்ஸ் சேர்ந்தது.

**இதோ!** பெரிய எக்கானமி அளவில் கிடைக்கிறது

# திரியும் தீபமும்

பீஷ்மன்

**வா**னிலே விடிவெள்ளி முளைத்திருந்தது. உதயத்தின் இனிய ராகத்தைத் தென்றல் சுமந்து வந்து சோலையிலே தெளித்தது. மரக் கிளைகளில் கூடு கட்டி வாழ்ந்த புள்ளினங்கள் சிலிர்த்துக்கொண்டு எழுந்து குரல் எழுப்பின.

சுமதிக்குத் தூக்கம் கலைந்து விட்டது. படுக்கையில் எழுந்து உட்கார்ந்து கையிரண்டையும் கூப்பி, எதிர்ச் சுவரில் மாட்டப்பட்டிருந்த மீனாக்ஷியம்மன் படத்தை வணங்கி விட்டு எழுந்தாள். படுக்கையறை விளக்கின் மங்கலொளியில் கூடமே உறங்கிக் கொண்டிருந்தது. குழந்தைகள் கால்மாடு, தலைமாடாய்ப் படுத்துக் கிடந்தார்கள்.

தூரத்தில் எங்கோ கோழி கூவியது.

கடிகாரம் 'டிக்-டக்' என்று ஒலித்துக் கொண்டிருந்தது.

சுமதி மணியைப் பார்த்தாள். நான்கு!

சொல்லிவைத்தாற் போல் தினமும் அந்த நேரத்தில் அவளுக்குக் கண் விழித்துவிடும். அப்பொழுதே எழுந்தால்தான் பல் தேய்த்துக் குளித்து விட்டு, அடுப்பை மூட்டிக் காப்பி போடுவதற்குச் சௌகரியமாயிருக்கும். குழந்தைகளும் பெரியவர்களும் அந்த வீட்டில், கண் விழிக்கும்போதே காப்பியை நினைத்துக்கொண்டேதான் எழுவார்கள். ஒவ்வொருவராக அவர்கள் பல் தேய்த்து விட்டுக் கூடத்துக்கு வரும்போது, ஆவி பறக்க, சுடச்சுட, காப்பி அவர்களை எதிர்கொண்டு அழைக்க வேண்டும். இப்படியே அங்கே வழக்கமாகி விட்டது. யாருடைய மனமும் சிறிதும் கோணாமல் நடந்து சுமதிக்குப் பழகிப் போய் விட்டது.

எழுந்து சென்று கிணற்றங்கரையில் பல் தேய்த்துக் கொண்டிருக்கும்போது வாசற்புறத்திலிருந்து 'அம்மா! அம்மா!' என்ற குரலும் கதவு தட்டப்படும் ஓசையும் எழுந்தன. 'வள்ளி வந்து விட்டாள்!' என்று எண்ணிக் கொண்டே "இதோ வரேன், இரு!" என்று குரல் கொடுத்தாள் அவள்.

வாயைக் கொப்பளித்து விட்டுப் போய்க் கதவைத் திறந்தாள். வள்ளிதான் வந்திருந்தாள். காலையில் சுமதி கண் விழிக்கும் போதே வள்ளியும் வந்து வாசல் கதவைத் தட்டி விடுவாள். அப்புறம் பாத்திரங்களைத் தேய்த்துக் கொண்டே சுமதி குளித்து முடியும் வரையில் அவளுடன் ஏதாவது பேச்சுக் கொடுத்துக் கொண்டிருப்பாள்.

"புதுசா ஒரு படம் வந்திருக்கில்லே, அதுக்கு இரண்டாம் ஆட்டத்துக்குப் போய் இருந்தேனம்மா! நல்லாத் தூங்கிப் போயிட்டேன். விடிஞ்சதே தெரியல்லே! அப்புறம் ஆயா வந்து சத்தம் போட்டு எழுப்பிச்சு! மூஞ்சியைக் கழுவிப்புட்டு ஓடோடி வாரேன்!" வெண்கலப் பானையை அழுத்தி, அழுத்தித் தேய்த்துக் கொண்டே வள்ளி பேசினாள்.

"இனத்தை விட அரைமணி நேரம் அதிகமாகிப் போச்சு! அவ்வளவுதானே? இப்போ என்ன குடி முழுகிப் போச்சு!"

வள்ளி பாத்திரத்தின் கரியைப் போக்குவதில் தீவிரமாக இருந்தாள். சுமதி குளித்து முடித்துத் தலை துவட்டிக்கொண்டிருந்தாள்.

கிணற்றங்கரை விளக்கு ஒளி மங்கிக் கொண்டு வந்தது. நிமிர்ந்து உயரே பார்த்தாள் சுமதி. காலையொளி வானில் படர்ந்திருந்தது. கூடத்தில் இன்னும் எல்லோரும் தூங்கிக் கொண்டுதான் இருந்தார்கள். பார்வதி, குழந்தைகள் ராமு, பாலா, சந்திரன் எல்லோரும் கீழே படுத்துக் கொண்டிருந்தார்கள். பெரிய பெண் உஷை கட்டிலில் தூங்கிக்கொண்டிருந்தாள். அங்கு நிலவிய அமைதியைக் கடிகாரம்தான் கலைத்துக் கொண்டிருந்தது.

அடுப்பை மூட்டிக் காப்பிக்குத் தண்ணீர் கொதிக்க வைத்து விட்டு, குடத்தை எடுத்துக் கொண்டு மறுபடியும் கிணற்றடிக்கு வந்தாள் சுமதி.

"சுமதி......!"

அவள் சிந்தனை கலைந்தது. அவர் எழுந்திருந்து விட்டார். அந்த அழைப்பு காப்பிக்குத்தான். அவளுக்கல்ல! —

காப்பியின் மணம் கம்மென்று நாசியை நிறைத்தது. தம்ளரில் காப்பியை ஊற்றி அதை 'டபரா'வில் வைத்து எடுத்துக் கொண்டு கூடத்தை அடுத்திருந்த அறைக்குப் போனாள். ஒருக்களித்திருந்த கதவை மெதுவாகத் திறந்தாள். கூடத்தைப் போலவே அங்கேயும் நீல விளக்கு மெல்லிய ஒளி வீசிக் கொண்டிருந்தது.

கடம்ப மரத்தினால் செய்யப்பட்டிருந்த கட்டிலில் விரித்திருந்த மெத்தை மீது தலைக்கு இரண்டு தலையணைகளும் காலுக்கு இரண்டும் வைத்துக் கொண்டு படுத்திருந்தார், அவள் கணவர் சுந்தரேசன். மூலையிலே கிடந்த ஸ்டூலைக் கட்டிலுக்கு அருகே நகர்த்திப் போட்டு அதன்மீது காப்பி 'டபரா'வை வைத்தாள் அவள். கண்ணை மூடிக்கொண்டு படுத்திருந்த சுந்தரேசனுக்குக் காப்பியின் மணம் கண்ணை மலர்த்தியது.

ஆஜானுபாகுவாய்ப் படுத்துக் கொண்டிருந்த அவரைப் பார்த்தவாறு திகைத்து நின்றாள் அவள்.

"கொண்டு வந்துட்டயா?" என்று உத்தியோக தோரணையில் கேட்டு விட்டு அவர் எழுந்து உட்கார்ந்தார்.

"சரி!"—இந்த 'சரி'க்கு 'நீ போகலாம்' என்று அர்த்தம்.

தினம் நடக்கிற சம்பவம்தான். ஆனாலும் அன்று சுமதிக்கு ஏனோ நெஞ்சை குமுறிக் கொண்டு வந்தது. குளித்து விட்டு மஹாலக்ஷ்மி போலக் குங்குமமும் நெற்றியுமாய் எதிரே வந்து நிற்கும் அவளை அன்புடன் பார்க்கக் கூடவா கூடாது?

தெறித்துவிழத் துடித்த கண்ணீரை அடக்கிக் கொண்டு திரும்பினாள்.

கட்டிலில் புரண்டு கொண்டிருந்த உஷை அவளைப் பார்த்ததும், "எழுந்திருக்கலாமா, சித்தி?" என்று குழறிக் கொண்டே கேட்

டாள். பாவம், அவளுக்கு இன்னும் தூக்கமே கலையவில்லை.

"எழுந்திருக்கலாம்!" என்று சொல்லி விட்டு நடந்தாள்.

பார்வதியைப் படுக்கையில் காணவில்லை. எழுந்து பல் தேய்க்கப் போயிருப்பாள். குழந்தைகள் இன்னும் தூங்கிக் கொண்டுதான் இருந்தன.

தேய்த்த பாத்திரங்களைக் கொணர்ந்து கூடத்தின் மேற்குச் சுவரோரமாய்க் கவிழ்த்துக் கொண்டிருந்தாள் வள்ளி.

சுமதி அவளைக் கடந்து சமையலறைக்குள் போகும்போது வள்ளி அவளைப் பரிதாபமாகப் பார்த்தாள்.

வள்ளியின் அந்தப் பார்வை சுமதியின் இதயத்தில் குமுறிக் கொண்டிருந்த துயரத்தைத் தூண்டி விட்டது.

"தலையைக் கனக்கிற மாதிரி இருக்கு, சுமதி!" புடவைத் தலைப்பால் முகத்தைத் துடைத்துக் கொண்டே பார்வதி வந்து உட்கார்ந்தாள்.

'அழுது தொலைக்கக் கூட முடியாத இது என்ன அவல வாழ்வு?' என்று சுமதிக்கு அப்போது தோன்றியது.

சுமதி அந்த வீட்டுக்கு வந்த பின் பார்வதி ஒரு துரும்பைக் கூட எடுத்துப் போட்டதில்லை. உடம்பு நலுங்காமல்தான் வளைய வந்தாள். ஆனாலும் பாவம்! பெற்றுப் பெற்றே அவள் உடல் நலிந்து போய்விட்டது! குழந்தைகள் எல்லாமே சவலைக் குழந்தைகள். இந்த மனுஷியை மலடியென்று நினைத்து......

காலம் இழைக்கின்ற கோலங்களை நினைக்கும்போது சுமதி வாய் விட்டுச் சிரித்துவிட்டாள். நல்ல வேளை! அருகில் யாரும் இல்லை. உஷை கூடக் காப்பிப் பாத்திரத்தைக் கீழே வைத்துவிட்டுப் போய் விட்டிருந்தாள்.

பழக்க வேகத்தில் காரியங்கள் மளமளவென்று ஆகிக் கொண்டிருந்தன. வெளியே கடிகாரம் ஒன்பது மணி அடித்தது. சமையல் முடிந்திருந்தது. அருணோதயத்தில் அடுப்படிக்கு வந்தவள் இதுவரையில் வேறெங்கும் நகரவேயில்லை. சொல்லப் போனால் அவள் உலகமே வெறும் சமையல் கட்டாக மாறிப்போயிருந்தது.

அடுப்பைத் தணித்து விட்டு நகர்ந்து சுவரில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டாள். கூடம் அமளி — துமளிப்பட்டுக் கொண்டிருந்தது. குழந்தைகள் சாப்பாட்டுக்குத் தயாராகிக் கொண்டிருந்தார்கள்.

"அம்மா, இந்த உஷாவைப் பாரம்மா! அரை மணி நேரமாகக் கண்ணாடி முன்னாலே நின்று தலை வாரிக் கொண்டிருக்கா!......அப்புறம், சீப்பைக் கொடு'ன்னு அடிக்க வரா!" என்று ராமு கத்தினான்.

குழந்தைகளின் இந்தச் சண்டைகளைத் தீர்த்து வைப்பதெல்லாம் பார்வதிதான். குழந்தைகளும் அவளிடம்தான் முறையிடுவார்கள். எப்போதாவது ரகளை பெரிதாகி விட்டால் மட்டும் சுந்தரேசன் வாசல் அறையிலிருந்து உள்ளே வந்து ஒரு அதட்டல் போடுவார். எல்லாம் 'கப் சிப்'பென்று அடங்கிப் போகும். இவை எதற்குமே சம்பந்தமில்லாதவள் போல் சுமதி சமையலறையில் சரண் புகுந்திருப்பாள்.

ஆரம்பத்தில் வாழ்வு அவளுக்கு மிகவும் மனோரஞ்சிதமாகத் தான் இருந்தது. உஷை அவதரித்தாள். சூழ்நிலையில் ஒரு புது ஒளி பரவியது. ஆனால் அந்த ஒளியே அவளை இருட்டிலே தள்ளிவிட்டது.

உஷையின் வரவுதான் உலகுக்கு ஒளியின் வருகையைக் கட்டியம் கூறுகிறது. அந்த வீட்டிலும் கூட உஷையின் ஜனனம் தான் மகிழ்ச்சியின் ஒளியைப் பரப்பியது. ஆனால் அவளைப் பொறுத்தமட்டில்...

இப்படியெல்லாம் இதைப் பற்றியெல்லாம் சுமதி அதிகமாக நினைத்துப் பார்த்தது கிடையாது. ஆனால் இன்று ஏனோ அவள் உள்ளம் பழைய கால நினைவுகளில் இப்படி உருகுகிறதே!



## என்ன செய்யும்?

ஒரு பையன்:—என் எதிரே ஒரு சிங்கம் பாய்ந்து வந்தது...

மற்றவன் (பயப்போடு):—அப்புறம்? உன்னை ஒன்றும் செய்யலையா?

முதல் பையன்: ஒரு தடவை உறுமி என்னை முறைச்சுப் பார்த்தது...

மற்றவன்:— அப்படின்னு நீ எப்படித் தப்பிச்சே?

முதல் பையன்:— மிருகக் காட்சி சாலையில் சிங்கக் கூண்டிலுள்ள சிங்கம் என்னை என்ன செய்துவிட முடியும்?

இந்த வீட்டில் அவள் புகுந்த அந்த நாளை நினைத்துக் கொண்டாள். இரண்டாம் தாரம் என்ற போது அவளுக்கு மனக் கஷ்டமாகத்தான் இருந்தது. ஆனால் ஊரார் எல்லோரும் ஒருமிக்க 'சுமதிக்கு வந்த அதிர்ஷ்டத்தைப் பாரடி' என்று பேசிக் கொண்டது அவள் காதிலும் விழுந்த போது அவளுக்கு மகிழ்ச்சியாகவும் இருந்தது. அவளுடைய குடும்பம் இருந்த ஏழைமை நிலையில் இவ்வளவு செல்வாக்குள்ள இடம் அடைந்ததைத்தான் ஊர் அதிர்ஷ்டம் என்று புகழ்ந்தது. சுந்தரேசனின் கம்பீரமும் அழகும் பொருந்திய முகத்தை நினைத்துப் பார்க்கும் போதும், ஊரார் பேச்சைக் கேட்கும் போதும் அவள் உள்ளம் பெருமையால் பூரித்துத்தான் போகும். ஆனாலும், 'மூத்தாள் உயிருடன் இருக்கும்போது அந்த வீட்டில் போய் எப்படி சௌஜன்யமாக வாழ்க்கை நடத்த முடியும்?' என்ற கேள்வி அவள் மனத்தில் எழும்போதெல்லாம் வேதனையாகத்தான் இருந்தது. கல்யாணத்தன்று கூட, மணப் பந்தலே மகிழ்ச்சியால் நிறைந்திருக்கும்போது கூட அவள் உள்ளத்தில் இப்படி இருவகை எண்ணங்கள் போராடிக் கொண்டுதானிருந்தன.

கிருகப் பிரவேசம் ஆகி, புக்ககம் புகுந்ததுமே இந்தப் போராட்டம் முடிந்து விட்டது. பார்வதி அவளை அத்தனை அன்புடன் வரவேற்றாள். மூத்தவள் சம்மதத்தின் மேல் தான் இந்தக் கல்யாணம் நடக்கிறதென்பது சுமதிக்குத் தெரிந்த விஷயம்தான். ஆனால் 'சம்மதம்' என்பது எவ்வளவு தூரத்துக்கு உண்மை என்பதைப் பற்றிய சம்சயம் அவளுக்கு இல்லாமல் இல்லை. பார்வதியை நேரில் சந்தித்து அவளுடன் உள்ளம் ஒன்றிப் பழகிய பிறகுதான் அவள் மனத்துக்குச் சிறிது நிம்மதி ஏற்பட்டது.

"சுமதி, இந்த வீட்டுக்கு நான் வந்து ஏழு வருஷமாச்சு. அவரும் நானும்தான் குழந்தைகளாக இருக்கிறோம். என்னாலே இந்தக் குலம் விளங்குமென்று எனக்கு நம்பிக்கையில்லை. நானே ஏற்பாடு செய்தது தான் இந்தக் கல்யாணம். நான் உனக்குத் தமக்கை மாதிரி. மனசிலே ஏதும் வித்தியாசமில்லாமல் இரு. இந்தக் குலம் விளங்கக் குத்து விளக்கை ஏற்றி வை."

பேசும் போது பார்வதியின் உள்ளத்தின் ஏக்கம் குரலில் விம்மியது.

சுமதி மெய்சிலிர்த்துப் போய்க் குத்து விளக்கை ஏற்றினாள். குத்துவிளக்கின் ஒளியில் குங்குமமும் நெற்றியுமாய், சுமங்கலியின் ஆதர்சமாய் எதிரே நின்ற பார்வதியைப் பார்த்ததும் அவளுக்கு என்ன தோன்றியதோ, குனிந்து அவளை நமஸ்கரித்தாள்.

'பார்வதி அன்று என்ன என்றுமே குணக் குன்றுதான்' என்று மனத்துக்குள் எண்ணிக் கொண்டாள் சுமதி.

"சுமதி...!"

கூடத்தில் குழந்தைகள் தட்டுக்களை எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டனர். பார்வதி இன்னும் கட்டிலில்தான் படுத்துக் கொண்டிருந்தாள்.

மூலையில் கோணிச் சாக்கில் சுற்றி வைத்திருந்த வாழை இலையை எடுத்துக் கொண்டு போய்க் குழந்தைகளுக்குப் பக்கத்தில் போட்டு, தண்ணீர் தெளித்துத் துடைத்து வைத்தாள் சுமதி.

"உஷா! அந்த மணையை எடுத்துக் கொண்டு வைத்து விட்டு அப்பாவைச் சாப்பிடக் கூப்பிடு!"

"நானே வந்து விட்டேனே!"

சாப்பாட்டு வேளையில் குழந்தைகளுடன் உட்கார்ந்து தான் அவர் சாப்பிடுவார். அரட்டையடித்துக் கொண்டு ஏதோ பந்தி போஜனம் போல இருக்கும். பார்வதிக்கு உடம்பு சரியாக இருந்தால் அவளும் கூடப் பரிமாற வருவாள். இன்று அருணோதயத்தில் ஆரம்பித்த தலைவலி இன்னும் அவளை விட்டபாடாக இல்லை. ஆகவே சுமதி தனியே பரிமாறினாள்.

"என்ன திடீரென உனக்கு உடம்புக்கு?"

சாப்பிட்டுக் கொண்டே பார்வதியை விசாரித்தார் சுந்தரேசன். அப்புறம் குழந்தைகளுடன் ஏதோ வம்பு. ஓடி ஓடிப் பரிமாறிக் கொண்டிருந்த சுமதியிடம் பேச மட்டும் அவருக்குத் தோன்றவே இல்லை.

பொழுது ஓடிக் கொண்டுதான் இருந்தது.

கூடம் வெறிச்சென்று ஆகிவிட்டது. அவர் கோர்ட்டுக்குப் போய் விட்டார். இனி மேல் அவளும் பார்வதியும் தான் அத்தனை பெரிய வீட்டில் 'கொட்டுக் கொட்'டென்று உட்கார்ந்து பொழுதைப் போக்க வேண்டும்.

பார்வதி இன்னும் படுத்துக் கொண்டுதான் இருந்தாள். சாதாரணத் தலைவலியாய் இருந்திருந்தால் இவ்வளவு நேரம் வரைக்கும் எழுந்திருக்காமல் இருக்க மாட்டாளே!

தினமும் அவரும் குழந்தைகளும் வெளியே போன பிறகு, பார்வதியும் அவளும் ஒன்றாக உட்கார்ந்து சாப்பிடுவார்கள். சுமதிக்கு இன்று தனியே சாப்பிடத் தோன்றவில்லை.

கட்டிலின் அருகே போய் நின்றாள்.

பார்வதி கண்ணை மூடிக் கொண்டு படுத்திருந்தாள்: தூங்குகிறாளோ? அவள் நெற்றியில் கை வைத்துப் பார்த்தாள்! நெற்றி அனலாகக் கொதித்துக் கொண்டிருந்தது.

"என்ன அக்கா இது, நல்ல ஜுரம் அடிக்கிறதே!" என்றாள் அவள் பதறிப்போய்.

அவள் மெதுவாகக் கண் திறந்து பார்த்தாள். ஜுரத்தின் கடுமை கண்களின் கலக்கத்தில் தெரிந்தது.

# உங்களுக்கு முற்றிலும் புது மாதிரியான இரு பவுடர்கள்







## ஸாண்டால்

சந்தனத்துடன் கூடிய
பால்கம் பவுடர்...

## ஸாண்டல் வுட் டாய்லட் பவுடர்

சுத்தமான தனி சந்தனத்தை
மென்மையாக்கப்பட்டது...

## டி.எஸ்.ஆர். & கோ

கும்பகோணம்

A. K. GOPAL & CO

ஏஜண்டுகள்: மெஸர்ஸ் தாமஸ் டிரேடிங் கார்ப்பொரேஷன், 1, டாக்டர் சத்திரம் லேன், மேற்கு புலிவார் ரோடு, திருச்சி ; மெஸர்ஸ் கோகுல் ஸ்டோர்ஸ், 179/1, சரத்போஸ் ரோடு, கல்கத்தா-26

---

''நீ சாப்பிட்டாயா, சுமதி? எனக்குக் கொஞ்சம் கஞ்சித் தெளிவு போட்டுக் கொடு. தாகம் நாக்கை வறட்டுகிறது.''

சுமதி அவள் பக்கத்தில் உட்கார்ந்து ஆதரவாகத் தலையை அழுத்திப் பிடித்தாள்.

''சாதாரணத் தலைவலி தான் என்று நினைச்சு நானும் பேசாமல் இருந்துவிட்டேன், அக்கா. குழந்தைகளெல்லாம்கூடப் பள்ளிக்கூடம் போய் விட்டார்களே! டாக்டருக்குச் சொல்லியனுப்பாமல் போய்விட்டேனே!''

''அதுக்கென்னம்மா சாயந்திரம் பார்த்துக் கொள்ளலாம். நீ இன்னும் சாப்பிடவில்லை, இல்லையா? போ. போய்ச் சாப்பிடு. சொல்வதைக் கேளு. ஊம்!''

'பெ'ற்ற தாய்க்குக்கூட இவ்வளவு கரிசனம் இருக்குமோ?' என்று எண்ணிக் கொண்டே எழுந்து சென்றாள் சுமதி.

கரியடுப்பை மூட்டிக் கஞ்சிக்குத் தண்ணீர் வைத்து விட்டு, சாப்பிட உட்கார்ந்தாள். மணி பதினொன்றாகியிருந்தும் அவளுக்கு ஏனோ பசிக்கவேயில்லை அன்று. அல்லது பசியைத்தான் அவள் உணரவில்லையோ? சாப்பாடு அவளுக்கு வேண்டியிருக்கவில்லை.

கொஞ்சம் மோர் சாதம் சாப்பிட்டு விட்டுச் சுமதி எழுந்தாள்.

பார்வதிக்குத் தலைவலி அதிகமாகியிருக்க வேண்டும். 'அம்மா, அம்மா!' என்று அவள் ஈனசுவரத்தில் முனகும் ஒலி அந்தப் பெரிய வீட்டையே சோக மயமாக்கியது.

''ஆனைப் பல்லும் சுக்கும் அரைச்சுக் கொதிக்க வைத்துக் கொண்டு வரட்டுமா, அக்கா!'' என்று கனிவுடன் கேட்டாள் சுமதி.

''அடி அசட்டுப் பெண்ணே! எனக்கு ஒன்றும் இல்லை!'' என்று சிரிக்க முயன்றாள் பெரியவள் வேதனையின் இடையில்.

''ரொம்ப வலிக்கிறதா அக்கா? பேசாமல் கண்ணை மூடிக்கொண்டு படுத்திருங்கோ! இன்னும் கொஞ்ச நேரத்திலே குறைஞ்சிடும்!'' என்று ஆனைப் பல்லை அரைத்துக் கொதிக்க வைத்து, மருந்தை நெற்றியில் தடவியவாறே கூறினாள் சுமதி

பெரியவளின் முகத்தில் இலேசான புன்னகை கோடிட்டு மறைந்தது.

''நீயே ஒரு குழந்தைதான்!''

''என்ன அக்கா?''

''கலியாணமாகி ஏழு வருஷங்கள் வரையில் எனக்கு வயிறு திறக்கவில்லை! குழந்தை என்றால் அவருக்கு உயிர். ஊர்க் குழந்தைகளையெல்லாம் அழைத்து வைத்துக் கொண்டு கொஞ்சுவார். அவருக்கு ஒரு குழந்தை பிறக்கவில்லை. அவர் வாய் திறந்து அதைப் பற்றி என்னிடம் ஒன்றும் சொல்லவேயில்லை. ஆனால் எனக்கேதான் கஷ்டமாக இருந்தது. என் மூலம் அவருக்கு இனிமேல் குழந்தை பிறக்கும் என்று எனக்குத் தோன்றவில்லை. நான்தான் தினம் தினம் அவர் மனசைக் கரைத்து உன்னை அவருக்குக் கலியாணம் செய்து வைத்தேன்.''

''இப்போ என்னத்துக்கு அக்கா அந்தப் பழைய கதையெல்லாம்? தலைவலி அதிகமாகிவிடும். பேசாமல் 'தூங்குங்கோ. மத்தியானம் வள்ளி வந்ததும் டாக்டருக்குச் சொல்லி அனுப்புகிறேன்.''

## நல்ல தேனீ!

வந்தவர்:—என்ன! உங்கள் வீட்டு மரத்தில் தேன் கூடு கட்டியிருக்கே, அதனால் ஏதாவது பிரயோசனம் உண்டா?

வீட்டுக்காரர்:—தேன் கூட்டில் தேனே இல்லை. ஆனாலும் அதனால் ரொம்ப நல்ல பயன் ஏற்பட்டிருக்கு!

வந்தவர்:—என்ன?

வீட்டுக்காரர்:—எங்கள் வீட்டுக்கு வந்திருந்த விருந்தினர்களைப் பல தடவை கொட்டி விரட்டியிருக்கு!

எழுந்து போய்க் கரைந்து கொண்டிருந்த கஞ்சியைக் கவனிக்கலானாள் சுமதி.

அக்காவிடம் 'இப்போ எதற்கு அந்தக் கதை' என்று சொல்லி விட்டு வந்து விட்டாளே யொழிய மனத்தின் இருள் மூலைகளில் பதுங்கிக் கிடந்த நினைவுகள் இப்போது ஒரு மிக்கத் திரண்டு வந்து அந்தப் பழைய கதையை அவளிடம் செ'ல்லும்போது, அவளால் அவற்றைத் தடைசெய்ய முடியவில்லை.

அந்த நாட்களில் அவர்தான் அவளிடம் எவ்வளவு அன்புடன் நடந்துகொண்டார்!

தன் வீட்டுக்குப் பெண்ணும் மாப்பிள்ளையும் வந்து விட்டதைப் போல் பார்வதி அவர்களை நடத்தினாள். தலைவாரிப் பின்னி, பூ வைத்து, நாகரிகமாகப் புடவையுடுத்திக் கொள்ளச் செய்து சுமதியை அழகு பார்ப்பாள். 'உலகத்தில் இப்படியும் அபூர்வப் பிறவிகள் இருக்கிறார்களே!' என்று எண்ணி ஆச்சரியப்படுவாள் சுமதி.

உண்மையில் அவள் வந்த பின் வீடே மகிழ்ச்சிப் பொலிவு பெற்று விட்டது. ஆனால் வேடிக்கையிலும் வேடிக்கையாக, விந்தையிலும் விந்தையாக, சுமதி வந்த சில மாதங்களிலேயே பார்வதி கருவுற்றாள்!

ஒரு நாள் அந்திப் பொழுதில் குமட்டிக் குமட்டிப் பெரியவள் வாந்தி எடுத்துக் கொண்டிருந்தாள்.

சுமதி சத்தம் கேட்டு ஓடிப் போய் வாய் கொப்பளிக்கத் தண்ணீர் எடுத்துக் கொடுத்தாள். முகத்தைக் கழுவிவிட்டு நிமிர்ந்த அக்காளின் முகத்தில் பொலிந்த நாணச் செம்மை அவளுக்கு விஷயத்தை விளக்கி விட்டது. சொல்லத் தெரியாத மகிழ்ச்சியுடன் ''அக்கா...அக்கா...!'' என்று குழறிக் கொண்டிருந்தவள் பக்கத்தில் வந்து நின்ற சுந்தரேசனைக் கவனிக்கவில்லை.

''சுமதீ...!'' என்று அழைத்துப் பார்வதி ஜாடை காட்டிய போதுதான் திடுக்கிட்டுத் திரும்பினாள்.

முகமே மகிழ்ச்சியாகப் பார்வதியைப் பார்த்துக் கொண்டிருந்த சுந்தரேசனின் முகம் சுமதியின் பக்கம் திரும்பியபோது ஏனோ திடீரென்று இருண்டு போயிற்று. முதல் முறையாகத் தன் கணவரின் முகத்திலே அத்தகைய மாறுதலை அன்றுதான் கண்டாள் சுமதி

ஆனால் அந்த மாறுதல் அப்படியே நிலைத்து விடும் என்று அவள் நினைக்கவே இல்லை.

அவருக்கு அவளிடம் வெறுப்பு ஏற்பட்டு விட்டது என்று சொல்ல முடியாது. அவளைப் பார்க்கும் போதெல்லாம் அவரே உணராது செய்துவிட்ட ஏதோவொரு குற்றம் நினைவுக்குக் கொண்டு வரப்படுவதை அவர் உணர்ந்தார். குழந்தைக்காக என்ற நினைப்பில்தான் அவர் கமலியைக் கைப்பிடித்தார். அவர் நினைப்பில் தவறில்லை. கமலி வந்தபின் தான் வீட்டில் குழந்தை பிறந்தது. இல்லை; குழந்தைகள் பிறந்தன. ஆனால் ஒன்றாவது அவளுக்குப் பிறக்க வில்லை. யாருக்குப் பிள்ளையே பிறக்காது என்று நினைத்து அவர் மறுமணம் செய்து கொண்டாரோ, அந்தப் பார்வதி தான் அத்தனை குழந்தைகளுக்கும் தாயாகி நின்றாள்.

கொஞ்ச காலம் பொறுத்திருந்து பாராமல் பார்வதியின் பேச்சைக் கேட்டு அவசரப்பட்டு விட்டதாக அவருக்குத் தோன்றியது. அவரால் கமலியோடு இதயப் பூரிப்புடன் ஒன்றிப் பழக முடிய வில்லை. சிறிது சிறிதாக அவளை விட்டு விலகிய அவர் நாளாவட்டத்தில் அவளுக்கு எட்டாத தொலைவுக்குப் போய் விட்டார். பார்வதி மட்டும் அவள் அந்த வீட்டுக்கு வந்த போது எப்படியிருந்தாளோ அப்படியே தான் இன்னும் நடந்து கொண்டிருந்தாள். சொல்லப் போனால் கமலியின் அதிர்ஷ்டம் தான் வீட்டிலே இப்படிக் குழந்தைகளின் மகிழ்வொளிக்குக் காரணம் என்பது அவளது பரிபூரணமான நம்பிக்கை.

கஞ்சியை எடுத்து ஆற்றிக்கொண்டு போய், "அக்கா!" என்று கூப்பிட்டாள்.

சுவரைப் பார்த்துப் படுத்துக் கொண்டிருந்தவள் சத்தம் கேட்டுப் புரண்டு திரும்பினாள். பார்வதியின் கன்னத்தில் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது. கமலிக்கு உள்ளம் பரபரத்தது.

"ஒன்றுமில்லை, இப்படி உட்காரு!" என்றாள் பார்வதி.

நீட்டிய அவள் கையில் கஞ்சியைக் கொடுத்து விட்டு அவள் பக்கத்தில் உட்கார்ந்தாள் கமலி. 'அவள் ஏன் இப்படி அழுது கொண்டிருக்கிறாள்?'

கஞ்சியைக் குடித்து விட்டுப் பாத்திரத்தைக் கீழே வைத்தாள். கமலியின் கையை அன்புடன் பற்றி மார்பின் மீது வைத்துக் கொண்டாள் பார்வதி.

"உனக்கு எவ்வளவு தங்கமான மனசு, கமலி! உன் வாழ்க்கையை அநாவசியமாகக் கெடுத்து விட்டேன். அவர் உன்னிடம் சரியாகப் பழகுவதே இல்லை. இல்லையா? அதைப் பற்றி நீ வாய் திறந்து ஒரு வார்த்தைகூடச் சொன்னது இல்லை. ஆனால் நான் ஆரம்பத்திலிருந்தே அவரிடம் அவருடைய மாறுபாட்டைப் பற்றிச் சொல்லிக் கொண்டேதான் இருக்கிறேன். அவரும் உன்னோடு சகஜமாகப் பழகத்தான் ஆசைப்படுகிறார். என்னமோ அவருக்கே தெரியாமல் அவர் மாறிப் போய் விட்டார். என்னாலேதானே உனக்கு இந்த நிலை ஏற்பட்டது......!"

பார்வதியின் தெளிந்த இதயத்தை உணர்ச்சி வசத்தில் அவள் பேசிய பேச்சினூடு பார்த்தாள் கமலி.

அவளால் ஒன்றும் பேசமுடியவில்லை.

உள்ளத்தின் அடித்தளத்திலே குமுறிக் கொண்டிருந்த துயரம் பார்வதியின் பேச்சினால் தூண்டப்பட்டு விட்டது. முகத்தை இரு கைகளாலும் மூடிக் கொண்டு விசித்து விசித்து அழத் தொடங்கினாள் கமலி.

தாயின் பரிவுடன் அவளை அருகே இழுத்துத் தன் மேலே சாய்த்துக் கொண்டு, "இதென்ன கமலி! நீ இவ்வளவு கோழையாக இருக்கிறாயே! சே. கண்ணைத் துடைக்கக்கோ!" என்று அவள் கண்ணைத் துடைத்து விட்டாள் பார்வதி.

பொங்கி வந்த விசும்பலைக் கமலியால் அடக்க முடியவில்லை.

"நீ விடுகிற ஒவ்வொரு கண்ணீர்த் துளியும் என்னை எப்படி வதைக்கிறது தெரியுமா கமலி! கவலைப்படாதே. உன் துக்கமோ, சந்தோஷமோ தான் என் துக்கமும் சந்தோஷமும். அவரையும் ஒன்றும் சொல்லறத்துக்கு இல்லை 'நான் ஏன் இப்படி யிருக்கேன்?' என்று அவரே கூடச் சில சமயம் தம்மைத் தாமே கேட்டுக் கொள்கிறமாதிரி பேசுகிறார். சந்தர்ப்பம் கிடைத்த போதெல்லாம் நான் அவரிடம் சொல்லிக்கொண்டேதான் இருக்கிறேன். நீ போய்த் தூங்கு. கூடிய சீக்கிரம் அவரும் மாறிவிடுவார்."

யாரோ வரும் அடியோசை கேட்டது.

நெஞ்சிலே ஏதோ பளுவை ஏற்றி வைத்தாற் போலிருந்தது கமலிக்கு. என்னவென்று அவளுக்குப் புரியவில்லை.

தூங்கிக் கொண்டிருந்தவள் திடுக்கிட்டுக் கண் விழித்துப் பார்த்தாள். நீல விளக்கின் ஒளியில் குழந்தைகள் தூங்கிக் கொண்டிருந்தார்கள். பார்வதி கட்டிலில் படுத்துக் கொண்டிருந்தாள். அவள் பக்கத்தில் அவர் உட்கார்ந்து கொண்டிருக்கிறாரே! ஏன்?...... எழுந்திருக்க நினைத்தவள் ஏதோ எண்ணத்தில் அப்படியே கண்ணை மூடிக்கொண்டு படுத்திருந்தாள். கடிகாரம் 'டிக்-டிக்' என்று விநாடிகளைக் கொட்டிக் கொண்டிருந்தது.

'' ஏன் ஏதாவது கெட்ட சொப்பனம் கண்டாயா? என்னமோ உளறினாயே?''

'அக்கா தூக்கத்தில் பிதற்றியிருக்கிறாள். அதைக் கேட்டுவிட்டுத்தான் அவர் வந்திருக்கிறார்' என்று எண்ணிக் கொண்டாள் சுமதி.

இரவின் நிசப்தத்தினூடு அவரும் பார்வதியும் பேசிக் கொண்டவை அவள் காதுகளுக்குத் தெளிவாகக் கேட்டன.

'' சுமதியை உங்களுக்கு ஏன் இப்படிப் பிடிக்காமலே போய் விட்டது?''

'' எனக்கு அவளைப் பிடிக்கவில்லை என்று உனக்கு யார் சொன்னது?''

'' யாராவது சொல்ல வேணுமா? நானே தெரிந்து கொண்டேன்.''

'' நீ தெரிந்து கொண்டது தப்பு.''

'' அப்படியென்று......?''

'' சுமதியை எனக்குப் பிடித்திருக்கிறது என்பது மட்டுமில்லை. அவளிடம் எனக்கு இருக்கும் பிரியம் கொஞ்சமும் குறையவில்லை. ஆனாலும் ...''

சுமதியின் நெஞ்சு வேகமாக அடித்துக் கொண்டது.

'' ஆனாலும்......?''

''அவளைப் பார்க்கும்போது என்னவோ கஷ்டமாக இருக்கிறது. ஒரு வேளை நீயும் மலடியாகவே இருந்திருந்தால் நான் எப்படி இருப்பேனோ?''

''ஆனாலும் நீங்கள் இப்படியிருக்கிறது என்னமோ நன்றாயில்லை. உங்களை நீங்கள் மாற்றிக் கொண்டுதான் ஆகணும்.''

அவர் அதற்கும் சிரித்தார்.

'' எதற்கும் சிரிப்புத்தானா? நான் கண்ணை மூடிட்டேன்னா அவளோடு சௌஜன்யமாக இருப்பீர்களோ, என்னவோ? என்னாலே பாவம் அது ஒரு வேலைக்காரப் பெண் மாதிரி இந்த வீட்டிலே வளைய வருகிறது.''

'' சும்மா அலட்டிக்காதே. தூங்கு!''

அவர் எழுந்திருந்தார்.

''நான் தூங்குவது இருக்கட்டும்! சுமதி இங்கேதான் தினம் தூங்க வேண்டுமா?''

சுமதிக்கு உடம்பு புல்லரித்தது.

'' அவளை எழுப்பி ...!''

''சரி, தூங்கு. இதற்காக உடம்பை அலட்டிக்காதே! முயற்சி பண்ணியாவது நான் மாறி விடுகிறேன்.''

பார்வதி மெதுவாக ஏதோ பேசினாள். சரியாகக் கேட்கவில்லை. பக்கத்திலே ஏதோ அடியோசை கேட்டது.

நெஞ்சத் துடிப்பைத் தெளிவாகக் கேட்டுக் கொண்டு கண்களை இறுக மூடிக் கொண்டு படுத்திருந்தாள் சுமதி.

'' சுமதி!''

**யானையின் தவறு?**

''போன தடவை வந்திருந்தபோது தந்தப் பிடுங்கல் கொடுத்தீர்களே. அது போனதிலிருந்து எல்லோரும் சொல்கிறார்கள்!''

'' அது எப்படி? ஒரு வேளை அந்த யானைக்கும் சொத்தைப் பல் இருந்திருக்கலாம், ஐயா!''

அவர் குரலை உணர்ந்து அவள் உணர்ச்சிப் பெருக்குடன் எழுந்தாள். பதுமை போல அவர் பின்னே நடந்தாள்.

கூடத்தின் விளிம்பை நெருங்கும் போது திரும்பிக் கட்டிலைப் பார்த்தாள். நீல விளக்கின் ஒளியில் தூங்குவது போன்ற பாசாங்குடன் புன்னகை புரிந்த முகத்துடன் பார்வதி படுத்துக் கொண்டிருந்தாள்.

* * *

'' அம்மா!''

கண்களைக் கசக்கிக் கொண்டு எழுந்தாள் சுமதி. பக்கத்திலே அவர் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தார்.

'' அம்மா!''

'அட, வள்ளி வந்து விட்டாளா? ரொம்ப நேரம் தூங்கி விட்டேனோ?' என்று நினைத்துக் கொண்டே எழுந்து சென்று கதவைத் திறந்தாள். இன்னதென்று சொல்ல முடியாத உற்சாகம் அவள் நடையிலே துள்ளியது.

வள்ளி பாத்திரம் தேய்த்து முடிப்பதற்குள்ளே குளித்து விட்டு வந்து அடுப்பை மூட்டிக் காப்பியும் போட்டு விட்டாள்.

புது மணப் பெண்ணைப் போலக் கையில் காப்பிப் பாத்திரத்துடன் அவர் அறைக்குள் நுழைந்தாள்.

அவர் கண் விழித்திருந்தார்.

''கொண்டு வந்து விட்டாயா? பேஷ்!''

இதுவே அவளுக்கு மகிழ்ச்சியாகிவிட்டது. 'அக்காவை எழுப்பிக் காப்பி கொடுக்க வேண்டும். ராத்திரி வெறும் கஞ்சிதானே சாப்பிட்டாள்?' என்று எண்ணிக் கொண்டே கூடத்துக்கு வந்தாள்.

மணி ஐந்தரைதான் ஆகியிருந்தது.

குழந்தைகள் தூங்கிக்கொண்டிருந்தார்கள். பார்வதியும் தூங்கிக் கொண்டுதான் இருந்தாள். அவளை எழுப்புவதா, வேண்டாமா?

''அக்கா!''

அவள் கையைத் தொட்டு உலுப்பினாள் சுமதி. கை சில்லிட்டிருந்தது. சுமதியின் அழைப்பையோ அவள் தொட்ட கையையோ பார்வதி உணர்ந்ததாகத் தோன்றவில்லை.

வெற்றுத் திரியுடன் நின்ற சுமதியின் வாழ்க்கை விளக்கில் எண்ணெய் வார்த்துத் தீபமேற்றி வைத்துவிட்டுப் பார்வதியின் வாழ்க்கை விளக்கு அணைந்து போயிருந்தது. முந்திய இரவில், நீல விளக்கின் ஒளியில் சுமதி தன் கணவன் பின்னே நடந்து செல்கையில் பார்வதியின் முகத்தில் படர்ந்த புன்னகை மட்டும் இன்னும் அப்படியே நிலைத்து நின்றது!

# நாட்டு வைத்தியம்

- ஸ்ரீஹரி -

## 50. பின்குறிப்பு

"அடாடா! என்னென்னமோ சொல்லிக் கொண்டே வந்தேன்! முக்கியமானதை மறந்து விட்டேனே" என்று ஒரு மணி நேரமாக வள வளவென்று பேசிக் கொண்டிருந்தவர் மீண்டும் ஒரு புதிய அத்தியாயத்தைத் தொடங்குவதுண்டு.

ஊருக்குச் செல்வோரை வழியனுப்ப வருபவரோ நினைத்து நினைத்துக் கொண்டு ஒவ்வொரு விஷயமாகச் சொல்லுவார். சொன்னதையே மறுபடியும் மறுபடியும் சொல்லுவார்.

எட்டுப் பக்கம் கடிதம் எழுதிக் கடைசியில் 'இப்படிக்கு' என்றும் எழுதிக் கையெழுத்திட்ட பிறகு பி. கு: [பின் குறிப்பு] என்று எழுதா விட்டால் கடிதம் ஸர்வாங்க ஸம்பூர்ணமாகாது என்று எண்ணுவோரும் உண்டு.

இதெல்லாம் மறதிக்கு மாற்று. சொல்ல மறந்துவிட்டதை அல்லது சொல்லியதை வலியுறுத்தக் கையாளும் முறைகள்.

கேட்பவரின் ஞாபக சக்தியில் சொல்பவருக்கு நம்பிக்கை இருக்காது. அதனாலும் இவ்விதம் மறுபடியும் மறுபடியும் சொன்னதையே சொல்வதும், 'பி. கு.' இட்டு எழுதியதையே எழுதுவதுமுண்டு.

மறதிக்குப் பெயர் போன மருமகன் ஒருவன். அவனிடம் ஒரு விஷயத்தைச் சொல்லி யனுப்பினாள் அவன் அத்தை. மறந்து விடாமல் இருக்கத் துணியின் தலைப்பில் முடி போட்டுக் கொள்ளச் சொன்னாள். பிறகு 'துணியின் தலைப்பில் முடிபோட்டதையே மறந்து விட்டால்?' என்ற எண்ணம் எழவே, வழிநெடுகவும் தான் சொன்னதை வாய் விட்டுச் சொல்லிக்கொண்டே போகும்படி ஒரு [பி.கு.] எச்சரிக்கையையும் விடுத்தாள்.

ஆனால்...? ஊர் போய்ச் சேர்ந்த மருமகன் தன் தாயாரிடம் சென்று தெரிவித்தது வேறு ஏதோ ஒன்று.

இக் கதையைப் பலரும் பலமுறையும் கேட்டிருப்பார்கள். புதிதல்ல.

நண்பர் ஒருவர் எழுதிய பிறகுதான் வாதரோகங்களைப் பற்றி எழுதி வந்த தொடரில் 'நரித்தலை வாயு' என்பதைப் பற்றி எழுத அடியோடு மறந்து விட்டது நினைவுக்கு வந்தது.

சரிவரச் சிகிச்சை செய்யப்படாத ஆமவாதத்தில் தோஷாம்சம் ஓரளவு முட்டிக் காலில் பதுங்கி நின்று விடும். அப்போதைக்கு அதிக உபத்திரவம் கொடுக்கச் சக்தியற்ற நிலையில் இருக்குமாதலால் அதை நோயாளிகள் பொருட்படுத்தாமலிருந்து விடுவார்கள். ஆனால் ஒரு மூலையில் மிகச் சிறிதளவு பதுங்கி நிற்கும் இந்த விஷம், அற்பக் காரணங்களைச் சாக்கிட்டு மறுபடியும் முழு சொருபத்துடன் உடலெங்கும் பரவும். இப்படிப் பலதரம் நேரிட்டால் முட்டிக் காலில் விஷாம்சத்தின் விளைவாக ஒரு வகை வறட்சி ஏற்படும். முட்டி இயங்குவதற்குஉதவியாயிருக்கும் தாதுக்களெல்லாம் காய்ந்து போகும். முட்டிக்கால் ஓரளவு மடங்கின நிலையில் கெட்டியாகி விடும். முழுவதும் நீட்ட மடக்க முடியாமல் மெலிந்தும் விடும்.

இது முட்டிக் காலில் மட்டும்தான் ஏற்படுமா? இதர பூட்டுகளில் ஏற்படாதா? ஏற்படலாகாதா? எந்தப் பூட்டிலும் ஏற்படலாம். பல பூட்டுகளிலும் ஒரே சமயத்தில் இவ்விதம் ஏற்படவும் செய்யலாம்.

இந் நிலையில் வைத்தியனின் உதவியில்லாமல் சிகிச்சை பெறுவது அசாத்தியம். மாஷ தைலம்,—இந்துப்புவும் கலந்தது - மேற் பூசவும், பூசி ஊறிக் குளிக்கவும் ஏற்றதாகும். மேலும், மாமிசம், மீன் போன்றவைகள் சேர்ந்த கூட்டு மருந்துகளைப் பாலில் வேக விட்டு அரைத்துப் பாலிலேயே தளிப்பித்து எடுத்துக்கொண்டு, இயங்க மாட்டாமல் கெட்டிப்பட்ட நிலையில் நிற்கும் பூட்டுகளின் மேலே வைத்துச் சூடு நிற்கும்படி பொதிந்து கட்டி வைத்திருத்தல் நல்லது. இவ்வாறு கட்டுவதை உபநாஹம் என்பர். இவ்விதம் இரவில் கட்டிய உபநாஹத்தை மறுநாள் காலையில் அவிழ்த்துக் களைந்து விட்டுச் சிறிது நேரம் காற்றுடிய பின் — பகலிலும் இவ்விதம் உபநாஹம் கட்டலாம். அதை இரவில் அவிழ்த்துக் களைந்துவிட்டுமேற்சொன்ன விதமே கட்டலாம்.

இவ்வாறு செய்து வந்தால் காலக்கிரமத்தில் காய்ந்து போன தசைகள் சிறிது சிறிதாக நெய்ப்பை பெற்று இயக்கக் கூடும். ஆனால் இவ்வித நிலைமையில் சிகிச்சை செய்வது எளிதல்ல. பட்டுப் போன மரக் கிளைக்குப் பசுமை ஊட்டுவது போல்தான்.

நரித்தலை வாயு: சரிவரச் சிகிச்சை செய்யப்படாமல் விடப்பட்ட ரத்த வாதத்தில், மேற் சொன்னவிதம் சிறிது தோஷாம்சம் கால் முட்டிகளில் தேங்கி விடுமானால் அதன் விளைவாக நரித்தலை வாயு என்னும் நோய் உண்டாகிறது.

முட்டிக்கால் முழுதுமே ஒரு மட்டை உரிக்காத தேங்காயளவுக்குக் கூடப் பருத்து நிற்கும். முட்டியைச் சேர்ந்த தசைகள் மாமிச கண்டரங்கள் யாவுமே இவ்விதம் பருத்து விடும்போது இப்பருமனே முட்டியின் இயக்கத்துக்கு ஒரு முட்டுக்கட்டையாகி விடும். நடப்பது நிற்பது முதலியவற்றில் அதிகமான சிரமமில்லா விட்டாலும் முட்டியை மடக்கி உட்காருவது இயலாததாகி விடும்; பருமனும் நிலைபெற்று நின்று விடும். இதைத்தான் நரித்தலை வாயு அல்லது 'க்ரோஷ்டுக சீர்ஷம்' என்பர்.

ஆற்றில் ஓடிக் கொண்டே இருக்கும் தண்ணீர் ஏதோகாரணத்தால் உறைந்து பனிக்கட்டியாகி விடுகிறது. பனிக்கட்டி கன பரிமாணத்தில் அதிகமானதாகி ஆற்றின் கரையைக் கடந்து நிற்கும். தண்ணீரின் நடுவே இருந்த கல், மண், முட்புதர், செடி கொடி யாவும் பனிக்கட்டியில் சிக்கி உறைநத நிலையிலேயே நிற்கும். ஓரளவு இந்த நிலைக்கு ஒப்பிட்டுச்சொல்லலாம், ரத்தவாதத்தின் விளைவாக ஏற்படும் நரித்தலைவாயுவை.

மாமிசம், கண்டரம், தசை இவை யாவும் பருமனாகி, நிலைபெற்றுள்ளதைப் போக்குவது எப்படி ? ஹிமாசலத்தில் உறைந்து கிடக்கும் பனிக்கட்டியை உருகச் செய்வது போல்தான். அறவே நீங்குமென உத்தரவாதம் அளிக்க முடியாது.

இந்த நரித்தலை வாயுவில் செய்ய வேண்டிய சிகிச்சை, பொதுவாக ரத்த வாதத்துக்குள்ளதாயிருத்தல் அவசியம்.

உறைந்து போன பனிக்கட்டி உருகச் சூரிய வெப்பம் அவசியமல்லவா ? அதே போல உஷ்ணமும் - நெய்ப்பும் உள்ள மருந்துகள் முட்டிக் காலின் வீக்கத்துக்கு மட்டும் அவசியம். இதற்கு, முன் சொன்ன உபநாஹம்தான் சிறந்தது. ஆனால் அதில் கூட்டும் மருந்துகள் வேறுபட்டதாயிருக்கும்.

'பிரமி' என்று ஒரு கொடி. தண்ணீர் ஓடும் ஓடைகள் முதலியவற்றை ஒட்டிய பிரதேசங்களில் விளைவது. நீளநீளமான கொடிகள். இதில் ஏறத்தாழப் புளியன் இலையைப் போன்ற இலைகள். ஆனால் கள்ளி இலையைப் போல் தடித்திருக்கும். இதை 'நீர்ப் பிரமி' என்றும் சொல்வர்.

இதை எடுத்து உரலில் இட்டு இடித்தால் கொழ கொழ வென்ற ரஸமும் நுரையும் மொத்தையாக வரும்.

ஆமணக்கெண்ணெயை இருப்புச் சட்டியில் இட்டுக் கரிக் கும்மட்டியில் காய்ச்சும்போது, மேற்சொன்ன விதம் இடித்த பிரமியை இட்டு வதக்கவும். இது பொறுக்கும் சூடாக உள்ளபோது 'நரித்தலை வாயு'வினால் பருத்து வீக்கமுற்றுள்ள முட்டிகளின் மேல் உஷ்ண வீர்யமான தைலத்தைத் தடவி, மேற்சொன்னபடி வதக்கிச் சூடாக்கிய பச்சிலையால் ஒத்தடம் கொடுக்கவும். பத்து, பதினைந்து நிமிஷம் ஒத்தடம் கொடுத்த பிறகு, பொறுக்கும் சூடுள்ள போது இம்மருந்தையே முட்டியில் அப்பி ஆமணக்கின் இலையால் பொதிந்து கட்டி விடவும். இதுவும் உபநாஹமே.

ஏற்கனவே விளக்கப்பட்ட விதத்தில் இவ்வுபநாஹத்தை இரவில் கட்டியதைக் காலையில் அவிழ்த்து மருந்துகளைக் களைந்து, பற்றிட்ட இடத்தைக் கழுவிச் சற்றுக் காற்றுடவிட வேண்டும்.

இச்சந்தர்ப்பத்தில் 'மயன தைலம்' என்று தேரையர் தெரிவித்துள்ள தைலத்தை வீக்கமுள்ள பாகத்தில் மேலே பூசி வைப்பது நல்லது.

இம் 'மயன தைல'த்தை 'மெழுகு தைலம்' என்றும் காந்த 'மயன தைலம்' என்றும் அழைப்பர். காற்றில் காய்ந்து விடும் இயல்பு பெற்ற இத் தைலத்துக்குப் பல விசேஷ குணங்கள் உண்டு. இதைப் பூசிக் கொண்டிருக்கும் போதே இது காய்ந்து கொண்டும் வரும். பிறகு அவ்விடத்தில் முத்து முத்தாக வியர்வை கசியும்.

உபநாஹம் தினம் ஒன்று அல்லது இரண்டு தரம் கட்டுவதும், இடையிலுள்ள நேரத்தில் மேற்சொன்ன மெழுகு தைலத்தைப் பூசுவதும் நல்லது. காலக்கிரமத்தில் நரித்தலை வாயுவின் வீக்கம் குறையும்.

உள்ளுக்குச்சாப்பிடவேண்டிய மருந்துகளும் ஆகாரத்தில் பத்தியங்களும்-ரத்த வாதத்தில் சொன்னவிதமேதான்.

# பொன்னி எங்கே?

## 2

ஒரு பெண்ணைத் தன் இதயத்தில் ஏற்றிக் கொண்டவுடனேயே அவன் புது மனிதன் ஆகிவிடுகிறான். பார்க்க இயலாத, பிரிக்கமுடியாத ஒன்றினால் அவள் அவனைப் பிணைத்துக் கொண்டு விடுகிறாள். காதல் வாழ்க்கையில் வீரச் செயல்களுக்கு நிறைய இடம் ஏற்பட்டு விடுகிறது. வாழ்க்கையில் எல்லையற்ற இன்பத்தை அளிக்கும் சக்தியும் காதலுக்குத்தான் உண்டு. 'காற்றிலேறி அவ்விண்ணையும் சாடுவோம் காதற் பெண்கள் கடைக்கண் பணியிலே!' என்று கவியரசர் பாரதியார் பொற்குழல் எடுத்தல்லவா ஆடிப் பாடி ஊதியிருக்கிறார்!

இந்த அற்புத சக்தி திடீரென்று இளங்கோவனுக்கு ஏற்பட்டு விட்டது. தன்னை நோக்கி வேகமாகப் பாய்ந்து வந்த பசுவைக் கண்டு அவன் மிரளவில்லை. அதனுடன் போராடும் அளவுக்கு மன உறுதியே அவனுக்கு ஏற்பட்டு விட்டது. ஆனால் அதற்கு மலர்விழி இடம் கொடுக்கவில்லை. இளங்கோவனை நோக்கித் தன் பசு பாய்வதைப் பார்த்தவுடன் அவள் அழுகை எங்கோ ஓடி மறைந்து விட்டது. "ஊர்வசி!" என்று பயங்கரமாகக் கத்தினாள். அந்தச் சொல்லில் என்ன மந்திர சக்திதான் இருந்ததோ! பசு அப்படியே நின்று விட்டது. தன்னுடைய மூர்க்கத்தனத்தையெல்லாம் விட்டு விட்டு மலர்விழியின் அருகில் வந்து அவள் கன்னத்துடன் தன் கன்னத்தை உராய்ந்தது. தான் செய்த தவறுக்குத் தன்னை மன்னித்து விடும்படி கெஞ்சுவதுபோலக் குழைந்தது.




இளங்கோவனுக்கு ஒன்றும் புரியவில்லை. ஒரு கணம் இந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டு மௌனமாக இருந்தான். பிறகு மனம் தெளிந்து பேசினான்.

"இப்பொழுதுதான் தெரிகிறது உன்னிடம் உள்ள சக்தி" என்றான்.

"எந்தச் சக்தியைச் சொல்லுகிறீர்கள்?"

"அன்பின் சக்தியைத்தான்."

"எனக்கு இந்தப் பசுதான் தோழி! நான் இதை ஆசையோடு நேசிக்கிறேன். அதுவும் என்னிடம் மிகவும் அன்போடு இருக்கிறது."

"மனிதர்களைவிட உனக்கு இந்தப் பசுவிடம்தான் அன்பு அதிகம் போலும்!"

"என்னிடம் பயன் கருதாமல் அன்பு காட்டுவது இந்தப் பசு ஒன்றுதான். எனக்கு வாழ்க்கையில் இருக்கும் இன்பமே இந்தப் பசு என்மேல் கொண்டுள்ள அன்பும், நான் அதனிடம் காட்டும் பிரியமும்தான்."

"உன்னுடைய காரியமெல்லாமே ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. அது இருக்கட்டும். நீ ஏன் அப்படித் திடீரென்று அழுதாய். நான் உன்னை ஏமாற்றி விடுவேன்; திருமணம் செய்து கொள்ள மாட்டேன் என்றா?"

"இளங்கோவே! நீங்கள் எழுத்தாளர்; கவிஞர். உங்களால் இந்த நாட்டுக்கு எவ்வளவோ புகழும் பெருமையும் ஏற்பட வேண்டும். என்மீது தாங்கள் கொண்டிருக்கும் அன்பால் அவையெல்லாம் பாழாகிவிடுமே என்று நினைத்தபோது துக்கம் தொண்டையை அடைத்துக் கொண்டது. என்னையும் மீறி அழுது விட்டேன்."

"ஏன் அப்படிச் சொல்லுகிறாய்?"

"என்னுடைய துரதிருஷ்டம் என்னுடனேயே இருக்கட்டும். எனக்கு நல்வாழ்வு இருக்கவேண்டும் என்று ஆண்டவன் விரும்பியிருந்தால், நான் ஏன் இப்படி அநாதையாகக் கிடக்கிறேன். எங்காவது நல்ல இடத்தில் பிறந்திருக்க மாட்டேனா? தாய் தந்தையோடு, அண்ணன் தங்கையோடு இருக்க






மாட்டேனா? ஆண்டவனுக்கே என் மகிழ்ச்சியில் விருப்பமில்லை. என்றால் தங்கள் சுக வாழ்வும் இணையற்ற புகழும் பறி போக வேண்டுமா? வேண்டாம்; வேண்டவே வேண்டாம். தங்கள்மீது எனக்கு ஏற்பட்டிருக்கும் அளவு கடந்த அன்பினால், இல்லை; காதலால் தான் இப்படிச் சொல்லுகிறேன்.''

''மலர்விழி! நீ யாருடன் பேசுகிறாய் என்பதை மறந்து விட்டாய். நான் பட வேண்டிய கஷ்டங்கள் எல்லாம் பட்டுவிட்டேன். இன்று என் வாழ்வில் புது அத்தியாயம் ஆரம்பமாக வேண்டும் என்பதுதான் ஆண்டவன் விருப்பம். அதற்காகவே என்னையும் உன்னையும் சந்திக்கச் செய்திருக்கிறார்'' என்று சொல்லிக் கொண்டே மலர்விழியின் கரங்களைப் பற்றினான் இளங்கோவன்.

அவன் தன் கரங்களைப் பற்றியதும் மலர்விழி அவன் அருகில் சற்று நெருங்கி நின்றாள். இளங்கோவன் சொன்னான்:

''எங்கும் நிறைந்திருக்கும் ஆண்டவன் சன்னிதியில் சத்தியம் செய்கிறேன். இந்த உலகில் இரண்டு பெண்களைத்தான் நம்புகிறேன். ஒருத்தி, என் வாழ்க்கைக்கு வழி காட்டிய இலக்கியப் பெண். மற்றொருத்தி, என் வாழ்வில் இன்பம் அளிக்க வந்த நீ. இலக்கியப் பெண்ணின் சேவையும், உன் காதலும் தவிர எனக்கு வேறு எந்தப் பெண்ணின் நினைவும் கிடையாது. உன்னைத் தவிர வேறு யாரையும் என்னால் நினைக்க முடியாது. என் உயிருக்கு உயிராக இருக்கும் இன்பமே! என் இதயத் துடிப்பை நீ அறிய மாட்டாய்!''

இந்தச் சமயத்தில் மலர்விழியைத் தனிமையில் விட்டு விட்டு அவன் வெள்ளைப் பசு வீடு நோக்கிப் புறப்பட்டது.

வெள்ளைப் பசு வீடு திரும்பியதைப் பார்த்ததும்தான் மலர்விழிக்கு வீட்டு நினைவு வந்தது.

''இன்று அதிக நேரமாகி விட்டது! நேரம் கழித்துச் சென்றால் என் தந்தை கோபித்துக் கொள்வார்'' என்றாள்.

''சரி, நீ உன் வீட்டுக்குப் புறப்படு. தினமும் இங்கு வருவாயா?'' என்று கேட்டான்.

''ஓ, வருவேன். தினமும் வருவேன்.''

''நாளை இந்த நேரத்துக்கு நான் வந்து உனக்காகக் காத்துக் கொண்டிருப்பேன். நீ தவறாமல் வந்துவிட வேண்டும்!''

''கட்டாயம் வருகிறேன்'' என்றாள்.

அவல் நிறைந்த குரலில், விடை கொடுக்க மனமின்றி ''சரி!'' என்றான்.

''நம்முடைய எண்ணம் ஈடேறும் இன்ப நாளை, பொன்னாளை ஆவலுடன் எதிர்பார்த்திருக்கிறேன்'' என்றாள்.

இளங்கோவனுக்கோ, மலர்விழியை அப்படியே குழந்தைபோல் வாரி எடுத்துக்கொள்ள வேண்டும் போலிருந்தது. ஆனால் அதற்கான துணிவு பிறக்கவில்லை.

பிரியமனமில்லாமல் அவள் பிரிந்தாள். நின்ற இடத்தில் இருந்து அசையாமல் அவள் செல்வதையே பார்த்துக் கொண்டிருந்தான் இளங்கோவன். அவளும் அடிக்கடி திரும்பிப் பார்த்துக் கொண்டே சென்றாள். அவள் உருவம் மறையும் வரையில் அங்கேயே நின்றான். அவள் உருவம் மறைந்து விட்டது. ஆயினும் அவன் அசையவில்லை. சிலைபோல நின்றான்; நின்றான்; நின்றுகொண்டே இருந்தான். வானத்தில் சந்திரன் உதயமாகித் தன் பால் நிலவைப் பொழியும் வரையில் அதே இடத்தில் நின்றான். பிறகு அவன் நினைவு கலைந்தது. மன்மதன் வித்தையால் அவன் புத்தி, மனம், சித்தம், புலன் ஒன்றும் அறியாமல் ஏதோ இயந்திரம்போல வீடு போய்ச் சேர்ந்தான்.

*** *** ***

**வா**னவீதியில் பௌர்ணமிச் சந்திரன் ஒய்யாரமாகப் பவனி வந்து கொண்டிருந்தது. அதனுடைய ஒளியைத் தாங்கி ஓங்கி வளர்ந்திருந்த தென்னை மரங்களின் நிழல்கள் தரையில் நீண்டு கிடந்தன. அது பல வீரர்கள் அணிவகுத்து நின்று மலர்விழியின் வீட்டைக் கவனமாகக் காவல் காப்பது போலிருந்தது. அந்த வீட்டின் இடது புறத்தில் மேகங்களின் நிழல்கள் மெதுவாக ஓடிக் கொண்டிருந்தன. மேகக் கூட்டங்கள் சந்திரனின் தண் ஒளியில் பிரகாசமாகத் தெரிந்தன.

பௌர்ணமி நிலவைக் கண்டு பொங்கும் கடல் போல மலர்விழியின் இதயம் பொங்கியது. படுக்கையில் புரண்டு கொண்டிருந்தாள். அவளால் பாயின் மீது படுத்துக் கிடக்க முடியவில்லை. மலர்விழி தன்னுடைய படுக்கையிலிருந்து எழுந்தாள். தோட்டத்துக் கதவை மெதுவாகத் திறந்து பயத்துடன் வெளியே வந்தாள். அந்தப் பௌர்ணமி இரவில் உறங்கிக் கிடக்கும் உலகத்தில் அவள் மட்டும் விழித்திருந்தாள். இளமையின் ரகசியத்தையும் இன்பத்தையும் எடுத்துக் காட்டுவது போல இருந்தது மலர்விழியின் வீட்டுத் தோட்டத்தில் நிலவிய அமைதி. ஒரு சொல்லைக் கூடச் சொல்லுவதற்குச் சக்தியில்லாதவளாய் மலர்விழி நின்று கொண்டிருந்தாள். ஆசை ததும்பும் கண்களால் ஆகாயத்தை அண்ணாந்து பார்த்தாள். பௌர்ணமி நிலவு அவளைப் பார்த்துச் சிரித்தது. அது இளங்கோவனே சந்திரனாகச் சிரிப்பது போலிருந்தது

அவளுக்கு. மறுபடியும் இளங்கோவனைச் சந்திக்கச் சந்தர்ப்பம் 'கிடைக்குமா? தான் மாலையில் கண்டதெல்லாம், கேட்டதெல்லாம் உண்மைதானா? இல்லை, கனவுத் தோற்றமா? இப்படிச் சிந்தித்த வண்ணம் அவள் அங்கு பரவலாகக் கிடந்த வைக்கோல் பரப்பின் மேல் சாய்ந்து விட்டாள். கைகளைக் கோத்துக் கழுத்தைக் கட்டிக் கொண்டு மல்லாந்து படுத்தாள்.

நீல வானத்தில் மின்னும் நட்சத்திரங்கள் புடைசூழப் பவனி வரும் சந்திரன் அவளைப் பார்த்து இப்பொழுது கண்ணைச் சிமிட்டுவது போலிருந்தது. அதிலே இளங்கோவனின் உருவம் நன்றாகத் தெரிந்தது. திடீரென்று சந்திரனில் தெரிந்த இளங்கோவனுக்கு அருகில் மலர்விழியும் தோன்றினாள். அவள் தோள் மீது உரிமையோடு கையை வைத்துப் பேசத் தொடங்கினாள். ஆனால் வாயிலிருந்து வார்த்தைகள் வரவில்லை. அவள் உள்ளத்தில் பொங்கி வரும் கருத்தை அவள் கரிய விழிகள் பேசின. உணர்ச்சி மிகுதியால் அவள் செம்பவள இதழ்கள் மெல்லிய தழைகளைப் போல் துடிதுடித்தன.

இந்தக் காட்சியை இன்னும் தெளிவாகக் காண வேண்டும் என்ற ஆசையில் தன் கண்களை இறுக மூடிக் கொண்டாள்.

அடுத்த கணமே அவள் முன்னால் இளங்கோவன் தோன்றினான். அந்தக் கணமே அவன் கையைப் பற்றிக் கொண்டாள். அவனும் அவள் கையைப் பற்றிக் கொண்டான். ஒருவருக்கொருவர் பிடியைத் தளர்த்த நெடு நேரம் பிடித்தது. இருவர் கண்களிலும் ஆனந்தக் கண்ணீர் மிதந்து வந்தது. மெதுவாக இளங்கோவன் மலர்'விழியின் கரங்களிலிருந்து தன்பிடியைத் தளர்த்தினான். ஆசை பொங்கும் அவள் முகத்தைப் பார்த்து, '' என் அன்பே, மலர்விழி!'' என்றான்.

அவள் தன்னுடைய தலையை அசைத்தாளே ஒழிய வாய்திறந்து பேசவில்லை.

'' நாம் இனிமேல் ஒருவரை ஒருவர், ஒரு கணமும் பிரியக் கூடாது'' என்றான்.

'' நான் இனித் தங்களை விடமாட்டேன்.''

''அன்பே! இனி என்னாலும் உன்னைவிட்டுப் போக முடியாது. இதில் என்ன முடிவு ஏற்பட்டாலும் சரிதான். நான் பின்வாங்கப் போவதில்லை. இன்றோடு நம் வாழ்வு முடிவடைகிறதாக இருந்தாலும் சரி. முடிந்து போகட்டும். ஒருவரைப் பிரிந்து ஒருவர் நீண்ட நாள் தனிமையில் வேதனைப்படுவதுடன் இன்று ஒரு நாளாவது சந்தோஷமாக இருந்துவிட்டு இறந்து போவோம்.''

'' ஆமாம். இறந்து போங்கள். மரணம் உங்களைக் கைநீட்டி அழைக்கிறது'' என்ற குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தாள் மலர்விழி. அவள் வளர்ப்புத் தந்தை பெரியசாமி அங்கு நின்று கொண்டிருந்தார்.



அவரைப் பார்த்தவுடன் மலர்விழி திடுக்கிட்டுப் போனுள். 'ஆ !' என்று பயங்கரமாக அலறினுள். அவள் கனவு கலைந்து விட்டது. துடிதுடித்து எழுந்து நின்ருள். கண்களைக் கசக்கி விட்டுக்கொண்டு பார்த்தாள்.

உண்மையாகவே அவள் எதிரில் பெரியசாமி நின்று கொண்டிருந்தார். அவள் அலறல் சத்தத்தைக் கேட்டு அப்பொழுதுதான் அங்கு வந்த பெரியசாமியின் மீசை காரணம் தெரியாமல் படபடத்துக் கொண்டிருந்தது. பயங்கரமாகக் கண்களை உருட்டி மலர் விழியைப் பார்த்தார். ''இந்த நடு இரவில் இங்கு வந்து என்ன பண்ணுகிருய்?'' என்று கேட்டார்.



மலர்விழி மிரள மிரள விழித்தாள். ஏதோ சொல்ல வாயெடுத்தாள். வாயிலிருந்து வார்த்தைகள் ஒன்றும் வரவில்லை.

பெரியசாமியின் கோபம் நிறைந்த முகத்தை அவளால் பார்க்கவே முடியவில்லை. அதைப் பார்த்தால் அவள் உயிரே போய் விடும் போலிருந்தது. திரும்பித் திரும்பிப் பெரியசாமியைப் பார்த்த வண்ணம் மலர்விழி உள்ளே போய் விட்டாள்.

*** *** ***

மறுநாள். பொழுது புலர்ந்தது. பொற்கோழி கூவிற்று. கீழ்வானத்தில் சூரியன் ஜகஜ்ஜோதியுடன் தோன்றியது. நடுப்பகல் ஆயிற்று. மாலை வந்தது. மேற்கு வானத்தில் சூரியன் மறைந்து கொண்டிருந்தது. மறைந்து கொண்டிருந்த சூரியனை மேகக் கூட்டங்கள் மறைத்துக் கொண்டிருந்தன. அந்த மேகக் கூட்டங்களைத் துளைத்துக் கொண்டு சூரியனின் இனிய ஒளிக் கற்றைகள் வான வெளியில் வர்ண ஜால வித்தைகளைக் காட்டிக் கொண்டிருந்தன. மேல் வானத்தில் யாரோ தங்கத் தூளைத் தூவி விட்டது போல் செக்கர்வானத்தின் வண்ணம் மனத்தைக் கவ்வி இழுத்தது.

இந்த ஒளி ஜாலங்களைப் பின்னணியாகக் கொண்டு சிறந்த கலைஞனின் உயிர் ஓவியம் போல இளங்கோவன் நின்று கொண்டிருந்தான். தாழ்ந்து படர்ந்திருந்த மாமரத்தின் கிளையில் கையை ஊன்றிக் கொண்டு எதிரில் தெரிந்த தோப்பில் எதையோ பார்த்துக் கொண்டிருந்தான். நேற்று எந்த மாதிரி சூழ்நிலை இருந்ததோ அதே போல்தான் இன்றும் இருந்தது. ஆனுல் ஒரே ஒரு வித்தியாசம். நேற்று இளங்கோவன் பூரண அமைதியோடு அங்கு நின்று கொண்டிருந்தான். இப்போதோ அவன் பொறுமையற்றுக் காத்திருந்தான். இன்னும் சற்று நேரத்தில் மலர்விழி வரத்தான் வேண்டும். அதைப் பற்றி அவனுக்குச் சந்தேகமில்லை. ஆனுல் அவளைக் காண்பதற்காக, அவளுடன் பேசுவதற்காகத் துடியாய்த் துடித்துக் கொண்டிருந்தான்.

'' மலர்விழி! மலர்விழி! என்னை மறந்து விட்டாயா?'' என்று வாய் விட்டே சொல்லிக் கொண்டான். தோப்பு இருந்த திசையை ஆவலோடு பார்த்தான். அங்கிருந்த காதற் பறவைகளைப் பார்த்தான். அவை இரண்டும் 'கீச் கீச்' என்று தங்கள் மொழியில் ஏதோ பேசிக் கொண்டன. இளங்கோவனைப் பார்த்துத்தான் அவை ஏதோ பேசிக் கொள்வதுபோல் தோன்றியது. இளங் காற்றில் அந்தத் தோப்பில் இருந்த மரங்கள் அசைவது, அதன் இலைகள் படபடவென்று துடிப்பது எல்லாம் அவனைப் பார்த்துக் கேலியாகச் சிரிப்பது போல் இருந்தது. சற்று நேரம் கையைப் பின்னுல் கட்டிக்கொண்டு அமைதியில்லாமல் நடந்தான். மீண்டும் அந்த மாமரத்தின் கிளையில் கையை ஊன்றிக் கொண்டு நின்ருன். தன்னைப் பற்றியே மனத்துக்குள் நினைத்தான்.

'இந்த இதயத்தின் மர்மத்தைப் புரிந்துகொள்ள முடியவில்லையே! இந்தப் பொல்லாத மனத்தின் போக்கைக் கண்டு திடுக்கிட அல்லவா வேண்டியிருக்கிறது! நேற்று வரை தான் இலட்சிய புருஷனுக வாழ்ந்தேன். என்னுடைய மன உறுதியை எண்ணி நானே பெருமைப்பட்டுக் கொண்டிருந்தேன். ஆனுல் அந்த உறுதியின் அடித்தளத்தில் அறிவின் சக்திக்கு அடங்காத ஒன்று இருப்பதை நான் உணரவில்லை; உணர்ந்து கொள்ளும் சக்தியும் இல்லை. இதற்கு நான் என்ன செய்வேன்? பட்டிக் காட்டுக் கிராமத்தில் ஒரு பொற்பாவை; பெண் தெய்வம். அந்தத் தெய்வத்தின் சக்தியால் இங்குள்ள மரங்களும் இலைகளும்கூட வித்தைகள் புரிகின்றன. 'உஸ்' ஸென்று அடிக்கும் காற்று, 'ஙொய்' என்று ரீங்காரத்துடன் தேன் அடையைச் சுற்றி மொய்க்கும் தேனீக்கள் எல்லாமே இனிய சுருதியுடன் கீதம் இசைக்கின்றன. இங்குள்ள ஒவ்வொரு பொருளும் உணர்ச்சியும் உயிரும் உள்ள காந்தப் பொருளாக மாறி என் இதயத்தில் புகுந்து மோகவலையில் வீழ்த்துகிறது. இதற்கு முன் எத்தனையோ பெண்களைப் பார்த்திருக்கிறேன். இங்கே மலர்விழியின் பொன்வண்ணத் தேகத்துக்கு அவள் வெள்ளைப்பகவும், காட்டு மலர்களும் தங்கள் மௌன மொழியில் அமுதத்தைக் கலந்து அழகு செய்கின்றன. என்ன காரணமோ, இவளைப் பார்த்ததும் பாரதியின் 'அழகுத் தெய்வம்' என்ற பாட்டின் தலைவியே இப்படிப் பெண் உருவில் வந்து நிற்கிருளோ என்று எண்ணவேண்டி யிருக்கிறது. அந்தப் பாட்டின் இசையில் உள்ள இனிமையெல்லாம் இவ்வாறு உருவெடுத்துக் கண்ணெதிரே வந்திருப்பதுபோல் தோன்றுகிறது! கதைகளிலே, கற்பனையிலே வருவதுபோல் அல்லவா என் வாழ்வில் வந்து புகுந்து விட்டாள். நேற்று அவளைப் பார்த்த அந்தக் கணத்திலேயே ஏதோ நெடுநாள் பழகிய ஒரு பெண்ணிடம் ஏற்படும் உணர்ச்சியல்லவா எனக்கு ஏற்பட்டு விட்டது! எதையுமே யோசிக்காமல் என் இதயத்தைத் திறந்து கொட்டி விட்டேனே. இதை யாரிடமாவது சொன்

நான் மிகவும் விரும்புவது...

# பிரிபெக்ட்

## அழகு சோப்

- லட்சக்கணக்கான மக்கள் அதிசயிக்கத் தக்க, ஆனந்தமடையக் கூடிய நறுமணத்தைப் பெற்றிருக்கிறது
- எப்பொழுதும் புத்துணர்ச்சியுடனும் பொலிவுடனும் திகழச் செய்கிறது




மோடி சோப் ஓர்க்ஸ், மோடிநகர் (U. P.)

MS/NP/10

சென்னை நகர ஏஜெண்டுகள்

மெஸர்ஸ் பாப்புலர் டிரேடிங் கார்ப்பொரேஷன், 4, நாராயண முதலித் தெரு, சென்னை -1

னால் நம்பக்கூட மாட்டார்களே! ஏன், இது போல் இன்னொருவர் வாழ்க்கையில் நடந்ததாக யாராவது என்னிடம் கூறினால் நானே அதை நம்ப மாட்டேன். நம்ப முடியாத ஒன்று; நடக்க முடியாத ஒன்று; நினைக்க முடியாத ஒன்று; என் வாழ்வில் நிகழ்ந்து விட்டதை நினைத்தால் எனக்கே வியப்பாக இருக்கிறது. இதை யெல்லாம் நினைக்கும் போது எனக்குப் பைத்தியமே பிடித்து விடும்போ லிருக்கிறதே!'

இப்படியாக ஒரு கணம் தன்னைப் பற்றி எண்ணினான். மறுகணம் மலர் விழியைப்பற்றி நினைத்தான். திடீரென்று மலர்விழி மீது அவனுக்குச் சந்தேகம் தோன்ற ஆரம்பித்து விட்டது. அவள் உண்மையாகவே தன்னை நேசிக்கிறாளா? இல்லை......இப்படி அவன் மனத்திலே காரண மில்லாமல் எழுந்து கொண்டிருந்த சந்தேகங்களை யெல்லாம் விரட்டியடித்துக் கொண்டிருந்தான். 'அம்மம்மா!' என்ற வெள்ளைப் பசுவின் குரல் அவன் சிந்தனையைத் தடைப்படுத்தியது. சத்தம் வந்த திசையைப் பார்த்தான்.

என்ன ஆச்சரியம்! பூமியில் இருந்து திடீரென்று பொங்கி வந்தது போல், வானத்திலிருந்து கண் இமைக்கும் நேரத்தில் இறங்கி வந்தது போல, ஏதோ மாய வித்தையால் அவன் எதிரில் இருந்த மரம் ஒன்று தன் உருவை மாற்றிக் கொண்டது போல இளங்கோவனுக்கு எதிரில் மலர்விழி தன்னுடைய பசுவின்மீது சாய்ந்த வண்ணம் ஒய்யாரமாக நின்றுகொண்டிருந்தாள். அந்தப் பொல்லாத பசு அவளைத் தன் மடியில் அணைத்துக் கொஞ்சுவது போலத் தன் தலையை லாகவமாக வளைத்துப் பிடித்துக் கொண்டிருந்தது. அவள் கைகளில் கொம்பைத் தேய்த்துத் தன் ஊமை அன்பால் அவளை மகிழ்வூட்டிக் கொண்டிருந்தது.

இளங்கோவன் இப்பொழுது பேசும்சக்தியை இழந்து விட்டான். எங்கே கண்ணை இமைத்தால் அந்த அழகுத் தெய்வம், மலர்விழி மறைந்து விடுவாளோ என்று பயந்து, மலர் விழியை இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தான். மலர் விழியின் கண்களில் கள்ளங் கபடமற்ற பேதைப் பெண்ணின் குறுகுறுப்பைக் கண்டான். உலகமனைத்தையும் அடிமை கொள்ளும் ஒப்பற்ற அழகையும் கண்டான். உள்ளத்தைப் பிரதிபலிக்கும் உற்சாகத்தையும் கண்டான். அவள் நிற்கும் நிலையைப் பார்த்ததும் அவன் இதயத்தில் என்னென்னவோ எண்ணங்கள் தோன்றின. அந்த எண்ணத்திலிருந்து வெளிவரும் இன்பக் கதைகளும், காதல் கவிதைகளும் இப்படியே நீண்டு கொண்டு போகாதா என்று ஒரு அர்த்தமற்ற ஆசை தோன்றிக் கொண்டிருந்தது.



சூரியன் மேற்கடலில் திடீரென்று குதித்த வேகத்தில் பேரெழுந்த நீர்த்துளிகள் போல் மலர்விழிக்குப் பின்னால் இருந்த அடர்ந்த தோப்பு மரங்களின் உச்சியிலிருந்து சில செங்கிரணங்கள் வான வீதியில் ஓங்கி நின்று மின்னின. தூரத்தில் கிராமப் பெண்கள் வயல் வெளியிலிருந்து வீடு நோக்கிச் சென்றார்கள். அவர்கள் இனிய குரல் எடுத்துப் பாடுவது காற்றலையில் மிதந்து வந்தது.

இந்தச் சமயத்தில் மலர்விழியை யாரோ உரிமையோடு அழைக்கும் குரல் கேட்டது. "மலர்விழி! நீ இங்கேயா நிற்கிறாய்? காலம் கெட்டுக்கிடக்கிறது" என்றது அந்தக் குரல்.

மலர்விழி திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள். அங்கு நின்ற முரட்டு மனிதனைப் பார்த்தாள். "காலம் எப்பொழுதும்போல் தான் இருக்கிறது. அது ஒன்றும் கெட்டுப் போகவில்லை" என்றாள். அவள் குரலில் அலட்சியமும் ஏளனமும் கலந்து தொனித்தன.

"மலர்விழி! நான் நீண்ட நாட்களாக யோசனை செய்து ஒரு முடிவுக்கு வந்து விட்டேன். உன் சாதியைப் பற்றிய கவலையையும் விட்டு விட்டேன். நீ இனிமேல் அநாதை இல்லை. நான் உனக்குத் துணை. நீ எனக்குத் துணை. உன்னைக் கல்யாணம் செய்து கொள்வது என்று தீர்மானித்து விட்டேன். இதற்கு உன் தந்தையும் சம்மதித்து விட்டார்" என்றான் அந்த முரட்டு மனிதன்.

"என்ன, உண்மையாகவா?" என்றாள். அவள் முகம் 'குப்'பென்று சிவந்தது; இனிய குரல் ஆத்திரத்தால் படபடவென்று நடுங்கியது.

"ஆமாம்! நாளைக்கு முடிவு செய்து விடலாம் என்று சொல்லி யிருக்கிறார் உன் தந்தை பெரியசாமி" என்றான்.

மலர்விழி மௌனமாக இருந்தாள். திடீரென்று ஏற்பட்ட இத் தாக்குதலைத் தாங்க முடியாமல் அவள் தவித்துக் கொண்டிருந்தாள். அவள் மௌனத்தை அவன் தனக்குச் சாதகமாக்கிக் கொண்டு பேசினான்:

"இந்த முடிவுக்கு வந்து விட்டதால்தான் உன்மீது அக்கறை ஏற்பட்டது. நீ தனிமையில் இருப்பதைப் பார்த்துக் கவலைப்படுகிறேன்."

"எனக்காக யாரும் கவலைப்பட வேண்டாம். நான் ஒன்றும் பச்சைக் குழந்தை இல்லை. இப்பொழுது இங்கிருந்து போகிறாயா இல்லையா?" என்று கடுமையான குரலில் கேட்டாள் மலர்விழி.

"இந்தத் திமிர்ப் பேச்செல்லாம் இன்னும் எத்தனை நாளைக்கு என்று பார்த்து விடுகிறேன்" என்று கருவிக் கொண்டே அங்கிருந்து அவன் போய் விட்டான்.

இதையெல்லாம் மாமரத்தின் அடியில் மறைந்து நின்று கேட்டுக் கொண்டிருந்த

இளங்கோவனுக்குத் தன் தலையில் பேரிடி ஒன்று வந்து தாக்கியதுபோல் வேதனை ஏற்பட்டது. தான் நின்று கொண்டிருந்த பூமி வழுக்கிக் கொண்டு போவதுபோல் தள்ளாடினன். இந்த உலகமே அவன் கண் முன்னுல் சுழலுவது போலிருந்தது. அவன் அணிந்திருந்த சட்டையும், வேஷ்டியும் அவனுடைய இதயத்தின் எதிரொலி போல் சலசலத்தன. அந்தச் சலசலப்புக்கு ஒத்து ஊதிற்று, அங்கு அடித்த காற்று. மனம் ஒரு முடிவுக்கும் வராமல் ஊசலாடியது. அந்தக் கணத்தில் ஏற்பட்ட ஒன்றுக்கொன்று விரோதமான உணர்ச்சிகளின் சுழலில் அகப்பட்டு அவன் தத்தளித்தான். இனி மேல் இளங்கோவன் வாழ்க்கையில் அமைதி இருக்காது, சூழ்ச்சிகள் தாண்டவமாடும் என்று அந்தச் சலசலப்பு அவனை எச்சரித்தது போலிருந்தது. அங்கு இருந்த மரம், செடி கொடி எல்லாம் அவனுடன் பேசின. மலர்விழியும் பேசினாள்:

"அவன் பேசியது எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டிருந்தீர்களா?" என்று கேட்டாள்.

இளங்கோவன் நிமிர்ந்தான். அவனுடைய தலை கிறு கிறுத்தது. திடீரென்று அவன் முகம் சிவந்தது. காற்று பலமாக வீசியது. மனக் கொதிப்பு அடங்கியதும் அவன் சிந்தித்தான். அவன் ஒரு எழுத்தாளன். சமூகத்தில் எல்லாராலும் ஒதுக்கப்பட்டு அநாதையாய்த் திரிந்தபோது அவனுக்குக் கை கொடுத்து ஆதரித்தாள் இலக்கியப்பெண். அவளையே அவன் மணந்து விட்டான்! கல்யாணம் ஆனவன் மாதிரிதான் அவன். மனைவிக்குத்துரோகம்செய்ய அவனுக்கு உரிமை கிடையாது. இப்போது ஒருபெண்ணை ஏன் காதலித்தோம், இன்னும் காதலிக்கிறோம்? இது ஏன் என்று அவனுக்குப் புரியவில்லை. மலர்விழிக்கும் அவனுக்கும் நெருங்கிய ஒற்றுமை இருந்தது. அவளும் அநாதை; அவனும் அநாதை. அவளும் அன்புக்கு ஏங்கிக் கிடந்தாள். அவனும் அன்புக்கு ஏங்கிக் கிடந்தான். முதல் முறையாக அவளைப் பார்த்ததும் அந்தக் கணத்திலேயே அவளைத் தன்னுடைய இதயத்தில் இருத்திக் கொண்டதும் அவன் நினைவுக்கு வந்தது. இப்போது அந்த இருதயம் ஏதோ கொடிய ஆயுதத்தால் தாக்கப்பட்டு வலிப்பதை உணர்ந்து தவித்தான்.

தன்னுடைய கேள்விக்குப் பதில் சொல்லாமல் தன்னை மறந்து நின்று கொண்டிருந்த இளங்கோவனைப் பார்த்ததும், மலர்விழிக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. அவள் கண்கள் கலங்கின. இளங்கோவனின் முன்னுல் மண்டியிட்டு அவன் முழங்காலில் முகத்தைப் பதிய வைத்துக் கொண்டு அழுதுவிட்டாள். "என்னை நம்புங்கள். என் இதயத்தில் தங்களைத் தவிர வேறு யாருக்குமே இடமில்லை" என்று கூறிக் கதறிக் கதறி அழுதாள்.



மலர்விழியின் கண்களிலிருந்து வந்த கண்ணீர்த் துளிகள் இளங்கோவனின் உறுதியான பாதத்தில் விழுந்தன. அவை நெருப்புபோல் கொதித்தன. திடீரென்று புத்துணர்வு பெற்றுன். அவன் தலையை நிமிர்த்திக் கண்ணீரைத் துடைத்து விட்டான் இளங்கோவன். "மலர்விழி! அழாதே! நீ ஒன்றும் அறியாதவள். நான் உன்னை நம்புகிறேன்" என்றான்.

அவள் பெயரை உச்சரித்ததும் அவளோடு வாழலாம் என்று நினைத்ததும் இளங்கோவனை எழுச்சிகொண்டு துள்ளச் செய்தன. அழகு முழுவதும் பரிமளித்து நிற்கும் அழகுத்தெய்வமான மலர்விழியை அன்போடு சமாதானப் படுத்த முயன்றான். ஆற்று நீரில் தொங்கி வளைந்து கொடுக்கும் கொடியைப்போல் அவள் இழுத்த இழுப்புக்கு வருவதை உணர்ந்தான். அவள் காதோடு இனிமையாகப் பேசினான். அவள் கருங் குழலில் தன்னுடைய முகத்தைப் புதைத்துக்கொண்டான்.

"போகட்டும். நம்முடைய இன்ப வாழ்வில் இடைரென்று முளைத்திருக்கும் அம்மனிதன் யார்?" என்று வியப்புடன் கேட்டான் இளங்கோவன்.

"அவன் ஒரு போக்கிரி; பொல்லாதவன். வீரப்பன் என்று அவனுக்குப் பெயர்."

"இத்தனை நாட்களாக இல்லாமல் இன்று வந்து உன்னைக் கல்யாணம் செய்து கொள்கிறேன் என்று சொல்வானேன்? அவன் விருப்பத்துக்கு மாறாக உன்னுடைய தந்தையால் நடக்க முடியாதா?"

"முதலில் வீரப்பனைப் பற்றியும் என் தந்தையைப் பற்றியும் தெரிந்து கொண்டால் தான், நான் அவர்களைப் பற்றிச் சொல்லுவது புரியும்" என்று சொல்லி அவர்களைப் பற்றிச் சொல்ல ஆரம்பித்தாள் மலர்விழி.

*** *** ***

வீரப்பன் கோரமான தோற்றமுடைய கொடுமைககாரன். கரடுமுரடான முகம். திருட்டுத்தனமான பார்வை. எல்லாத் தீமைகளுக்கும் இருப்பிடமானவன். மற்றவர்கள் அவதியுறுவதைக் கண்டு ஆனந்தப்படுபவன். யாரிடமும் எதையும் செய்யத் துணிந்தவன். சிங்கப்பூரிலிருந்து வந்தவன். அங்கு என்னென்ன அக்கிரமங்கள் செய்தானோ! யார் குடியைக் கெடுத்தானோ! நிறையப் பணத்துடன் நாலைந்து ஆண்டுகளுக்கு முன்னுல் பூங்குளம் கிராமத்தில் வந்து சேர்ந்தான். கொஞ்சம் நிலமும் வாங்கி யிருக்கிறான். நிலம் வாங்குவதற்கும் சாகுபடி செய்வதற்கும் பெரியசாமி அவனுக்கு உதவிகள் செய்தார்.

பெரியசாமி ஊருக்குள் கொஞ்சம் கண்ணியமானவர். வீடுவாசல், தோப்பு துரவு, நில புலன்கள் எல்லாம் நிறைந்தவர். அவரிடம் உள்ள நற்குணங்களை நாளெல்லாம் சொல்லிக் கொண்டிருக்கலாம். இதற்குத் திருஷ்டிபரி

காரம்போல் அவரிடம் ஒரே ஒரு கெட்ட வழக்கம் இருந்தது. அதற்குக்கூடச் சூழ்நிலை தான் காரணமாக அமைந்தது. கஷ்டங்கள் வந்து அவரைத் தாக்கின. அவர் அருமை மனைவியைக் காலரா நோய் கொள்ளை கொண்டது. உயிரினும் மேலாக மதித்து வந்த மகளும் மறைந்தாள். இந்தப் பேரிடி போதாதென்று புயல்காற்றும் பெருவெள்ளமும் வந்து அவர் வெள்ளாமையை நாசமாக்கின. இந்தச் சமயத்தில்தான் சகவாச தோஷத்தால் மதுபானப்பழக்கம் ஏற்பட்டது. அது மிதமான அளவுடன் கூடியதுதான். வீரப்பனும் அப்படியொன்றும் மது விலக்கில் தீவிரமானவன் அல்ல. ஆகவே இருவருக்கும் சிநேகம் ஏற்பட்டது. அந்த நட்பு நாளுக்கு நாள் அதிகரித்து வந்தது:

வீரப்பன் பெரியசாமியை விரும்பியது அவர் நல்ல குணத்துக்காக அல்ல. அவர் மகள் மலர்விழியின்மீது அவனுக்கு ஒரு கண் இருந்தது. அதனால்தான் வீரப்பன் பெரியசாமிக்கு வேண்டியதை யெல்லாம் செய்து வந்தான். அவர் காலால் இட்ட வேலைகளை யெல்லாம் தலையால் செய்யக் காத்துக் கொண்டிருந்தான். கடைசியில் ஒருநாள் அவனுக்கு விஷயம் விளங்கியது. மலர்விழி பெரியசாமியின் சொந்தப் பெண் அல்ல. அவள் ஒரு அநாதை. அவருடைய நல்ல குணம் காரணமாகவும் அவருடைய வாழ்வில் ஏற்பட்ட பல சோதனைகள் காரணமாகவும் அவளை எடுத்து வளர்த்தார் என்பதைப் புரிந்து கொண்டான். இன்னும் அவளைப் பற்றி விசாரிக்கும் போது ஊரில் உள்ள ஒவ்வொருவரும் ஒரு மாதிரியாகச் சொன்னார்கள். அவள் சாதியைப் பற்றிக் குறைவாகச் சொன்னார்கள். அவள் பெற்றோர்களைப் பற்றிக் கண்டபடி பேசினார்கள். தகப்பன் பேர் தெரியாதவள் என்று நாக்கில் நரம் பின்றித் தூற்றினார்கள். பொதுவாக ஒருத்தர் வாழ்க்கையைப் பற்றித் தூற்றுவதும் ஒன்றைப் பத்தாகச் சொல்லி மகிழ்வதும்தான் நம்முடைய கிராம மக்களின் வழக்கம் ஆயிற்றே! அதனால் வீரப்பன் அவைகளை முழுவதும் நம்ப வில்லை. ஆனாலும் முன்னைப்போல் பெரியசாமியிடம் அவ்வளவு நெருங்கிப் பழகுவதில்லை. பெரியசாமி இதையெல்லாம் ஒரு பெரிசாக நினைப்பவர் அல்ல. அதனால் அதைப் பொருட்படுத்தவே இல்லை.

இருந்தாலும் வயது வந்த ஒரு பெண்ணை வீட்டில் வைத்துக் கொண்டிருக்கிறோமே, நாலு பேர்கள் நாலு சொல்வதற்குள் அவளை யாரிடமாவது இழுத்து விட்டு விட்டால் நல்லது என்றுதான் நினைத்தார். வீரப்பன் மலர்விழியைக் கல்யாணம் செய்து கொண்டால் மிகவும் நல்லது என்று மனப்பூர்வமாக எண்ணினார். 'அவனுக்கு என்ன குறைச்சல்? நல்ல சொத்திருக்கிறது. மலர்விழியை அவனுக்குக் கல்யாணம் செய்து கொடுத்தால் அவ்வளவு சொத்துக்கும் தாமே எஜமானனாகி விடலாம்.' மலர்விழியின் நன்மையைத்தான் பெரியசாமி விரும்பினார். ஆனால் மலர்விழியின் மனநிலை இன்னதென்பதை அவர் உணர்ந்து கொள்ளவில்லை; உணர்ந்து கொள்ள முயற்சி செய்யவுமில்லை. பெற்ற பெண்ணின் விருப்பத்தையே கேட்டுத் தெரிந்து கொள்ள விரும்பாத பெற்றோர்கள் இருக்கும் இந்த நாட்டில், பெரியசாமி வளர்ப்புப் பெண்ணின் மன நிலையையா அறிந்து கொள்ளப் போகிறார்!

நேற்று வரையில் மலர்விழியின் வாழ்க்கையில் எந்தப் புதுமையும் இல்லை. யாராவது தன்னைக் கல்யாணம் செய்து கொள்ள மாட்டார்களா? என்றுதான் எண்ணியிருந்தாள். திடீரென்று எங்கிருந்தோ வந்து முளைத்தான் இளங்கோவன். அவள் இதயத்தில் புகுந்து கொண்டான். அநாதைப் பெண்ணுக்கு ஆதரவுதர முன்வந்தான். அவளும் அதை எண்ணி வான வீதியில் மிதந்தாள். தன் எதிர்கால வாழ்க்கையை எண்ணி இன்பக் கனவுகள் கண்டு வந்தாள். அதற்குள் இப்படி மலர்விழியின் வாழ்க்கையில் ஒரு புது திருப்பம் ஏற்பட்டுவிடும் என்று யார் எதிர்பார்க்க முடியும்? அவள் இன்பக் கோட்டையை வீரப்பன் இடித்துத் தூளாக்கி விட்டானே! வான வீதியில் பறந்து வந்தவள் அப்படியே தலைகுப்புற அல்லவா தரையில் விழுந்து விட்டாள்.



பெரியசாமி எவ்வளவுதான் நல்ல குணம் படைத்தவராக இருந்தாலும் வீரப்பனின் விரோதத்தை ஏற்படுத்திக் கொள்வாரா? அவன்தான் எப்படியோ பெரியசாமியைத் தன் பிடிக்குள் வைத்துக் கொண்டிருக்கிறானே! இளங்கோவனின் பெருமையை, அவன் நல்ல குணத்தை. அவள் இதயத்தில் ஏற்பட்டிருக்கும் காதலை உணரும் சக்திதான் அவருக்கு உண்டா? 'நான் நீ' என்று நாடே போட்டி போட்டுக் கொண்டு பெண் கொடுக்க வரும் இளங்கோவன் வாழ்க்கையில் இப்படி ஒரு பட்டிக்காட்டுப் பெண் புகுந்து கொண்டதைப் பெரியசாமி புரிந்து கொள்வாரா? இவையெல்லாம் புரியாத புதிராக இருந்தன.

இதைப் பற்றி யெல்லாம் மலர்விழியும் இளங்கோவனும் பேசினார்கள். இளங்கோவனுக்கு இப்பொழுதுதான் ஒருமாதிரி தன்னுடைய நிலையையும், மலர்விழியின் நிலையையும் உணர்ந்து கொள்ள முடிந்தது. மேலே என்ன செய்வது? யாரிடம் இதற்கு யோசனை கேட்பது என்று தெரியாமல் தவித்தான். ஆனாலும் ஒரு விஷயத்தில் மட்டும் அவன் மிகுந்த உறுதியுடன் இருந்தான்.

மலர்விழியை எப்படியாவது கல்யாணம் செய்து கொண்டு விடவேண்டும். அதற்கான பாதையைக் கண்டுபிடித்து அதன் வெற்றிச் சிகரத்தை எட்டிப் பிடித்துவிட வேண்டும். அல்லது அந்த முயற்சியில் குறி தவறிக் கீழே விழுந்தால் குற்றுயிராய் மடிய வேண்டும்.

இதைத் தவிர வேறு வழி ஒன்றும் அவன் அறிவுக்கு எட்டவில்லை.

"மலர்விழி! கவலைப்படாதே. ஒன்றுமில்லாமல் வெறும் சோற்றுக்காக, வயிற்றை வளர்த்து வாழ்ந்து உயிரை விடுவதைவிட, ஒரு உண்மையான காதலுக்காகக் கஷ்டப்பட்டு உயிரை விடுவது மேல் அல்லவா?" என்றான் இளங்கோவன்.

"என்ன? நாம் கல்யாணம் செய்துகொள்வதில் உயிருக்கு ஆபத்து நேருமா? அப்படியானால் இனி என் உயிர் வேறு தங்கள் உயிர் வேறு என்பதில்லை" என்றாள்.

இளங்கோவன் மெதுவாகச் சிரித்தான். "நீ சொல்லுவதைக் கேட்கும்போது என் இதயம் இன்பத்தால் பூரிக்கிறது. சொல்லு" என்றான். மலர்விழியின் அன்பு பொங்கும் திருமுகத்தைப் பார்த்தான். அவளும் காதல் துள்ளும் அவன் முகத்தைப் பார்த்தாள். 'நீ எனக்குத்தான் சொந்தம்' என்று அவன் எண்ணினான். 'நீங்கள் இல்லாமல் என்னால் வாழ முடியாது' என்று எண்ணினாள் மலர்விழி. இருவரும் இதேபோல் சிந்தித்துக் கொண்டிருந்தார்கள். ஒருவர் மனத்திலிருந்தது மற்றவருக்கு வார்த்தைகளால் சொல்லாமலே தெளிவாகத் தெரிந்தது.

காதலர்களின் அமைதியைக் கலைத்துக் கொண்டு "மலர்விழி! மலர்விழி!" என்று பெரியசாமி கூப்பிடும் குரல் கணீரென்று கேட்டது. அப்பொழுதுதான் அவர்கள் இருவருக்கும் இந்த உலக நினைவு வந்தது! வெள்ளைப் பசு தன்னை விட்டு விட்டு வீட்டுக்குச் சென்று விட்டதையும் மலர்விழி அப்போதுதான் கவனித்தாள். பசு தனியாக வீட்டுக்கு வந்திருப்பதைப் பார்த்துத்தான் தன் தந்தை தன்னைத் தேடி வந்திருக்கிறார் என்பதையும் உணர்ந்து கொண்டாள். "நாழியாகி விட்டது. நான் வருகிறேன்" என்று சொல்லிக் கொண்டு ஓடி மறைந்து விட்டாள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் பெரியசாமி அங்கு வந்தார். சுற்றுமுற்றும் பார்த்தார். தூரத்தில் மலர்விழி மான்குட்டி போல ஓடிக் கொண்டிருப்பதைப் பார்த்தார். "இங்கே இத்தனை நேரம் என்ன செய்து கொண்டிருந்து விட்டுப் போகிறாள்?" என்று வாய் விட்டே சொல்லிக் கொண்டார்.

பெரியசாமி இப்படிச் சொல்லிக் கொண்டதைக் கேட்ட போது இளங்கோவனுக்குக் காரணம் தெரியாத நடுக்கம் ஏற்பட்டது! ஏன் இப்படி உடம்பு நடுங்குகிறது என்று தன்னையே கேட்டுக் கொண்டான். அவன் வாழ்வில் இதுபோன்ற சம்பவங்கள் ஒன்றும் நிகழ்ந்ததே இல்லை. அதனால் அவன் ஒவ்வொரு கணமும் அமைதியில்லாமல் தவித்தான். பெரியசாமி அங்கிருந்து சென்றவுடன் தான் அவன் மனத்தில் அமைதி ஏற்பட்டது!

இளங்கோவன் இப்பொழுது தனிமையில் நின்றான். மாலை வெள்ளி அடிவானத்திலே வெடித்தது. தலைக்குமேல் பல சுடர்கள் தோன்றிச் சுடர் விட்டன. எங்கிருந்தோ நாயின் பயங்கர அழுகுரல் காற்றிலே மிதந்து வந்தது. அது பின்னால் வரப்போகும் ஏதோ ஒரு பயங்கரத்தை இளங்கோவனுக்கு நினைவூட்டுவது போலிருந்தது. (தொடரும்)

# விசித்திரச் சலங்கை

கதை.... வாண்டு மாமா

படம்.... பாபு

~12~

தேவதத்தா!
கிராமமே திரண்டு நம் வீட்டை நோக்கி வருகிறதே! என்ன விஷயமோ, தெரியவில்லையே!













எனக்காக அந்த ராட்சதனோடு நீங்கள் போராடி உயிரிழப்பதை நான் விரும்பவில்லை. என்னை அவனிடமே அனுப்பி விடுங்கள்
மங்களா! நம் பக்கம் நியாயமிருக்கிறது. உன்னை நான் இழக்க மாட்டேன். பயப்படாதே வா!


இந்த ஆபத்திலிருந்து அவரை எப்படியாவது காப்பாற்றியாக வேண்டும். காளிங்கன்
பயன்படுத்துவதைத் தவிர வேறு வழியில்லை.


என்னை அழைத்த காரணமென்ன? உமக்கேற்பட்ட துன்பமென்ன, சொல்லுங்கள்!


காளிங்கரே, உமது விருப்பப்படி எனக்கேற்ற கணவனைத் தேர்ந்தெடுத்து விட்டேன். ஆனால் அவர் நாளைக்கு ராட்சதனுக்கு இரையாகப் போகிறார்.... என்ன செய்வேன்?
கவலைப்படாதே! விவரமாக விஷயத்தைச் சொல்லு, மங்களா!


கிராம மக்கள்
பலியிட்டு இருந்ததையும். தேவதத்தன் தன் பொருட்டு அவனுடன் போராடிக் கொல்ல வந்ததாக வாக்களித்திருப்பதையும் சொன்னாள்.


மயங்காதே, மங்களா! உன் உள்ளத்தில் இடம் பெற்று விட்ட உத்தமன் இதன் உதவியால் வெற்றி பெறுவான். இது மந்திர சக்தி வாய்ந்தது. இதனால் ராட்சதனைத் தொட்டுக் கொல்



# பொல்லாத பொறுமை

(சென்ற வாரத் தொடர்ச்சி)

"தாம் பிடித்த முயலுக்கு மூன்றே கால் என்று கூறும் அரசர் மாணிக்கவர்மர் குறிப்பிட்டபடி, வியாழக் கிழமை இரவு ஏழு மணி வந்தது. காளிங்கராயன் போய் விட்டால், தமது கை ஒடிந்தாற்போலாகிவிடும் என்பதை மாணிக்கவர்மர் உணர்ந்திருந்தார். ஆயினும் தந்தையின் மகிழ்ச்சியே தமது மகிழ்ச்சி என்று கருதினார் மாணிக்கவர்மர். எனவே, காளிங்கராயனை இடுகாட்டுக்கு இட்டுச் சென்று சிதை தயாரித்துத் தீ வைத்த பிறகே திரும்பினார்.

மந்திரி பிரதானிகளுக்கும், பிச்சைக்குப்பனுக்கும் கரைகாண இயலாத மகிழ்ச்சி. அவர்களது தான்தோன்றித்தனம் வளர வழி ஏற்பட்டு விட்டதல்லவா?" என்றாள் பாகீரதிப் பாட்டி.

"ஏன், பாட்டி! காளிங்கராயன் நிஜமாகவே செத்துப் போய்விட்டானா?"

"ஆமாம், சிதையை அடுக்கித் தீயும் வைத்து விட்டால், சாகாதவனும் செத்துப் போக வேண்டியதுதானே? ஆனால் ஒரு அதிசயம் நிகழ்ந்தது. என்ன தெரியுமா?"

"என்ன நடந்தது, பாட்டி?"

"அடுத்த வருஷம் மாணிக்கவர்மருடைய தகப்பனாருக்குத் திதி வந்தது. திவசம் முடிந்து ஒரு வாரமும் ஆகிவிட்டது. வேடிக்கை போல் காளிங்கராயன் சொர்க்கம் போய்ச் சரியாக ஒரு வருஷம் அன்றுதான் பூர்த்தியாகி இருந்தது.

மன்னர் மாணிக்கவர்மரும் பிச்சைக்குப்பனும் பேசிக் கொண்டிருந்தார்கள். காலஞ் சென்ற மகாராஜாவின் நினைவும், காளிங்கராயன் சொர்க்கம் சென்ற விஷயமும் நினைவுக்கு வரவே, அதுவே அவர்களது பேச்சுக்கு விஷயமாக அமைந்தது.

'காளிங்கராயன் சொர்க்கம் போய் ஒரு வருஷம் பூர்த்தியாகி விட்டது. அப்பாவுக்கு அவன் வலதுகையாக இருந்து மகிழ்ச்சியைக் கொடுத்துக் கொண்டு தானும் ஆனந்தமாக இருப்பான் என்று எண்ணுகிறேன்' என்றார் அரசர் மாணிக்கவர்மர்.

"காளிங்கராயர் போன இடம் கலகல வென்றுதான் இருக்கும், மகாராஜா!" என்று ஆமோதித்தான் பிச்சைக்குப்பன்.

'ஆமாம்! அப்பா அவனை ஒரு வருஷத்துக்குத்தானே தம்மிடம் அனுப்பச் சொல்லி யிருந்தார்!'

'சொன்னது என்னவோ அதுதான். ஆனால் காளிங்கராயர் அங்கே போனபின் அவருக்குத் திருப்பி அனுப்ப மனம் இல்லாமல் போயிருக்கலாம். அதனால் நிரந்தரமாகவே அவரைத் தம்மிடம் வைத்துக் கொள்ளத் தீர்மானித்திருந்தால்......?' என்றான் பிச்சைக்குப்பன்.

'அப்படி இருந்து விட்டால், நமது அரசசபை எப்பொழுதுமே வெறிச்சோடிவிடுமே! ...பரவாயில்லை. தந்தையின் மகிழ்ச்சிதான் தனயனின் மகிழ்ச்சியாக இருக்கவேண்டும். இப்படி ஆறுதல் செய்து கொள்வதுதான் எனது கடமை!' என்றார் மன்னர்.

'இல்லை, அரசே! தனயனின் மகிழ்ச்சி தான் தந்தையின் மகிழ்ச்சியாக இருக்க வேண்டும். அதுதான் உத்தமமான நோக்கம்'என்பது தங்கள் தந்தையின் எண்ணம். எனவே, வருஷம் பூர்த்தியான கையோடு கையாக உங்களிடம் என்னைத் திரும்பிப் போகப் பணித்துவிட்டார் தங்கள் அருமைத் தந்தை. நானும் அவர் ஆணையைச் சிரமேற் கொண்டு திரும்பி வந்து விட்டேன்!'

குரலைக் கேட்டு மன்னர் மாணிக்கவர்மரும் பிச்சைக்குப்பனும் ஏககாலத்தில் திரும்பிப் பார்த்தார்கள். தாடியும் மீசையும் ஆளை அடையாளம் கண்டு கொள்ள விடாமல் திகைக்க வைக்கக் காளிங்கராயன் நின்று கொண்டிருந்தான்.

'அட, காளிங்கராயனா? இதென்ன அப்பா வேஷம்! எதற்கு இப்படித் தாடியும் மீசையும் வளர்த்திருக்கிறாய்?' என்று கேட்டவாறே மகிழ்ச்சியுடன் மன்னர் மாணிக்கவர்மர் காளிங்கராயனை வரவேற்றார்.

பிச்சைக்குப்பனுக்கோ உலகமே தட்டாமாலை சுற்றுவது போல் இருந்தது. 'சனி ஒழிந்தது!' என்ற நினைப்பில் பால் பாயசம் சாப்பிட்டுக் கொண்டிருந்த அவனுக்கு மீண்டும் பூசைவேளையில் கரடியாக இந்த இடையூறு வந்து சேரவா வேண்டும்?

'அதை ஏன் கேட்கிறீர்கள்? சொர்க்கத்திலே பெயருக்குக் கூட நமது பிச்சைக்-



குப்பனின் தோழர்கள் கிடையாது. அதனால் எல்லோருமே தாடியும் மீசையும் வளர்க்கிறார்கள். தங்கள் தந்தையார்கூட அடிக்கடி தமது தாடி மீசையைத் தடவி விட்டுக்கொண்டு, நமது பிச்சைக்குப்பனைப் போல் ஒருவன் இங்கே இருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும் என்று சொல்வதுண்டு.'

'அப்படியா?'

'அவர் என்னை இங்கு புறப்பட்டு வரப் பணித்ததும், நான் போய்ப் பிச்சைக்குப்பனை வேண்டுமானால் அனுப்பி வைக்கட்டுமா என்று கேட்டேன். அப்பொழுது அவரது தாடி மீசைக்குள்ளிருந்து வெண்முத்துப் பற்கள் காந்தியிட்டுப் பிரகாசித்ததை என்னவென்று சொல்லுவேன்?' என்றான் காளிங்கராயன் வினயமாக.

'பிச்சைக்குப்பா! என் தந்தையாரைத் திருப்திப்படுத்த ஒரு வருஷமாவது நீ சொர்க்கத்துக்குப் போகத்தான் வேண்டும். நாளைக்கே புறப்படச் சித்தமாயிரு!' என்று உத்தரவிட்டு விட்டார் மன்னர்.

பிச்சைக்குப்பனின் முகம் போன போக்கைச் சொல்லி முடியாது. அவனுடைய சப்த நாடியும் ஒடுங்கி விட்டது. 'சரிங்க, மகாராஜா!' என்று கிணற்றுக்குள்ளிருந்து தாழ்ந்த குரலில் பேசுபவனைப் போலப் பேசினான்.

யாருக்குமே உயிர் வெல்லமாகத் தானே தோன்றும்? ஆனால் இந்த ஆபத்திலிருந்து எப்படியாவது தப்ப வேண்டும் என்று பிச்சைக்குப்பன் மூளையைப் போட்டுக் குழப்பிக் கொண்டான். ஆனால் மண்டை வலி கண்டதே தவிர, யோசனை உதயமாக வில்லை. பிறருக்குத் தீங்கு நினைக்கப் போய், தனக்கே தீங்கு நேர்வதைக் கண்ட பொழுது, அவன் மனம் வருந்தியது. பிழைத்துக் கிடந்தால், இனி யாருக்குமே தீங்கு நினைக்கக் கூடாது என்ற ஒரு நல்ல முடிவுக்கு வந்தான்.

'தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை' என்ற தீர்மானத்திலே துடியாயிருந்த மன்னரோ, மறுநாள் பொழுது விடிவதை எதிர்பார்த்திருந்தார். கண் கொட்டாமலே இரவைப் பகலாக்கி விட்டார்.

மறுநாள் மன்னர் மாணிக்கவர்மர் குறிப்பிட்ட வேளையில், பிச்சைக்குப்பன் சிதையேறினான்.

'சிதையில் தீ வைத்தபின் எல்லோரும்! சிதையைத் திரும்பிப் பாராமல் செல்ல வேண்டும். இந்தச் சம்பிரதாயத்தை நினைவு வைத்துக் கொள்ளுங்கள்' என்று காளிங்கராயன் எல்லோருக்கும் நினைவூட்டினான்.

ஒரு காரியத்தைச் செய்யாதே என்று சொன்னால், அதைச் செய்ய முற்படுவது தானே மனித இயல்பு? நீகூட அப்படித் தானே? அதே போல், எல்லோருக்கும் திரும்பிப் பார்க்க வேண்டும் என்ற ஆசை தான். இருந்தாலும் காளிங்க ராயன் சொல்கிறானே என்பதற்காக மிகுந்த பிரயாசைப்பட்டுத் தங்கள் ஆசையை அவர்கள் அடக்கிக் கொண்டார்கள்.

ஆனால் அப்படிச் சொன்ன காளிங்கராயன், தான் மட்டும் கொஞ்சதூரம் வந்ததும் திரும்பிப் பார்த்தான். மன்னர் முதற்கொண்டு எல்லோரும் 'நீ மட்டும் ஏன்

அக்ஷயம்

திரும்பிப் பார்க்கிறாய்?' என்று கூறிக் காளிங்கராயன் பார்த்த திசையைப் பார்க்கத் தொடங்கி விட்டனர்.

தூரத்தில் ஒரு உருவம் தலை தெறிக்க வேகமாக ஓடிக் கொண்டிருந்தது தெரிந்தது. அது பிச்சைக்குப்பன் தான் என்பதும் எல்லோருக்கும் புலனாகிவிட்டது.

'இனிமேல் அவன் இந்த ராஜ்யத்துக்குத் திரும்பி வரமாட்டான்! என்னைப் போல் கெட்டிக்காரனாக இருந்தால், திரும்பவும் இந்த ராஜ்யத்துக்கு வரவே ஏற்பாடு செய்திருப்பான். பொறாமைப்படத் தெரிகிறதே தவிர, புத்தி எங்கே இருக்கிறது? சுகமான அரண்மனை உத்தியோகத்தை விட்டுப் பாவம், எங்கெங்கெல்லாம் போய்க் கஷ்டப்படப் போகிறானோ?' என்று அநுதாபப்பட்டான் காளிங்கராயன்.

'ஆமாம், நீ என்ன செய்தாய்?' என்று ஆவல் பொங்கக் கேட்டார் மன்னர்.

'நான் வீட்டுக்குப் போய் மூளையை உடைத்துக் கொண்டு யோசனை செய்தேன். ஒரு உபாயம் தென்பட்டது. இரவுக்கிரவே, என் அந்தரங்கத் தோழர்களைக் கொண்டு, என்னைச் சிதையிடும் இடத்துக்குக் கீழே ஒரு ரகசியச் சுரங்கம் தோண்டச் செய்தேன். தீ வைத்ததும், அதன் வழியே வெளியேறி ஒரு வருஷம் ஆனந்தமாக ஊர் சுற்றினேன். உங்களுக்கு நம்பிக்கை ஏற்படுவதற்காகவும், என்னைப் பிறர் அடையாளம் கண்டு கொள்ளாமல் இருப்பதற்காகவும் தாடி வளர்த்தேன். அதோடு ஒரே கல்லில் இரண்டு மாங்காய் என்பதுபோல், எனக்குத் தீங்கு செய்ய நினைத்தவனையும் விரட்ட வழி கண்டு பிடித்தேன்! என் இட்டம் எப்படி?' என்றான் காளிங்கராயன்.

அதைக் கேட்டதும் . அரசர் அயர்ந்து போய்விட்டார். கூடியிருந்தோர் அவனது புத்திசாலித்தனத்தை வியந்தனர்.

பொறாமைப் பட்டதனால் பிச்சைக் குப்பன் நாட்டை விட்டே ஓடும்படியாகி விட்டது. இப்பொழுது தெரிகிறதா, பரசுராமா! பொறாமை பொல்லாதது என்பது?" என்றாள் பாட்டி.

"என் பாடத்துக்கு நல்ல விளக்கம் கொடுத்து விட்டாயே, பாட்டி!...ஏன் பாட்டி, இந்தக் கதை நீ இட்டுக் கட்டினதா?" என்று கேட்டான் பரசுராமன்.

"இல்லையடா, கண்ணா! என் பாட்டி எனக்குச் சொன்னாள். அவளுக்குப் பாட்டி அவளுக்குச் சொல்லியிருப்பாள். இப்படியே கர்ண பரம்பரையாக வந்த கதை இது!" என்று கூறிச் சிரித்தாள் பாகீரதிப் பாட்டி.





### விளையாட்டு மன்னர்கள் (11)

# ஹாக்கி வீரர் தயான்சந்த்

இராமாயணத்தில் ராமரும் லக்ஷ்மணரும் இணைபிரியாத சகோதரர்களென்று புகழ்பெற்றவர்கள். அதே போல் ஹாக்கி உலகில் திரு தயான்சந்தும் அவரது சகோதரர் திரு ரூப் சிங்கும் இராமலக்ஷ்மணர்களாகத் திகழ்கிறார்கள். இருவருமே தங்களது அபாரமான ஆட்டத் திறமையினால் மக்களின் உள்ளங்களில் நிரந்தர இடம் பெற்றிருக்கிறார்கள்.

"ஜான்ஸி ராணி லக்ஷ்மிபாய் தோன்றிய புண்ணிய பூமியிலே பிறந்தவன்" என்று சொல்லிப் பெருமைப்பட்டுக் கொண்டார் மேஜர் தயான்சந்த். அதில்தான் அவருக்கு எத்தனை ஆனந்தம்!

அவர் ராணுவத்தில் முப்பத்தி நான்கு வருஷங்கள் சேவை செய்து, மேஜர் பதவிக்கு உயர்ந்தவர். 1926ம் வருஷம் நியூஸிலந்து, ஆஸ்திரேலியாவில் நிகழ்ந்த ஹாக்கி விளையாட்டுப் போட்டியில் இந்திய ராணுவக் கட்சிக்குப் பெரும் வெற்றி தேடித் தந்தார். 1928ம் வருஷத்திலிருந்து அவர் இந்திய ஹாக்கி கோஷ்டிக்குத் தலைமைவகித்து, ஒலிம்பிக் ஹாக்கிப் போட்டிகளில் இந்தியா வெற்றி பெற வழிகோலினார். அயல்நாட்டினர் திரு தயான்சந்தின் அதியற்புதமான ஆட்ட வல்லமையைக் கண்டு மூக்கின் மேல் விரலை வைத்து வியந்தனர். தயான்சந்தின் மட்டையில் பந்து உருண்டு, மாயமாய் மறைந்து, குதித்துப் பாய்ந்து, எதிரிக் கட்சியின் கோலுக்குள் புகுந்து விடும் அற்புதத்தைக் கண்டு, 'ஹாக்கிவிளையாட்டில் இவர் ஒரு மந்திரவாதிதான்!' என்று புகழ்மாலை சூட்டினர். இந்திய சர்க்காரும் 1956ம் வருஷம் 'பத்மபூஷண்' என்ற விருதை வெற்றி வீரருக்கு வழங்கிப் பாராட்டினர்.

1948ம் வருஷம் தயான்சந்த் ஹாக்கி விளையாட்டுப் பந்தயங்களில் கலந்து கொள்வதிலிருந்து ஒய்வுபெறுகிறார் என்று கேட்டதும் ஹாக்கி ரசிகர்கள் துக்கக் கடலில் மூழ்கினர். குன்றின் மேல் இட்ட தீபம் போல் சுடர் விட்டுப் பிரகாசிக்கும் திரு தயான்சந்தின் விளையாட்டுத் திறமை அதற்குப் பிறகு குடத்து விளக்குப் போலாகி விடுமே என்று கவலைப்பட்டனர். ஆனால் திரு தயான்சந்த் விளையாட்டு அரங்கத்திலிருந்து ஒய்வுபெற்றாரே தவிர, ஹாக்கி விளையாட்டு உலகைவிட்டே போய்விடவில்லை.



'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்பது போலத் தமது திறமையையும் அனுபவத்தையும் பல வருங்கால ஹாக்கி வீரர்களை உருவாக்குவதில் அவர் ஈடுபடுத்தி வருகிறார். ஹாக்கி விளையாட்டில் இந்தியர்கள் என்றும் உலகில் முடிசூடா மன்னராகத் திகழ வேண்டும் என்ற ஆசை அவர் உள்ளத்தில் அளவு கடந்திருக்கிறது. தமது சகோதரர் திரு ரூப் சிங் உடல்நலக் குறைவினால் குவாலியரில் சிகிச்சை பெற்றுவரும்போது, அவரது அருகிலிருக்க வேண்டியவர், இந்தியாவில் ஹாக்கி விளையாட்டின் தரமும் பெருமையும் குன்றிவிடக் கூடாதே யென்பதற்காகப் பல விளையாட்டுக்காரர்களுக்குப் பயிற்சியளிப்பதிலே கவனம் செலுத்தி வருகிறார். சகோதர பாசத்தைவிட விளையாட்டிலுள்ள ஈடுபாடு மேம்பட்டு நிற்கிறது தெரிகிறதல்லவா?

சென்னை நகரசபை ஸ்டேடியம் மைதானத்தில் இந்திய ஹாக்கி பெடரேஷனின் ஆதரவில் இந்தப் பயிற்சி நடைபெற்று வருகிறது. சென்னையில் ஐம்பது விளையாட்டுச் சங்கங்களிலிருந்து பொறுக்கியெடுத்த ஐம்பது விளையாட்டுக் கலைஞர்கள் இதில் கலந்து கொள்கிறார்கள். 'சித்திரமும் கைப் பழக்கம், செந்தமிழும் நாப்பழக்கம்' என்பது போல விளையாட்டுக் கலையும் இடைவிடாப் பயிற்சியாலும், ஊக்கத்தாலுமே மெருகேறும் என்ற உண்மையை உணர்ந்து திரு தயான்சந்த், அவர்களுக்குப் போதித்து வருகிறார்.

"நான் உயிரோடிருக்கும் வரையிலாவது இந்தியா தான் பெற்ற உலக முதன்மை ஸ்தானத்தைத் தோல்வியுறாது காப்பாற்றி வர வேண்டும்" என்று உணர்ச்சியுடன் திரு தயான்சந்த் கூறினார். 'இந்தியாவின் பெருமையை என்றும் நிலைநாட்டுவோம்' என்று பிரதிக்ஞை செய்து கொண்டு விளையாட்டுக்காரர்கள் தீவிரமாகப் பயிற்சியில் ஈடுபட வேண்டும்.

—குண்டுமணி



அழகுக்கும் அழகு செய்ய...

ரெமி

ஸ்னோ
&
பவுடர்

AVRA 334

இலங்கையில் கிடைக்குமிடம்: AVRA Ltd., Colombo

ரேடியோ ஸிலோன் :—41·72 மீட்டரில் "இசை விருந்து"
வெள்ளிக்கிழமைதோறும் மாலை 6-30 லிருந்து 6-45 வரை

# புலிக்குட்டி

ஆர். எஸ். ஞானம்பாள்

ராம்நகர் ஹைஸ்கூலில் ஆண்டுவிழா. பிள்ளைகளின் வேடிக்கை விளையாட்டுகளையும், கொண்டாட்டத்தையும் கண்டு களிக்கப் பெற்றோர்களும் பெருந்திரளாக வந்திருந்தனர். விழாவுக்குத் தலைமை வகித்தவர் பிரபலமான பெரிய மனிதர்; நல்ல ரஸிகரும் கூட.

அவர் தம் கைப்பையிலிருந்து பளிங்காலான தாஜ்மஹால் பொம்மை ஒன்றை மேஜை மீது எடுத்து வைத்து, அன்பின் பெருமையை விளக்கிச் சிறந்த முறையில் பேசும் மாணவனுக்கு அந்த அழகிய பரிசை அளிக்கப் போவதாக அறிவிக்கவும், மாணவர்களின் கரகோஷம் விழாப் பந்தலைக் கிடுகிடுக்க வைத்து விட்டது.

பல மாணவர்கள் மேடையேறி வந்தனர். இதிகாச புராணங்களிலிருந்தும், நீதி நூல்களிலிருந்தும், சரித்திர வரலாறுகளிலிருந்தும் தாங்கள் படித்த பல கதைகளைக் கூறி உலகை ஆட்டுவிக்கும் அன்பின் பெருமையை நிலைநாட்டிப் பேசினார்கள்; எல்லோருமே நன்றாகப் பேசினார்கள். நீதிபதிகளும் அவையோரும் பொறுமையாகக் கேட்டுக் கொண்டிருந்தனர். நேரமோ ஓடிக் கொண்டிருந்தது. அத்துடன் போட்டியை நிறுத்திவிட முடிவு செய்து விட்டனர். அப்பொழுதுதான் ரமணி ஓடி வந்தான், மேடையை நோக்கி. கெஞ்சிக் கூத்தாடி, தானும் பேசத் தலைவரின் அனுமதியைப் பெற்று விட்டான்.

"பெரிய பெரிய பையன்களெல்லாம் பேசியாயிற்று. பரிசு யாருக்கு என்று முடிவும் ஆகியிருக்கும். இந்த வாண்டு இங்கே வந்து நேரத்தைப் பாழாக்குகிறானே!" என்று சபையோர் முணுமுணுக்க ஆரம்பித்தனர்.

வழக்கமான வணக்கம், நன்றி ஆகியவற்றைக் கூறிய சிறுவன் தன் நண்பர்களைப் போல் புத்தகக் கதைகளைக் கூறாமல், தன் வாழ்வில், தான் அனுபவித்து உணர்ந்த அன்பின் பெருமையைக் கூறப் போவதாகச் சொன்னான். மும்தாஜிடம் கொண்ட அன்பின் சின்னமாக ஷாஜஹான் கட்டிய தாஜ்மஹால் தன் சிறு வாழ்விலும் முக்கிய இடம் பெற்று விட்டதாகவும், தாஜ்மஹால் பொம்மையைக் கண்டதும் பழைய நினைவுகள் அலை போல் மோதுவதாகவும் கூறிச் சற்றே நிறுத்தினான்.

சிறுவனின் முகவுரையிலேயே சபை ஒன்றிப் போய் மேலே ஆவலாகக் கேட்க இருந்தது.

"சபையோர்களே! நான் இன்று தாயில்லாப் பிள்ளை. என் அம்மா ஆறு வயதுக் குழந்தையாக என்னை விட்டு விட்டுப் போய் விட்டாள். என் அம்மாவை எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. அருகில் உட்கார வைத்துக் கொண்டு கதை சொல்லுவாள். தான் சின்னக் குழந்தையாக இருந்தது, படித்தது, விளையாடியது, கல்யாணம் செய்து கொண்டது, நான் பிறந்தது எல்லாவற்றையும் ஒன்று விடாமல் சொல்லுவாள். அம்மா ரொம்ப நல்லவள். எல்லோருடைய அம்மாவும் அப்படித்தானே?" பையன் ஒரு கேள்வியைப் போட்டு விட்டுச் சற்று மௌனமாக இருந்தான், அன்னையின் உருவை மனக் கண்ணில் கண்டு மகிழ்பவன் போல்.

அம்மா போகும் பொழுது, 'ரமணி! நீ சமர்த்தாக இருக்கணும். உனக்குப் புது அம்மா வருவாள். படுத்தாமல் அசடு மாதிரி அழாமல் நல்ல குழந்தையாக இருக்கணும். நான் பார்த்துக் கொண்டே இருப்பேன்' என்றாள். நான் வேகமாகத் தலையை ஆட்டினேன். அப்பா 'ஓ'வென்று அலறி அழுதார்.

அம்மா செத்துப் போய் விட்டாள். அதே ஊரிலிருந்த மாமா, பாட்டி, பெரியம்மா எல்லோரும் வந்தார்கள். பாட்டி என்னைக் கட்டிக் கொண்டு, 'தாயில்லாக் குழந்தையாகி விட்டாயே! எந்த ராட்சசி வந்து உன்னைப் படுத்தப் போகிறாளோ, தெரியவில்லையே!' என்று கதறினாள். நான் மட்டும் அழாமல் எப்படி இருக்க முடியும்?

மேடை மீது நிற்பதையும் மறந்து சிறுவன் தேம்பித் தேம்பி அழுது விட்டான்.

"பாட்டி என்னை விட்டு நகர மாட்டாள். எல்லோரும் போய் விட்டால், நான் ஏங்கிப் போய் விடுவேன் என்று பாட்டியை வீட்டோடு இருக்கும்படி கேட்டுக் கொண்டிருந்தார் அப்பா.

பாட்டி கண்ணீர் விட்டபடியே இருப்பாள். எந்த ராட்சசி எனக்குச் சித்தியாக வந்து விடுவாளோ என்ற பயம்தான் அவளுக்கு.

ஒருநாள் அப்பா, 'ரமணி! சமர்த்தாயிரு. சாயங்காலம் ஓடி வந்து விடுவேன்' என்று சொல்லிவிட்டு விடியற்காலமே எங்கோ போய் விட்டார். அப்பாவை எதிர்பார்த்து நாள்முழுவதும் வாசற்படியிலேயே உட்கார்ந்திருந்தேன். அப்பா மோட்டாரில் வந்து இறங்கினார், ஒரு அழகான மாமியோடு. நான் அப்பா என்று கத்திக்கொண்டே போய் அவர் காலைக் கட்டிக் கொண்டேன். வாரி எடுத்துக் கொண்டு, 'ரமணி! இதோ, உனக்குப் புது அம்மா வந்திருக்கிறாள், பார்!' என்றார்.

புது அம்மா இரண்டு கைகளையும் நீட்டி, 'வாடா, கண்ணு' என்று அழைத்தாள். எனக்கு வெட்கமாகப் போய்விட்டது. ஆனால் அந்தப் புது அம்மாவின் முகம் அழகாக இருந்தது. அவள் கட்டியிருந்த புடவையின் பளபளப்பு கண்ணைப் பறித்தது. மெதுவாக ஒரு விரலால் புடவையைத் தொட்டுப் பார்த்தேன். அடுத்தகணம் புது அம்மா என்னை எடுத்துக் கொண்டு, என் இரு கன்னங்களிலும் முத்தமாகச் சொரிந்தாள். 'சமர்த்துக் குட்டி' என்று பாராட்டினாள். 'பாட்டி! எனக்குப் புது அம்மா வந்திருக்கிறாள், பார்!' என்று கத்திக் கொண்டே உள்ளே ஓடினேன். சமையலறையிலிருந்து எட்டிப் பார்த்தாள்.

அப்பாவும், புது அம்மாவும் பாட்டிக்கு நமஸ்காரம் செய்தனர். பாட்டியின் முகம், 'ஜிம்மி'யின் முகம்போல் ஆகிவிட்டது.

'துக்கிரிப் பிணமே! ஆரும் வயசிலேயே அம்மாவை உருட்டிவிட்ட உனக்கு ஆயுசுக்கும் அம்மா கிடையாது. அவள் உன் சித்தி. உன் அம்மா ஸ்தானத்தில் ஆள வந்துவிட்ட அரசி' என்று கத்திய பாட்டி என்னைக் கட்டிக் கொண்டு 'ஓ'வென்று பலமாக அழு தாள். எனக்கும் அழுகை வந்து விட்டது. அப்பா ரொம்பக் கோபமாக இருந்தார். பக்கத்தில் நின்ற என் புது அம்மாவை-இல்லை, இல்லை-என் சித்தியைப் பார்த்தேன். என் உடம்பு நடுங்கியது. 'ஐயோ! இவள் இடுப் பிலா நான்ஏறிக் கொண்டேன்?' 'வீல்' என்று கத்திக் கொண்டே, பாட்டியின் மடியில் முகத் தைப் புதைத்துக் கொண்டேன்.



பாட்டி அன்றே தன் வீட்டுக்குப் போய் விட் டாள். அதன் பின் அவர் கள் யாரும் எங்கள் வீட் டுக்கு வருவதே யில்லை. நான் மட்டும் பள்ளிக் கூடம் போகும் போது தினம் பாட்டி வீட்டுக்குப் போகாமல் இருக்கமாட் டேன். பாட்டி தின்பண் டம் கொடுப்பாள். மாமா அன்புடன் விசாரிப்பார். சித்தி அடித்தாளா, வைதாளா, நிரம்பச் சாப் பாடு போட்டாளா என்று என்னைக் குடைந்து குடைந்து கேட்டுத் தெரிந்து கொள்ளு வார்கள். 'அவள் ஏதாவது சொன்னால், நீ நன்றாக எதிர்த்துப் பேசி விடு' என்று பாட்டி கைநிறையத் தின்பண்டம் தருவாள். ஒவ் வொரு நாள் பாட்டியின் கேள்விகளைப் பொறுக்காமல் நானே சித்தியின் மேல் ஏதாவது குற்றத்தை ஏற்றிப் புகார் சொல்லு வதும் உண்டு.

சித்தியும் தாயில்லாக் குழந்தைதானாம். ஆனால் அவளுக்குச் சித்தியே வரவில்லையாம். என் சித்தி மிக நன்றாகச் சமைப்பாள். அவள் செய்யும் மைசூர்ப்பாகு நல்ல ருசியாக இருக் கும். ஒரு கட்டிக்குமேல் எனக்குக் கொடுக்க மாட்டாள். கேட்டால் உடம்புக்கு ஆகாது என்பாள். வஞ்சனைக்காரி. நான் மூத்தாள் பிள்ளைதானே! தன் பிள்ளையானால் கொடுக் காமல் இருப்பாளா! அவள் என்னவோ, 'ரமணி, ரமணி' என்று பிரியமாக இருப்பது போல்தான் இருக்கிறாள். அவ்வளவும் அப்பாவை ஏமாற்றப் போடும் வேஷம் என்று எனக்குத் தெரியாதா, என்ன?

நான் பெரியவனாகி விட்டேன். எட்டாம் வகுப்பில் படிக்க வந்து விட்டேன். நான் இப்பொழுதெல்லாம் சித்தியை லட்சியம் செய்வதே இல்லை. அவள் மட் டும் 'ரமணி, அதென்ன? இது எப்படி?' என்று ஏதாவது பேச்சுக் கொடுப்பாள். நான் விறைப்பாகப் பதில் சொல்லி விட்டுப் போய் விடு வேன். அதற்காக அப்பா என்னைக் கண்டிப்பது உண்டு. ஆனால் சித்தி, 'குழந் தைதானே, விடுங் கள்!' என்று குறுக் கிடுவாள்.

குழந்தை பிறக்க வில்லையே என்று சித்

திக்குக் குறை. 'ரமணி, நீ என்னை அம்மா என்று கூப்பிடேன். என் வயிற்றில்தான் ஒன்றும் பிறக்கக் கொடுத்து வைக்கவில்லை. உன்னை நான் பெற்ற குழந்தையாகத்தானே நினைக்கிறேன். அம்மா என்று கூப்பிடேன்' என்றாள். அவள் கண்களில் நீர் ததும்பிப் பளபளக்கும்.

நான் சற்று எடுப்பாகவே, 'நீ எப்படி என் அம்மா ஆகமுடியும்? மாற்றாந்தாய் பெற்ற தாய் ஆவாளா? என் அம்மா செத்துப்போய் விட்டாள். அதோ அவள்தான் என் அம்மா' என்று சுவரில் மாட்டியிருக்கும் புகைப் படத்தைச் சுட்டிக் காட்டிவிட்டு ஓடுவேன்.

அறையில் படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கிறார் என்று நான் நினைத்திருந்த என் அப்பா, கோபத்துடன் வெளி வருவதைக் கண்டதும் நடுநடுங்கி விட்டேன். சித்தி குறுக்கே வந்து தடுத்து விட்டாள். நான் பள்ளிக்கூடத்துக்கு ஓட்டம் பிடித்தேன்.

நாலைந்து நாட்கள் கழித்துப் பாட்டி, 'ஏன் ரமணி, உனக்கு ஒரு பங்காளி பிறக்கணும் என்று அந்தக் கடன்கார நாசகாலி அரசப் பிரதட்சிணம் செய்கிறாளாமே? தெரியுமா?' என்றாள்.

சித்தி கோவிலுக்குப் போவதும், விரதம் இருப்பதும் அதிகரித்திருந்தன. வேலை செய்த நேரம் போகப் பூஜையறையிலேயே அவள் அடைந்து கிடந்தாள்.

சித்திக்குக் குழந்தை பிறப்பதா என்ற எரிச்சல் ஓர் புறம். இன்னொரு புறம் என்னோடு விளையாட ஒரு தம்பியோ, தங்கையோ வேண்டும் போலிருந்தது. தம்பியை அடிப்பேன்; அதிகாரம் செய்வேன். இரண்டு பேரும் விளையாடலாம்; படிக்கலாம். எனக்குள் என்னவெல்லாமோ மனக்கோட்டைகள். தம்பியை எடுத்துக்கொள்ள என் கைகள் துடித்தன. நான் போகும் இடமெல்லாம் தம்பியை அழைத்துப்போக ஆசைப்பட்டேன்.




சித்தியால் வேலை செய்ய முடியவில்லை. உதவிக்கு வர அவளுக்குத்தான் அம்மா இல்லையே! வேலைக்காரர்கள் உதவியுடன் மெள்ள வீட்டு வேலைகளைச் செய்வாள்.

அன்று மயக்கம் வந்து படுத்து விட்டாள். டாக்டரம்மா வந்தாள். சித்திக்குக் குழந்தை பிறக்கப் போகிறதாம். நிஜமாகவே சந்தோஷத்தால் குதித்தேன். ஓடிப் போய்ப் பாட்டியிடம் சொன்னேன். 'ஐயையோ! தெய்வம் கூட அவள் பக்கம் இருக்கிறதே? குழந்தை பிறந்து விட்டால் உனக்குக்

## அவர் பதில் !

குமாஸ்தா :—ஸார்! எனக்கு ஒரு வாரம் லீவு வேணும்!

மானேஜர் :—என்ன, லீவா? போன மாசந்தானே ஒரு வாரம் லீவிலே போனே? இப்போ எதற்கு லீவு?

குமாஸ்தா :—ஸார்! எனக்குக் கல்யாணம்!

மானேஜர் :— அந்த லீவிலேயே கல்யாணத்தை முடிச்சிட்டிருக்கலாமே?...

குமாஸ்தா :— ஸார்! நான் அந்த லீவை சந்தோஷமாகக் கழிக்கணும்னு நினைச்சேன்!

சோறுகூடப் போட மாட்டாளே' என்று அவள் ஒப்பாரி வைக்க ஆரம்பித்தாள்.

சித்தி அயர்ந்து படுத்திருந்தாள். 'ஏன் சித்தி உடம்பு என்ன பண்ணுகிறது?' என்று கேட்க ஆசைதான். ஆனால் வெட்கமாக இருந்தது. பேசாமல் கட்டிலின் பக்கத்தில் போய் நின்று கொண்டேன்.

யோசனை செய்து, 'ஏன் சித்தி, உனக்குப் பாப்பா பிறக்கப் போகிறதா?' என்று கேட்பதற்குள் எனக்கு வியர்த்து விட்டது.

'ஆமாம், ரமணி! உனக்குத் தம்பிப் பாப்பா வேணுமா? தங்கைப் பாப்பா வேணுமா?' என்று கேட்டாள் சித்தி சிரித்துக் கொண்டே.

'எனக்குத் தம்பிதான் பிடிக்கும். இதோ பார், தம்பிக்கு இதைக் கொடுப்பேன்' என்று என் சின்னத் துப்பாக்கியைக் காட்டினேன். சித்தி பலமாகச் சிரித்து விட்டாள்.

மணி மூன்று அடித்தது. 'மருந்து குடிக்கணும்' என்று எழுந்தாள் சித்தி. 'இரு, சித்தி! நான் கொண்டு வந்து தருகிறேன்' என்று எழுந்து போய், அலமாரியைத் திறந்து மருந்து சீசாவை எடுத்தேன். சீசாவை எடுக்கும் வேகத்தில் அருகே இருந்த தாஜ் மஹால் பளிங்குப் பொம்மை உருண்டு கீழே விழுந்து சுக்குநூறாக உடைந்து போயிற்று.

'ஐயோ, ரமணி! உன் அப்பா வந்தால் கொன்று விடுவாரே' என்று பரிதாபமாகக் கத்தினாள் சித்தி. நான் பயத்தால் அடங்கிப் போனேன். தாஜ்மஹால் பொம்மை அப்பாவுக்கு எத்தனை அருமையான பொருள் என்று நானும் அறிவேன்; சித்திக்கும் தெரியும்.

அப்பா டில்லியில் வேலையாக இருந்த போது ஒரு தரம் தாஜ்மஹாலைப் பார்க்கப் போயிருந்தாராம். என் அம்மாவும் தன் பள்ளிக்கூடத் தோழிகளோடு ஆக்ரா வந்திருந்தாளாம். அங்கிருந்த கடையில் ஆளுக்கு ஒரு தாஜ்மஹால் பொம்மை வாங்கினார்களாம். அப்பாவின் அதிர்ஷ்டம் கடையில் பொம்மைகள் தீர்ந்து விட்டனவாம். அப்பா ரொம்ப வருத்தப்பட்டாராம். அப்பொழுது அம்மா, 'நான் இதை உங்களுக்குப் பரிசாகத் தருகிறேன். வைத்துக் கொள்ளுங்கள்' என்று கொடுத்து விட்டாளாம். அதன் பின் தான் அப்பாவுக்கும்அம்மாவுக்கும் கல்யாணம் நடந்ததாம். அம்மா இதைப் பலமுறை கூறியதுண்டு; அப்பாவும் சொல்லியிருக்கிறார். அதைத்தான் நான் உடைத்து விட்டேன்.

'கமலா! மருந்து குடித்தாயா!' என்று கேட்டுக் கொண்டே ஆபிஸிலிருந்து வந்தார் அப்பா. அவர் கண்ணில் காலி அலமாரிதான் முதலில் தென்பட்டது. 'தாஜ்மஹால் எங்கே?' என்று கர்ஜித்த அவர் குனிந்து தரையைப் பார்த்தார். உடைந்த பளிங்குச் சில்லுகள் என்னைப் பார்த்துக் கேலி செய்தன.

'இதை யார் உடைத்தது?' என்று அவர் கேட்கும்பொழுது என் உடம்பு கிடுகிடு வென்று நடுங்கியது. கிணற்றிலிருந்து பேசுவது போல 'நான் இல்லே!' என்று முனகினேன்.

'பின்னே யார்?' என்று அப்பா என்னை வேகமாக நெருங்கினார்.

'ரமணி உடைக்கவில்லை. மருந்து எடுக்கும்பொழுது நான்தான் கை தவறி உடைத்து விட்டேன்!' என்றாள் சித்தி.

அப்பா கோபத்துடன் திரும்பினார். 'என்ன உனக்கு அத்தனை அஜாக்கிரதை!' என்று உறுமிக்கொண்டே 'பட் பட்'டென்று சித்தியின் கன்னங்களில் அறைந்தார்.

பயத்தால் ஊமையாக நின்ற நான், அப்பா உள்ளே போனதும் சித்தியருகில் ஓடினேன். கன்னங்கள் கன்றிச் சிவந்துபோய், சித்தி சோர்ந்து படுத்து விட்டாள். நேரம் ஆக ஆக ஜுரம் விஷம் போல் ஏறியது. அப்பா உள்ளே விம்மி விம்மி அழுது கொண்டிருந்தார். அவரை நெருங்கப் பயந்து நானே ஓடிப் போய் டாக்டரை அழைத்து வந்தேன். 'ஜன்னி பிறந்துவிட்டது. பிழைப்பது கடினம்' என்று கூறிவிட்டார் டாக்டர்.

என் சித்தி போய் விட்டாள். எனக்காகப் பொய் சொல்லித் தன் உயிரைக் கொடுத்து என்னைக் காப்பாற்றிய சித்தி போய்விட்டாள். என்னைப் பெற்ற தாயார் இறந்தபொழுது உலகமறியாத குழந்தை நான். தாயாரை இழந்த நஷ்டத்தை அன்று நான் உணரவில்லை. ஆனால் இன்று...இன்று என் சித்தியின் அன்பின் பெருமையை ஒவ்வொரு விநாடியும் உணர்ந்து உருகுகிறேன்......''

ரமணி பேச்சை முடித்துக் கொண்டு உட்கார்ந்தான். சபையோர் கை தட்டக் கூட மறந்து உட்கார்ந்திருந்தனர். உள்ளத்திலிருந்து வந்த உணர்ச்சிமயமான சொற்களை உருக்கமான குரலில் கூறிய ரமணி சபையோரின் அன்புக்கும் அநுதாபத்துக்கும் பாத்திரமாகி விட்டான். பரிசுக்குடையவன் ரமணிதான் என்பதில் சந்தேகமென்ன?

பரிசைப் பெற்றுக் கொண்ட ரமணி சபையில் முதல் வரிசையில் அமர்ந்திருந்த பிரபல எழுத்தாளர் 'பேனுராணி'யிடம் ஓடினான். 'அம்மா! இதோ பார், என் பரிசை' என்று மகிழ்ச்சியுடன் கூறிய அச் சிறுவனைக் கட்டி அணைத்துக் கொண்டார் அவர்.

'அட! கடைசியில் இந்தப் பொடிப்பயல் பொய் அல்லவா சொல்லி நம்மை அழவைத்து விட்டான்! 'பேனு ராணி'யின் பிள்ளையாமே? புலிக்குப் பிறந்தது பூனையாகுமா? புலிக்குட்டி தான்' என்று சபை கைகொட்டி நகைத்தது.

# உங்களுக்குத் தெரியுமா ?

இந்திய அரசாங்கத்திலிருந்து
15 ஆண்டுகளுக்கு
வருமான வரியில்லாத
வருமானம் பெறலாம்
நீங்கள்...

## உதாரணமாக :

ரூபாய் 6,650 செலுத்தினால் 15 ஆண்டு காலத்துக்கு மாதம் ஒன்றுக்கு ரூ. 50 விதம் திரும்பக் கிடைக்கிறது உங்களுக்கு.

# 15-ஆண்டு வருடாந்தர சர்டிபிகேட்டுகள்

(இரண்டாம் வரிசை)

அரசாங்க கஜானாக் கொடுக்கல்-வாங்கல் நடத்துகிற இந்திய ஸ்டேட் பாங்கியின் கிளைகளிலும், ஐதராபாத் ஸ்டேட் பாங்கி, மைசூர் பாங்கி (லிமிடெட்), அரசாங்க கஜானா, பொதுக் கடன் மன்றங்கள், தேசிய சேமிப்பு ஸ்தாபனம் ஆகியவற்றிலும் மேற்கண்ட சர்டிபிகேட்டுகளில் எளிதாக முதலீடு செய்ய வசதி செய்து தரப்படும்.



# தேசீய சேமிப்பு ஸ்தாபனம்

DA-67/319




அன்பான கண்ணனுக்கு,

கண்ணு பாப்பா எழுதியது. அது யாருடா கண்ணு பாப்பான்னு பார்க்கிறியா? நான் பிறந்த பத்தாம் நாள் தொட்டிலிலே போடும்பொழுது என் அம்மா இருக்கிறாளே, அவள் ஆசையோடு புதிசாக நாகரிகப் பெயராக இருக்க வேணும் என்று, 'ரவி பாபு' என்று பெயர் வைத்தாள். அம்மாவுக்குப் பெயரைப் பத்தியெல்லாம் கவலையில்லை. எல்லாருக்கும் ஒரே கணக்காக அஞ்சு வயசுமட்டும் 'ஏலே பயலே' என்பாள். அப்புறம் 'ஏண்டா மண்டு' என்று பதினைஞ்சு வயதுவரை கூப்பிடுவாள். அதற்கப்புறம் 'ஏ தறிதலை' என்று பெயர் வைத்துவிடுவாள். இப்போது அப்பா என்னை 'ஏலே பயல்' என்றுதான் கூப்பிடுகிறார். எங்கள் பாட்டிக்கு இதெல்லாம் ஒன்றும் பிடிக்கவில்லை. அழகாகக் 'கண்ணன்' என்று பெயர் வை என்று உத்தரவு போட்டுவிட்டாள். உன் அண்ணா பலராமனுமே, அதே போல எனக்கு ஒரு அண்ணா தடிராமன் இருக்கிறான். அவன் ஒரு நாள் ஆசையோடு 'கண்ணு பாப்பா' என்று அவனையும் மறந்து கொஞ்ச ஆரம்பித்து விட்டான். அன்றைக்குக் கேட்ட அந்தப் பெயர் என் மனசிலே பதிஞ்சு போச்சு. அதனால் யாராவது 'உன் பெயர் என்னடா?' என்று கேட்டால் டக்கென்று 'கண்ணு பாப்பா' என்றுதான் சொல்லுவேன்.

''ஏண்டா, கண்ணு! நீ ரொம்பக் கறுப்பாமே! பாட்டி உன்னைப் பற்றிக் கதை கதையாகச் சொல்லுவாள். நான் தூங்கவேணும் என்பதற்காகப் பாட்டி கதை சொல்லுவாள். கடையிலே நான் கொட்டக் கொட்ட முழிச்சிண்டு இருப்பேன். பாட்டி வாயிலே கொசு புகுந்ததுகூடத் தெரியாமல் கதையைப் பாதியிலே விட்டு விட்டு 'ஆ'ன்னு தூங்குவாள்...வந்து... என்ன சொன்னேன்? நீ கறுப்புன்னு சொன்னேன், இல்லையா? எனக்கும் உனக்கும் இதிலே ரொம்ப ஒற்றுமையடா. நானும் கறுப்புத்தான். எங்க அப்பா சொல்லுவார், 'அட்டக் கரியாக ஒரு குழந்தை பிறந்திருக்கு' என்று. அம்மாகூட எப்பொழுது பார்த்தாலும் என்மேலே கோபித்துக் கொள்வாள். 'ஏண்டா, நீயும் கறுப்புத்தானே? ஆனால் உன்னை மட்டும் நீலமேகசியாமளன், கார்மேகவண்ணன், அப்படி இப்படி என்று பக்தி பரவசமாக அதிலே வைச்சுப் புகழ்கிறார்களே, என்னை மட்டும் ஏண்டா திட்டணும்? நீயும் குழந்தை, நானும் குழந்தைதானே?

பலராமன் உன்னைக் கறுப்பு, கறுப்பு என்று பரிகாசம் செய்வானாம். நீ யசோதையிடம் புகார் பண்ணுவாயாம். அப்போ யசோதை பலராமனைத் திட்டுவாளாம். இப்படி சூரதாஸர் எழுதி வைத்திருக்கிறாரே! அதைப் படித்தபிறகாவது எங்கம்மாவுக்குத் தெரிய வேண்டாமா? எங்கண்ணா தடிராமன் என்னைப் பரிகாசம் பண்ணினால், எங்கம்மா எனக்குப் பரிஞ்சு பேசவே மாட்டாடா. ஏண்டா, கண்ணு! உங்கம்மா உனக்குப் பரிந்து பேசும்படியாக நீ என்னடா மந்திரம் போட்டாய்?

சின்னக் குழந்தையாயிருக்கும் பொழுது ஒரு நாள் நான் படுத்துக் கொண்டிருந்தேன். அப்பொழுது என்ன ஆச்சு, தெரியுமா? ஒரு பெரியவள் வந்தாள். அவளது கொண்டையும், மூஞ்சியும் ஐயே, பார்க்கச் சகிக்கலே! அவள் என்னைத் தூக்கிக் கொண்டாள். எனக்கு ரொம்பவும் பயமாய்ப் போய்விட்டது. அம்மாவோ சமையலறையிலே இருந்தாள். எனக்கு ஒரு சந்தேகம் வந்து விட்டது. ஒருவேளை இவளும் ஒரு பூதகியோ? அவ்வளவுதான்; 'பட்'டென்று அவள் மார்பிலே ஒரு உதை விட்டேன், பார்! அவள் 'ஐயோ, அம்மா!' என்று மார்பைப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்து விட்டாள். அவள் சத்தத்தைக் கேட்டு அம்மா ஓடி வந்தாள். இந்தப் பூதகியைத் தள்ளினதற்கு அம்மா என்னைத் தூக்கிக் கொஞ்சித் திருஷ்டி கழிப்பாள் என்று சந்தோஷமாக அம்மாவைப் பார்த்தேன். அம்மா என்ன செய்தாள், தெரியுமா? 'பட் படார்' என்று முதுகிலே ஒரு அடிவைத்

## எஸ்.ரங்கநாயகி

தான்: அப்புறம் 'எங்கே இருந்து தான் இப்படி ஒரு துஷ்டனைப் பிறந்தாயோ? கலெக்டர் வீட்டு மாமி வந்து ஆசையோடு தூக்கினால் இப்படியா உதைக்கிறது?' என்று இன்னொரு அடி கொடுக்க வந்தாள். கலெக்டர் வீட்டு மாமியை உதைக்கக்கூடாது என்று நான் கண்டேனா? நான் 'ஆ'ன்று பெரிசாக அழ ஆரம்பித்து விட்டேன். அம்மா பயந்துவிட்டாள். ஏனென்றால் நான் அழ ஆரம்பித்தால் சீக்கிரமாக வாயைமூடமாட்டேன் என்று அம்மாவுக்குத் தெரியும். கலிகாலத்திலே நடக்கிற அநியாயத்தைப் பார்த்துக்கொள். நீ பூதனையை உதைத்ததற்காக எல்லோரும் உன்னைப் புகழ்கிறார்கள். என்னை மட்டும் அடிக்கிறார்கள். காலம் மாறிப் போச்சு, கண்ணா, காலம் மாறிப் போச்சு!

உன் கதையைக் கேட்டுக் கேட்டு உன்னைப் போல இருக்க வேணும் என்று எனக்கு ரொம்ப ஆசை. நீ வெண்ணெய் திருடுவாயாமே? தஞ்சாவூர் கோபால பாகவதர் இருக்கிறாரே, தெரியுமா? அதுதாண்டா எங்கள் வீட்டுக்கு எதிர்த்த வீட்டிலே குழந்தை குட்டி பேரன் பேத்திகளோடு இருக்கிறாரே, உன்னைப்பற்றிச் சரமாரியாக உபன்யாசம் பண்ணுவாரே, அவர்தான்!

உபன்யாசம் கேட்டுக் கொண்டே என்னையும் சில பிள்ளைகளையும் தவிர, மற்றவர்களெல்லாம் ரயிலில் ஆடி ஆடி விழுந்து தூங்குவார்களே, அது போல் தூங்கி விழ ஆரம்பித்து விடுவார்கள். சிலர் தஞ்சாவூர் பொம்மை மாதிரி ஆடுவார்கள். பாகவதர் என்ன செய்வார், தெரியுமா? எல்லோரும் விழித்துக் கொள்ளவேணும் என்பதற்காக நடு நடுவிலே 'கோவிந்த நாம சங்கீர்த்தனம்' போடுவார். எல்லோரும் 'கோவிந்தா, கோ-விந்தா' என்று சொல்லுவார்கள். ஆனால் முதல் கோவிந்தாவிலே விழித்துக்கொண்டு விட்டு, இரண்டாவது கோவிந்தாவிலே தூங்கிப் போய் விடுவார்கள்.

இரு...என்னவோ எழுத வந்து என்னவோ எழுதிக்கொண்டு' போகிறேனே! எங்கள் பாட்டி, அம்மா








இவர்களுடைய சகவாஸத்தினலே சொல்ல வந்த விஷயத்தை உடனே சொல்லுகிற வழக்கம் எனக்குப் போய்விட்டது. வளவளவென்று சுற்றி வளைத்துப் பேசுகிற பழக்கம் வந்து விட்டது ... வந்து...அந்த பாகவதர், நீ சின்னக் குழந்தையிலே செய்த லீலைகளைப் பற்றியெல்லாம் வர்ணிப்பார். நாங்களும் சுவாரஸ்யமாகக் கேட்போம். நல்ல விஷமக்காரப் பயலடா நீ! வெண்ணெய் திருடும் படலத்தைப் பற்றி ஒருநாள் அவர் வர்ணித்ததும், என் நாக்கிலே ஜலம் ஊறி விட்டது. வெண்ணெயை வாயிலே போட்டுக் கொள்வதுபோல என் மனக கற்பனை பண்ணியது; என் கை பக்கத்திலிருந்து ஒரு பிடி மண்ணை வெண்ணெயாக எண்ணி அள்ளி வாயில் போட்டுக் கொண்டது.

'இனிமேல் மண்ணைத் தின்னுதே, மண்ணைத் தின்னுதே' என்று அம்மா கொடுத்த பூசை இருக்கிறதே. இன்றைக்கு நினைத்தாலும் பயமாயிருக்கிறது. நீ தின்றபொழுது, உன் அம்மா பார்த்துவிட்டு உன்னைத் தெய்வமாக எண்ணிப் பூசை செய்தாளாம். ஆனால் எங்க அம்மா...ஆமாம், இரண்டு பேரும் பண்ணிய காரியம் பூசைதானே?

இன்னொரு நாள் என்ன ஆச்சு, தெரியுமா? எங்க பாட்டி தயிர் கடைந்து கொண்டிருந்தாள். 'மொழு மொழு' என்று வெளுப்பாக மேலே வெண்ணெய் மிதந்துகொண்டு வந்தது. அதை அப்படியே எடுத்து எங்க பாட்டி உறியிலே வைத்ததைப்பார்த்தேன். எனக்கோ நாக்கிலிருந்து நீர், வெண்ணெய் மாதிரி உருகிக் கொட்டியது. பாட்டியோ அந்த இடத்தை விட்டு நகரவில்லை.

கொஞ்சநேரம் கழித்துப் பாட்டியிடமிருந்து 'குர்புர்' என்று சப்தம் வந்தது. பாட்டி தூங்க ஆரம்பித்து விட்டாள். அம்மாவும் மாதர் சங்கத்துக்குப் போய் விட்டாள். அப்பா தூங்குவதற்கு ஆபீஸுக்குப் போய் விட்டார். இதுதான் சமயம் என்று உறியிலே இருக்கிற வெண்ணெயைக் கபளீகரம் செய்யத் தீர்மானித்து, மெள்ளச் சமையலறைக்குப் போனேன். எட்டி எட்டிப் பார்த்தேன்; எட்டவில்லை. நீ ஏறினாற்போல் ஒரு பையனைக் குனிய வைத்து ஏறலாம் என்று பார்த்தால், அடுத்த வீட்டு வானரங்கள்—, எதிர் வீட்டுக் குரங்குகள் இவை ரொம்ப ரொம்பப் பொல்லாதவை, உதவிக்கு வராதவை. 'மாமி! உங்க வீட்டுக் கண்ணன் வெண்ணெய் திருடுகிறன்' என்று கோள் சொல்லி எனக்கு அடி வாங்கி வைத்து விடுவார்கள். அதோடு, இருக்கிற வெண்ணெயோ எனக்குத் தான் சரியாக இருக்கும். உன்னுடைய காலத்தைப்போல் சட்டி சட்டியாக இப்போது வெண்ணெய்க்கு எங்கே போகிறது? எல்லாம் பவுடர் பாலாயிற்றே?

அதனால், நானே ஏதாவது தந்திரம்செய்யத் தீர்மானித்தேன். எனக்குப் பாட்டி முதல் நாள் சீடை கொடுத்திருந்தாள். கல் உடைத்தாலும் உடையும். ரோட் இஞ்ஜின் மேலே போட்டால்கூட, அந்தச் சீடை உடையாது. அத்தனை கெட்டிப் பண்டம். அதை எடுத்து உறியைக் குறி வைத்தேன். 'ணங், ணங்' சத்தம்தான் கேட்டது. பாத்திரம் பொத்தலாகவில்லை. மோரும் வெளியிலே எட்டிப்

பார்க்கவில்லே. அப்புறம்தான் எனக்கு என் மடத்தனம் புரிந்தது. மோர் பாத்திரம் எவர்ஸில்வர் பாத்திரம். நீ கல்லாலே தகக்கினுல்கூட நசுங்காது; உடையாது. அம்மாவும் பாட்டியும் சண்டை போடும்போதுகூட அது உடையாமல் நசுங்காமல் இருக்கிறதென்றுல் பார்த்துக் கொள்.

அட கடவுளே! நான் நின்றுகொண்டு இருக்கும்போதே, 'ணங் ணிங்' சத்தத்தைக் கேட்டுப் பாட்டி எழுந்து வந்துவிட்டாள். எனக்கு ஒரே பயமாகப் போய்விட்டது. கீழே சீடை உருண்டு கிடந்தது. உறி ஆடிக் கொண்டு இருந்தது. 'ஏண்டா பயலே, இப்பொழுதே பிடித்துத் திருட்டு புத்தி வந்துவிட்டதா?' என்று கையை ஓங்கினுள்.

'ஐயோ, அடிக்காதே, பாட்டி! மோர் பாத்திரத்துக்கு மேலே எறும்புமாதிரி இருந்தது. அதற்காகச் சீடையைப் போட்டு விரட்டினேன்' என்று சொல்லிவிட்டு ஒரு ஓட்டம் பிடித்தேன், பார்! வாசலில் வெளிக்கம்பியிலே போய் முட்டிக்கொண்டபின்தான் நின்றேன்.

இந்த வெண்ணெய் சாப்பிடுவதற்கு எனக்கு இன்னொரு யோசனை தோன்றியது. நேராக அந்தத் தஞ்சாவூர் பாகவதர் வீட்டுக்குப் போனேன். புஸ்தகம் படித்துக்கொண்டிருந்தார் அவர். ராத்திரி உபன்யாசத்திலே எல்லா விஷயங்களையும் சொல்லணுமே! 'மாமா, அந்த மாயக் கண்ணனைப் பற்றி நீங்கசொல்கிறதெல்லாம் ரொம்ப நன்றாயிருக்கிறது' என்றேன். கடவுளே முகஸ்துதிக்கு மயங்கும் பொழுது அவர் எம்மாத்திரம்? அந்த மாமா உன்னைப் பற்றி இன்னும் கதையெல்லாம் அளந்தார். அது மட்டுமில்லே, நான் இந்தப் புஸ்தகம் படித்திருக்கிறேன், அந்தப் புஸ்தகம் படித்திருக்கிறேன் என்று தன்னைப் பற்றியும் கதையெல்லாம் அளந்தார். இதுதான் சமயம் என்று 'மாமா, எங்கள் வீட்டிலே மருந்துக்கு வெண்ணெய் வேணுமாம். வாங்கிக்கொண்டு வரச் சொன்னுர்கள்' என்றேன். அவ்வளவுதான், மூக்குக் கண்ணாடிக்கு மேலே அவருக்குக் கோபம் வந்துவிட்டது. 'தடி ராஸ்கல், உங்க வீட்டிலே தினம் வெண்ணெய்எடுக்கிறது எனக்குத் தெரியாது என்று நினைக்கிறுயா?' என்று கொம்பைத் தூக்கிக் கொண்டார். ரேஸ் வேகத்திலே வீட்டுக்கு ஓடி வந்து, சமர்த்துப் பிள்ளையாகப் பாட்டியின் அருகில் படுத்துக் கொண்டு விட்டேன்.

எல்லோர் வீட்டிலும் நீ வெண்ணெய் திருடினுய். அப்படியும் அதைப் பாவ லீலை என்று எல்லோரும் சொல்கிருர்கள். நான் நியாயமாகக் கேட்டால் கூட எல்லோரும் என்னை அடிக்க வந்துவிடுகிருர்கள். டேய் கண்ணு! ஏண்டா இந்த ஓரவஞ்சனே?

கண்ணு! அன்றைக்கு ஒரு நாள் வேடிக்கை நடந்தது. அம்மாவிடம் என்னைப் பற்றி எல்லோரும் புகார் பண்ணினுர்கள். 'இந்தச் சனியனை ஆபீஸ் அறையிலே எதற்கு விடுகிருய்? மேஜையிலே இருக்கிற காகிதத்தையெல்லாம் கிழிக்கிறது!' என்றுர் அப்பா. 'ஏ அம்மா, உன் செல்லக் குழந்தையை உன் கிட்டேயே வைச்சுக்கோ. நான் பரீட்சைக்குப் படிக்க வேணும். பேனவை எடுக்கிறுன்'

என்று அண்ணன் தடிராமன் சொன்னான். எங்கள் மாமா பெண் மூகடு ஒன்று இருக்கிறது. அதுவும் ஏதோ கோள் சொல்லியது. அம்மாவுக்குக் கோபம் வந்தது. கொல்லைப் பக்கத்து வராந்தாவிலே என்னை விட்டுக் கதவை மூடிவிட்டாள்.

சுற்றிக் கண்ணோட்டம் விட்டேன். பாட்டி வெற்றிலை, பாக்கு, சீடை, முறுக்கு எல்லாம் பொடி பண்ணும் சின்ன உரல் கண்ணில் பட்டது. அதைப் பார்த்ததும் என் மூளை வேறு விதமாக வேலை செய்தது. நீ உரலை இழுத்துக் கொண்டு இரண்டு மரத்து நடுவிலே போனாயாம். அப்போ இரண்டு பெரிய தேவதைகள் வந்தார்களாமே! அதே போல இந்த உரலை நான் இழுத்துக்கொண்டு போனால் இரண்டு சின்னத் தேவதைகளாவது வர மாட்டார்களா என்று தோன்றியது. உடனே நானே என்னை ஒரு கயிற்றினால் உரலில் கட்டிக் கொண்டு தோட்டத்துப் பக்கம் அதை இழுத்துக்கொண்டு தவழ்ந்து போனேன். இந்தச் சின்ன வெற்றிலை உரல் மரத்தைத் தள்ளாதே என்பதற்காக இரண்டு செடிக்கு நடுவிலே போனேன். செடி முறிந்து விழுந்தது. தொப்பென்று என்மேலேயும் ஏதோ இரண்டு விழுந்தது. தேவர்கள்தான் வந்து விட்டார்களாக்கும் என்று பார்த்தால் இரண்டு அணில் குஞ்சுகள் விழுந்து அடித்துக்கொண்டு ஓடின. அடுத்த கணம் இரண்டு தேவ கன்னிகைகள் தோன்றினார்கள். ஒன்று பரதேவதை, இன்னொன்று கிருஹதேவதை. அம்மாவும் பாட்டியும் இரண்டு பக்கத்திலே வந்து நின்று விட்டார்கள். 'ஐயோ பாவம்!' என்று திருஷ்டி கழித்துப் போடுவார்கள் என்று நினைத்தேன். ஆனால் பாட்டியோ ''ஏண்டா, மடையா! அழகாக ஸ்வாமிக்கு இரண்டு பூ பூக்கட்டும் என்று இரண்டு பாரிஜாதச் செடி கொண்டு வைத்தால் இப்படியா உருட்டுவாய்?' என்று திட்ட ஆரம்பித்துவிட்டாள். 'எங்கே இருந்துதான் இந்தப் பிள்ளை பிறந்ததோ?' என்று அம்மாவும் கத்த ஆரம்பித்து விட்டாள். எனக்கு அப்போதுதான் அழுகையாக வந்தது. டேய் கண்ணா, பிறந்தால் உன்னைப் போல் பிறக்கணும்; உங்கம்மாவைப் போல் இருக்கணும்.

ஒரு நாள் தோட்டத்தைச் சுற்றிக்கொண்டிருந்தேன். தூரத்திலே சின்னதாக ஒரு பாம்பு. அதைப் பார்த்ததுமே எனக்கு ஜுரம் வரும்போல் இருந்தது. அதைக் கல்லாலே அடித்துப் பார்த்தால் என்ன? துணிச்சலை வரவழைத்துக் கொண்டு ஒரு பெரிய கல்லைத் 'தூக்கி அதன் தலையிலே போட்டேன், குறி சரியாக விழவே பாம்பு நகரவில்லை. செத்துப் போய்விட்டது.

உடனே எனக்கு ஒரு யோசனை தோன்றியது. அந்தப் பாம்பை எடுத்துத் தண்ணீர் நிரப்பும் தொட்டியிலே போட்டு, கை இரண்டையும் விரித்துக் கொண்டு ஒரு காலையும் தூக்கிக் கொண்டு நின்று விட்டால், நீ காளிங்க நர்த்தனம் செய்கிறாற் போல் பொம்மை இருக்குமே, அந்த 'போஸ்' கிடைக்காதா என்று எண்ணி அருகில் போனேன். செத்தபாம்பாயிருந்தாலும் பயம் விடுகிறதா? மெதுவாக அடிமேல் அடி வைத்துக் கிட்டப்போய்த் தொட்டேன். ஹா...ஹா இப்பொழுது நினைத்தால் கூடச் சிரிப்பு வருகிறது. அது நிஜப்பாம்பு இல்லை; ரப்பர்பாம்பு!

எங்கள் பக்கத்து வீட்டிலே ஒரு மாமி; அவளுக்கு ஒரு பெண். அதுவும் உன்னையும் என்னையும்போல ஒரே கறுப்பாகத்தான் இருக்கும். ஆனால் அந்த மாமி 'மேக்கப்' செய்து, ஒரேநாளில் ஒரு டின் பவுடரைக் காலிசெய்து, இந்தக் காலத்து வழக்கம்போல் அஞ்சு வயசு முடிவதற்குள்ளாக நடனம், பாட்டு, படிப்பு எல்லாம் சொல்லி வைத்திருந்தாள்.

கோகுல சமயத்திலே எங்க பாட்டி எனக்குக் கிருஷ்ணன் வேஷம் போட்டிருந்தாள். தலையிலே கொண்டை போட்டு மயில் வைத்துத் திலகம் இட்டாள். கழுத்திலே மாலை, இடுப்பிலே பட்டு, கையிலே வளை, மோதிரம், காலிலே சலங்கை, இடுப்பிலே ஒரு மூங்கில் குழி — அதுதான் புல்லாங்குழல்!

இதே சமயத்தில் பக்கத்து வீட்டிலிருந்து 'தீராத விளையாட்டுப் பிள்ளை' என்ற பாட்டு காதிலே விழுந்தது.

நான் சட்டென்று அதே கிருஷ்ண வேஷத்தோடு அவர்கள் வீட்டுக்கு ஓடினேன். மெதுவாக அவள் பின்னால் போய் நின்று மயிரைப் பிடித்துஇழுத்தேன், உன்னைப்போல. ''தீராத விளையாட்டுப் பிள்ளை. தின்னப்பழம் கொண்டு சட், தூத்தரி...யார் அது சனியன்'' என்று அவள் பிசாசாகக் கிளம்பிவிட்டாள். எனக்கு ஒரே நடுக்கமாகப் போய் விட்டது. தலைமயிரைப் பிடித்து இழுத்ததிலே கையோடு சவுரி வந்துவிட்டது. அதோடு எடுத்தேன் ஓட்டம். அந்த மாமியும் பெண்ணும் ''என்ன கழிசடைப் பிள்ளையோ? கன்னங் கரேல் என்ற இந்தப் பிள்ளைக்குக் கிருஷ்ணன் வேஷம் வேறு போட்டு வைத்திருக்கிறது. அந்தப் பீடையும் தன்னைக் கிருஷ்ணன் என்று நினைத்துக்கொண்டு பின்னலைப் பிடித்து இழுக்க வந்து விட்டது. தரித்திரம்!'' என்று திட்டிக் கொண்டு கிடந்தார்கள்.

டேய் கிருஷ்ணா, நீயும் கறுப்பு; நானும் கறுப்பு. நீயும் குழந்தை; நானும் குழந்தை. நீயும் பின்னலைப் பிடித்து இழுத்தாய்; நானும் இழுத்தேன். நீயும் கண்ணன்; நானும் கண்ணன். இவ்வளவு ஒற்றுமை இருக்கும்போது உன்னை மட்டும் அவர்கள் புகழுவானேன்? என்னை இகழுவானேன்?

''ஏலே பயலே! நான் கதை எழுத வைத்திருக்கிற பேப்பரை எடுத்து என்னடா பண்ணுகிறாய்?'' என்று அப்பா கத்த ஆரம்பித்து விட்டார்டா. அதனாலே இதோடு நிறுத்திக் கொள்ளுகிறேன்!

அடாடா, இது நினைவே இல்லாமல் போச்சே! ஏண்டா கண்ணா, நீ இப்பொழுது யார் வீட்டில் இருக்கிறாய்? தேவகி வீட்டிலா? யசோதை வீட்டிலா? யார் வீட்டு விலாசத்துக்கு எழுதுகிறது என்று உடனே தெரியப் படுத்து. அப்புறமாக நான் இதைத் தபாலில் சேர்க்கிறேன்.

இப்படிக்கு, உன் அன்பான
கண்ணா பாப்பா.




## T'e Call of the Jagadguru

சாரதா பீடாதிபதியாக விளங்கி சமாதி யடைந்த சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ சந்திர சேகர பாரதி சுவாமிகளின் உயர்ந்த பல உப தேச மொழிகள் இந்த அருமையான ஆங்கில நூலில் அடங்கியிருக்கின்றன. சுவாமிகளிடம் மிகுந்த அன்பும் பக்தியும் கொண்டு அந்த மகானின் சிஷ்யராகத் திகழ்ந்த ஸ்ரீ ஆர். கிருஷ்ணசாமி ஐயர் அவர்களால் வெளியிடப் பட்டுள்ள இந்நூலை, ஹிந்து மதத்தின் மகோன்னதமான லட்சியங்களைத் தெளிவாக விளக்கும் ஒரு பொக்கிஷம் என்றே சொல்ல லாம். குருவின் பெருமை, கடவுளின் கட்டளை கள், தர்மம், கல்வி, மனிதனின் கடமை, ஆனந்த ஆராய்ச்சி, மனத்தூய்மை, பக்தி, மெய் அறிவு, முயற்சி திருவினையாக்கும் என்பவை போன்ற தலைப்புகளின் கீழ் சிருங் கேரி சங்கராச்சார்ய சுவாமிகளின் உபதேச மொழிகள் பல அத்தியாயங்களாக வெளி யாகியிருக்கின்றன. மாபெரும் தத்துவங்கள், சிக்கல் எதுவுமின்றி எளிய ஆங்கில நடையில் மிகத் தெளிவாகப் பரிசீலனை செய்யப்பட் டிருப்பது இந்த நூலின் விசேஷ அம்சம்.

பாமர மக்களுக்கும் புரியும் வகையில் சுவாமிகள் நிகழ்த்திய பிரசங்கங்களின் சாரமே இந்தப் புத்தக வடிவமாக வெளியாகி யுள்ளது. ஆர்ட் பேப்பரில் சுவாமிகளின் படம் வெளியாகியிருப்பதுடன், இந்த நூலை உயர்ந்த கிளேஸ் காகிதத்தில் அச்சிட்டிருக் கிறார்கள்.

கிடைக்குமிடம் : கணேஷ் அண் கம்பெனி, சென்னை—17; விலை: ரூ. 4.

## The Journal of the Music Academy

1956-ஆம் ஆண்டுக்குரிய நான்கு சஞ்சிகைகளையும் ஒன்றுசேர்த்து, சென்னை ஸங்கீத வித்வத் ஸபை இவ் வருஷ ஆரம்பத் தில் வெளியிட்டிருக்கிறது. எதற்காக இவ் வளவு தாமதமாக, இந்த இதழை வெளியிட வேண்டும் என்று சிலர் எண்ணலாம்.

இம்மாதிரி ஸஞ்சிகைகள் காலவரம்புக்குட் பட்ட கருத்துக்களை விவரணம் செய்பவை அல்ல. சங்கீதத்துறையில் ஆராய்ச்சிகள் நடத்தி, பலப்பல புதிய விஷயங்களையும் கருத் துக்களையும் பெரு முயற்சி எடுத்துக்கொண்டு வழங்கும் உயர்தர சஞ்சிகைகளில் இதற்கு முதல் ஸ்தானம் வழங்க வேண்டும். இதில் விவரிக்கப்பட்ட விஷயங்கள் எல்லாம் என் றைக்கும் நிலையாக இடம் பெறத் தக்கவை.

தம்பூராவின் அமைப்பைப்பற்றியும் அதன் பல்வேறு தந்திகளின் ஒலி அலைகளின் வேகம், நீளம், அதிர்வு முதலிய அம்சங்களையும் விஞ் ஞான ரீதியில் விளக்கி வைக்கிறது, ஒரு கட்டுரை. கமகங்களைக் கற்கும் முறையை யும், ஒரே ஸ்வர அமைப்புள்ள ராகங் களைக் கமக மாறுதல்களினால் எவ்வாறு அறிய லாம் என்பதை விவரிக்கிறது, மற்றொரு கட்டுரை. ஹிந்துஸ்தானி சங்கீதத்தின் ராக பாவங்களை ஆதார பூர்வமாக விளக்குகிறது இன்னொரு கட்டுரை. முகாரி ராகத்தின் சிறப்பைத் தனிப்பட்ட முறையில் எடுத்துக் காட்டுகிறது மேலும் ஒரு கட்டுரை.

இவற்றைத் தவிர ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர் இயற்றிய, இதுவரையில் வெளி வராத இரண்டு புதிய கிருதிகளும், அதே போல் பட்டணம் சுப்பிரமணிய அய்யர் அவர் களுடைய இரண்டு புதிய வர்ணங்களும், பூச்சி அய்யங்காரின் இரண்டு புதிய கீர்த்தனை களும் ஸ்வர ஸாஹித்திய அமைப்புடன் கொடுக்கப்பட்டிருப்பது இந்த இதழின் சிறப்பை உயர்த்துகிறது.

வருஷ சந்தா: உள்நாடு ரூ. 4. கிடைக்கு மிடம்: மியூசிக் அகாடமி, 115-இ, மௌப் ரேஸ் ரோட், சென்னை - 14.

## உலக சமாதானம்

"தனி மனிதனின் வாழ்வில் ஏற்படும் சமா தானத்தை அடிப்படையாகக் கொண்டுதான் உலக சமாதானத்தை உருவாக்க வேண்டும். இயற்கைத் தத்துவத்தை அறிந்து ஆன்மீக நோக்கத்தோடு வகுத்து அமுலாக்கப்படும் பொருளாதாரச் சீர்திருத்தம் ஒன்றே மனித இனத்தின் வாழ்வில் சமாதானம் என்ற நல் விளைவைத் தோற்றுவிக்க முடியும். இத் தகைய சமாதானமே உலகில் நீடித்து நிற்க வும் முடியும்" என்ற குறிக்கோளை அடிப் படையாகக் கொண்டு இம்மாபெரும் நூல் எழுதப்பட்டிருக்கிறது.

"பொருள்களை மாத்திரம் பொதுவுடை மையாக்க வேண்டும் என்று எண்ணுவது உணர்ச்சி வசப்பட்ட கருத்தாகும்.

"மனிதன் பொதுவுடைமையாக வேண் டும். ஒவ்வொரு மனிதனும் தன்னை உலக மக்களின் நலனுக்காகவே அர்ப்பணித்துக் கொள்ள வேண்டும்......" என்னும் கருத்தை விளக்க இந்நூலாசிரியர் 464 பக்கங்கள் எடுத்துக் கொண்டிருக்கிறார்.

தமது அபிப்பிராயத்தை வசனத்தால் விளக்குவதோடு மட்டும் நின்று விடாமல், ஆங்காங்கு தெள்ளிய தமிழ்ப் பாடல்கள் இயற்றி அவற்றின் மூலமாகவும் விளக்கி யிருக்கிறார். மக்கள் யாவரும் வறுமை, பசி, நோய், வேலையில்லாத் திண்டாட்டம், கல் லாமை முதலிய கொடுமைகளிலிருந்து விடு பட்டு நல்வாழ்வு வாழ வேண்டும் என்னும் பெரிய நோக்கம் நிறைவேற வேண்டுமானால், உலகப் பொது ஆட்சி நிறுவப்பட வேண்டும் என்று வலியுறுத்துகிறார். ஆர்வமும், ஆராய்ச் சியும் உள்ள இந்நூலாசிரியரின் கருத்தை நன்கு அறிந்துகொள்ள விரும்புகிறவர்கள் இந்நூல் முழுதும் பொறுமையாகப் படித்துத் தெரிந்துகொள்ள வேண்டும்.

ஆக்கியோன் : ஜி. வி. வேதாத்திரி; கிடைக்குமிடம் : அன்பொளி நிலையம், கூடுவாஞ்சேரி; விலை : ரூ. 5.

## காமன் மகள்

ஸ்ரீ ஜயசங்கர பிரஸாத் என்பவர் ஹிந்தி மொழிக் கவிகளில் பிரபலமானவர்களிலே ஒருவர். வளரும் மொழிகளிலே ஒன்றான ஹிந்தியில் 'காமாயனி' என்ற தலைப்பில் ஸ்ரீ ஜயசங்கர பிரஸாத் எழுதிய காவியம் தலை சிறந்ததெனப் போற்றப்படுகிறது.

அடக்கம் என்பதையே அறியாத ஆண்மை, பெண்மையிடம் அடங்கி, மானிட குலத்தை வளர்த்து எப்படி ஒரு பொருளான பரம் பொருளில் ஒன்றிப் பரமானந்தத்தை அடைய முற்படுகிறது என்பதை இக்காவியம் வெகு அருமையாகச் சித்திரிக்கிறது.

இக்காவியத்திலே வரும் பாத்திரங்கள் எண்ணிக்கையில் அதிகம் இல்லை; எண்ணங்களில் சிறந்தவர்கள். மனு, சிரத்தை, இடா தேவி இம் மூன்று பாத்திரங்களையும் சுற்றி இயற்கை, இயல்பு, பண்பு ஆகியவற்றை அழகாகப் பின்னி மானிட இனத்தை மேன்மையுறச் செய்கிறது.

'சென்றிடுவீர் எட்டுத் திக்கும்
கலைச் செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு
சேர்ப்பீர்'

அமரகவி பாரதியின் அருள்வாக்கைப் பின்பற்றி ஆசிரியர் ஜமதக்னி அவர்கள் 'காமாயனி' என்னும் முதல் நூலுக்கு வழி நூலாக 'காமன் மகள்' என்னும் இக் காவியத்தைப் புனைந்துள்ளார்.

காவியத்தைக் காவியமாகவே தமிழாக்கம் செய்வது என்பது எளிதான காரியம் அல்ல. ஒரு மொழியிலிருந்து இன்னொரு மொழிக்கு உரை நடையாகக் கொண்டு வருவதே கஷ்டம். கவிதையாக உருவாக்குவதென்றால் கேட்க வேண்டுமா?

இத்தகைய அரும் பெருங் காரியத்தில் இறங்கிய ஜமதக்னி அவர்கள் எவ்வளவு தூரம் வெற்றி கண்டுள்ளார் என்பதற்கு ஒரு உதாரணம்:

"படவின்றி நீந்துகிறேன் மனமெனும் பாற்
கடலில்
விடமாட்டேன் கனவமுதம் விழிப்பதனை
விரும்புகிலேன்
மடமங்கை யுயிர்ப்படத்தில் வேட்கைகிறம்
வார்க்கிறதேன்?
படத்தெளிவில் வரிக்குள்ளே கலைக்குருவம்
பரிந்தளிப்பாய்"

'காமன் மகள்' என்னும் இச் சிறந்த நூலுக்குப் பாராட்டுரை வழங்கியுள்ள தமிழ்ப் பேராசிரியர் மு. வரதராசனார் கூறுகிறார்:

"பனி, பாறையாக உறைதலால் பயன் இல்லை. அது உருகி நீராய் ஓடினால்தான் வாழ்வை வளப்படுத்த முடியும். இது புறம். உள்ளம் புலன்வழிச் செல்லாது ஒடுங்கி விடுதலால் பயன் இல்லை. அது அன்பால் கசிந்து புலன் வழியே பாய்ந்து காதலாய் வளர்ந்து அருளால் செழித்தால்தான் உலகம் இனிதாய் இயங்கும். இது அகம். இந்நோக்கம் உடைய வாழ்வே 'காமன் மகள்' என்னும் காவியத் தலைவியின் நல்வாழ்வு."

ஸ்ரீ ஜமதக்னியின் இந்த முயற்சிக்குத் தமிழ் மக்களின் ஆதரவு அமோகமாகக் கிடைக்குமானால், கலைச் செல்வங்கள் யாவும் கொணர்ந்து இங்கு சேர்க்க அவரைப் போன்றோர்க்கு உற்சாகம் ஏற்படக் கூடும்.

பிரசுரம்: சாந்தி நிலையம், 9, செவியம்மன் கோவில் தெரு, சென்னை — 21, விலை ரூ. 3—00.

## சங்கமம்

"மொகை போன்று உள்ளடங்கிய அந்த 'மந்தா'வில்தான் சின்சின் வளர்ந்து, மலர்ந்து மடந்தையானள். தன் வயது பற்றி அவளுக்குச் சரியாகத் தெரியாது. அவளுடைய கிழத் தந்தையின் நினைவுப்படி பக்கத்துப் 'படகா' கிராமத்தில் கப்பக் கௌடருடைய மூத்த மகனுக்கு முதல் முறையாகப் பக கறக்கக் கற்றுக் கொடுத்த பயிற்சி விழாவின் பொழுதுதான் சின்சினின் தாய் அவளைப் பெற்றெடுத்தாளாம். கப்பக் கௌடரைக் கேட்டால், அவர் சற்று யோசனை செய்து விட்டு, "நான் பைக்காரா மலையில் புதிதாக உருளைக்கிழங்கு பயிரிட்ட ஆண்டிலேதான் மூத்த மகனுக்குப் 'பசுக் கறவைப் பயிற்சி விழா' கொண்டாடினது" என்பார். ஆக, சின்சின் பிறந்த நாளின் ரகசியம் பைக்கார மலையில், ஏதோ ஒரு உருளைக் கிழங்கு வயலுள் புதைந்து கிடக்கிறது!"

மலையாள மொழியிலே தலைசிறந்த ஆசிரியர் எனப் போற்றப்படும் ஸ்ரீ பொற்றெக்காட் அவர்களது கதைத் தொகுதியான 'சங்கம'த்தில் தான் இத்தகைய சொல்லாட்சியைக் காண்கிறோம்.

பாடகனுக்குப் பக்க வாத்தியம் அனுகுணமாக அமைந்தால்தானே, பாட்டு சோபிக்கிறது? தமிழாக்கம் செய்துள்ள ஸ்ரீ சௌரி அப்பணியைத் திறமையாகச் செய்திருக்கிறார்.

சமூகத்திலே பலதிறப்பட்ட மனிதர்களைப் பார்க்கிறோம். இலக்கியத்தில் அவர்களை அந்த உருவத்திலேயே படம் பிடித்துக் காட்டுவது என்பது அபூர்வமான கலை. 'ஒட்டகம்' என்னும் கதையைப் படிக்கும்பொழுது நம் மனக் கண்முன்னே ஒட்டகமாகவே ஒருவன் காட்சியளிக்கிறான்.

இத்தொகுதியிலே பதின்மூன்று கதைகள் இடம் பெற்றிருக்கின்றன. அவற்றில் சில மனத்திலும் பதிந்து இடம் பெறக் கூடியவை.

பிரசுரம்:— தேனருவிப் பதிப்பகம், சென்னை—17, விலை ரூ. 3.

## சைனிக் சமாசார் ஆண்டு மலர்—1958

இந்த ஆண்டில் குடியரசு தின விசேஷ இதழாக வெளியாகியுள்ள சைனிக் சமாசார் ஆண்டு மலர் கண்ணையும் கருத்தையும் கவரும் சிறந்த மலராக அமைந்திருக்கிறது. உயர்ந்த இராணுவ அதிகாரிகளால் எழுதப்பட்டுள்ள, சிப்பாய்களின் அறிவு வளர்ச்சிக்கான ஏராளமான கட்டுரைகளும், கதைகளும், நாவல்களும், படங்களும் இதில் வெளியாகியிருக்கின்றன. இவற்றைச் சிப்பாய்கள் மாத்திரமல்ல, பொதுமக்களும் படித்துப் பயன் அடையலாம் என்பதில் ஐயமில்லை. மேற்படி மலர் உயர்ந்த காகிதத்தில் சிறந்த முறையில் உருவாக்கப் பட்டிருக்கிறது.

கிடைக்குமிடம்: ஆசிரியர், "சைனிக் சமாசார்", 'பி' பிளாக், ரெய்ஸினு ரோட், புது தில்லி, விலை ரூ. 1.





# நீதி கிடைத்தது!

அன்று கோர்ட் கலகலத்துக் கொண்டிருந்தது. எள் போட்டால் கொள்ளைப் போல் வெடிக்கும். ஜனங்கள் ஒருவரை யொருவர் முந்திக் கொண்டு முன்னுக்கு வந்து கொண்டிருந்தனர். நீரோட்டம்போல் மேலும் மேலும் வரும் ஜனங்களைத் தடுக்க முடியவில்லை. அவர்கள் இரைச்சலையும் கட்டுப்படுத்த முடியாமல் நீதிஸ்தல சேவகர்கள் திணறினார்கள்.

நீதிபதி உரிய வேளைக்கு உள்ளே நுழைந்தார். ஜனங்களிடையே சலசலப்பு அடங்கத் தொடங்கியது. நீதிபதி அவர் ஆசனத்தில் அமர்ந்ததும் மந்திரத்தால் கட்டுண்டவர்கள் போல் ஜனங்கள் அமைதியாக இருந்தனர். கைதிகள் கூண்டில் இரண்டு கைதிகள் கட்டுண்டு கிடந்தனர். சாட்சிகள் அமரும் இடத்தில் ஒரு கிழவி அழுது அழுது வறண்டு போன கண்களால் நீதிபதியையும், வக்கீலையும் பார்த்துப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தாள். வேடிக்கை பார்க்க வந்த அத்தனை ஜனங்களும் அக்கிழவியைப் பரிதாபமாய்ப் பார்த்துக் கொண்டிருந்தனர்.

உருவத்தில் ஒரேமாதிரி யிருந்தாலும் வயதில் வித்தியாசப்பட்ட அந்த இரு கைதிகளையும் ஆச்சரியமாய்ப் பார்த்துக் கொண்டிருந்தனர் ஒரு சிலர்.

அரசாங்க வக்கீல் அமிருதானந்தர் எழுந்து, "யுவர் ஆனர்! குற்றவாளி வேலாயுதம் தம் மனைவியைத் தாம் கொன்றதாக ஒப்புக்கொள்கிறார். காரணம் தம் ரத்தம் கொதிப்பேறித் தம்மை வெறியனாக்கி விட்டதென்று சொல்கிறார். அவர் ரத்தம் கொதித்து அவரை வெறியனாக்கும்படியான நிகழ்ச்சி ஏதோ ஒன்று நடந்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. குற்றவாளி நேர்மையுள்ளவராகத் தோன்றிய பொழுதிலும், கொலைக்குற்றம் செய்தவர் அவரே!" என்று சொல்லிவிட்டு அமர்ந்தார்.

அதைக் கேட்ட கிழவி தன்னை மீறி "ஐயோ!" என்று அலறி விட்டாள்.

கைதியின் தரப்பு வக்கீல் எழுந்து கம்பீரமாய் நாற்புறமும் பார்த்து, தம் கழுத்துப் பட்டையை இறுகப் பிடித்துக் கொண்டு, "கோர்ட்டாரவர்களே! கொலையாளி வெகு பொருத்தமாய்க் கொலை செய்ததாகச் சொல்லும்போதே இதில் ஏதோ மர்மம் இருப்பதாகத் தெரியவில்லையா? வேலாயுதமும் தேவானையும் வெகு அன்பாய் ஒருவர்மேல் ஒருவர் உயிரையே வைத்திருந்தனர் என்று அக்கம்பக்கத்தார் சொல்வதிலிருந்து ஊர்ஜிதமாகிறது. குற்றவாளியின் அண்ணன் தண்டாயுதம் சொல்வதை நன்கு கவனிக்க வேண்டுகிறேன்" என்று தண்டாயுதத்தைக் கூண்டில் ஏற்றி வாக்குமூலத்தைக் கொடுக்கும்படி சொன்னார்.

கிழவியின் வாய் "ஐயோ மகனே! அப்பனை இழந்த குழந்தைகளை இம்மாதிரி பார்க்கவா வளர்த்தேன்? சுமந்த

எம். எஸ். கமலா



வயிறும், வளர்த்த கையும் பாழாய்ப் போக!'' என்று முணுமுணுத்தாள்.

தண்டாயுதம் சொல்லத் தொடங்கினான்: ''கோர்ட்டாரவர்களே! தேவானையைக் கொன்றது நான்தான். அன்று மழை பிசு பிசுவென்று தூறிக் கொண்டிருந்தது. ஊதல் காற்று 'விர், விர்' என்று அடித்தது. தேவானை கதவைச் சாத்திவிட்டுப் படுத்திருந்தாள். தம்பி தோட்டத்தில் காவல் படுத்திருந்தான். கண் சரியாகத் தெரியாத வயதான என் தாய் ஒருபுறம் உறங்கிக் கொண்டிருந்தாள். நான் வயல்வெளிகளிலிருந்து



வந்து கொண்டிருந்தேன். தேவானை வயிற்று வலியால் துடித்துக் கொண்டிருந்தாள்.

அவளை மெல்ல எடுத்து என்மேல் சாத்திக் கொண்டு சுக்குத்தண்ணீரை அவள் வாயில் ஊற்றினேன். அச்சமயம் என் உள்ளம் கிறுகிறுத்தது. மெய்சிலிர்த்தது. என்னையறியாத இன்பவேதனை ஒன்று என் உடம்பைப் பிழிந்தெடுத்தது.

ஆண்மையின் அசட்டுத்தனம்......உணர்ச்சியின் வெறி......என்னை மயக்கியது. அவள் தோள்களைப் பிடித்து அழுத்தினேன். அவள் வேங்கையைப் போல் சீறி எழுந்து என்னை எட்டி உதைத்தாள். ஆண்மை...! பெண்மை அதற்கு அடங்கியிருக்கும் என்கிறார்களே! ஒரு பெண்பிள்ளை எட்டி உதைப்பதா? என் ஆண்மைக்கு வீழ்ச்சி ஏற்பட்ட அகங்காரத்தில், இடையில் செருகியிருந்த கத்தியை எடுத்து என் மானம் போகாமல் தன்மானத்துடன் வாழவேண்டி அவள் மார்பில் பாய்ச்சினேன். என் மானம் காப்பாற்றப்பட்ட தென்ற களிப்பில் திரும்பிப் பாராமல் தோட்டத்துக்கு ஓடினேன். குளிர்ந்த காற்று மேலே படவே அகங்காரக் கனல் அவிந்து, நான் செய்த தீச்செயல் என்முன் நின்று கொக்கரித்தது. என் தலை சுழன்றது. கைகால்கள் உதறின. கீழே சாய்ந்து விட்டேன். கண் விழித்தபோது போலீஸ் ஸ்டேஷனில் இருந்தேன். சிறிது நேரம் எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. என்னைச் சுற்றிலும்போலீஸ்காரர்கள் நின்று கொண்டிருந்தனர். தேவானையைக் கொலை செய்ததற்காக என் தம்பியைச் சிறை செய்திருந்ததைப் பார்த்தேன்.

'ஐயா! கொலைகாரன் அவன் அல்ல; அநியாயமாக இளம் வாலிபனைத் தண்டனைக் குள்ளாக்காதீர்கள். கொலை செய்த என்னைத் தண்டித்து, என் தாயைப் பார்த்துக் கொள்ள அவனை விடுவியுங்கள்!' என்று கதறினேன்.''

வேலாயுதம் தன் விலங்கு பூட்டிய கைகளை மரவிளிம்பில் படாரென்று அடித்து, ''அண்ணாச்சி சொல்வது முழுவதும் பொய். நான்தான் சந்தேகப் பேய்க்கு அடிமையாகி, என் தேவானையை முன்பின் யோசியாமல் கொலை செய்து, கத்தியைத் தோட்டக் கிணற்றருகில் வீசி எறிந்தேன். அந்த உத்தமியைக் கொன்று உயிருடன் எப்படி வாழ்வேன்? எனக்காக ''எல்லாவற்றையும் துறந்த என் அண்ணாவுக்குத் தண்டனை வேறு? கொலை செய்தவன் நான்தான். அதற்கு ஏற்ற தண்டனையை ஏற்கிறேன்'' என்று தைரியமாய்க் கலங்காமல் சொன்னான்.

நீதிபதி நீலகண்டன் வேலாயுதத்தின் முகத்தை உற்றுப் பார்த்தார். தெளிந்த நீரோடை போலிருந்தது. தண்டாயுதத்தைப் பார்த்தார். பளிங்கு போலிருந்தது. அவசரப்பட்டுத் தீர்ப்புக் கூற மனம் ஒப்பவில்லை. மறு நாள் தீர்ப்பு சொல்லப் போவதாகச் சொல்லித் தம் இருக்கையை விட்டு எழுந்தார். கோர்ட்டில் கூடியிருந்த கூட்டம் கலைந்தது.

நீதிபதி நீலகண்டன் நீதி ஸ்தலத்திலிருந்து வீட்டுக்கு வந்தபோது 'அவர்' மாப்பிள்ளை வரப் போவதாய்த் தந்தி வந்திருந்தது. அவர் மகள், காலையில் அவர்கள் வீட்டுக்கு விருந்தினராய் வந்திருந்த தன் அத்தானுடன் அவனுக்கு ஊரைச் சுற்றிக்காட்டுவதற்காகச் சென்றிருந்தாள். அவள் இன்னும் வீட்டுக்கு வராததால் நீதிபதியே மாப்பிள்ளைய



அழைத்து வருவதற்கு ரயில்வே ஸ்டேஷனுக்குச் சென்றார்.

மாப்பிள்ளை வரும் ரயிலும் வந்தது. மகிழ்ச்சி பொங்கும் வதனத்தோடு ரயிலை விட்டு இறங்கிய மாப்பிள்ளையின் முகம் மாமனார் மட்டும் நிற்பதைக் கண்டதும் சிறுத்து விட்டது. ''பாமா சௌக்கியமாக இருக்கிறாள் அல்லவா?'' என்று கேட்டான்.

அவர் தம்முள் 'இக்காலத்துப் பிள்ளைகளுக்கு இது ஓர் பைத்தியம்'' என்று சொல்லிச் சிரித்துக் கொண்டார்.

மாமனாரும் மாப்பிள்ளையும் வீட்டுக்கு வந்தனர். மாப்பிள்ளையின் கண்கள் நாற்புறமும் பாமாவைத் தேடின. அச்சமயம் பாமா, ''சித்தமெப்படியோ?'' என்று வெகு இனிமையாய்ப் பாடிக்கொண்டே அத்தானோடு சேர்ந்து வந்து கொண்டிருந்தாள். அதைப் பார்த்த மாப்பிள்ளையின் கண்களில் பொறாமை பொங்கியது.

அவனைப் பார்த்து ஆனந்த பரவசமுற்ற பாமா, முகத்தில் முறுவல் பூக்க, ''முன் கூட்டியே நீங்கள் வருவதைத் தெரிவிக்கக் கூடாதா? எனக்கு என்னவெல்லாம்




வாங்கி வந்திருக்கிறீர்கள்?'' என்று கேள்விகளுக்கு மேல் கேள்விகளை அடுக்கியதோடு மட்டும் நிறுத்திக் கொள்ளாமல், அவனிடமிருந்து சாவிக் கொத்தை வாங்கிப் பெட்டிகளைத் திறந்தாள்; அதிலிருந்து பலவிசித்திரப் பொருள்களை எடுத்தாள். அனைத்தையும் வாரி எடுத்துக் கொண்டு அத்தானிடம் போய், அவனுக்கு எல்லாவற்றையும் காட்டினாள். அவன் மகிழ்ச்சியுடன் அவைகளைப் பார்த்தான். ஆனால் மாப்பிள்ளையின் முகத்திலோ...?. ஏதோ சொல்ல முடியாத வெறுப்பு நிழல் ஓடியது. நீதிபதி அதைக் கவனிக்கத் தவறவில்லை.

இரவு நீதிபதியின் அறைக்குப் பக்கத்து அறையில் பாமாவும் அவள் கணவனும் கசமுச வென்று பேசத் தொடங்கியவர்கள் எலியும் பூனையுமாகச் சீறலானார்கள். நீதிபதிக்குத் தூக்கம் வரவில்லை. அன்றைய கோர்ட் நிகழ்ச்சி

யிலே குற்றவாளிகள் அளித்த வாக்குமூலம் அவர் காதில் எதிரொலித்தது.

மறுநாள் நல்லதனமாய் விடியவேண்டுமே, தன் மைந்தர்கள் தன்னிடம் வந்து சேர வேண்டுமே என்று வள்ளியம்மாள் வேண்டாத தெய்வங்களையெல்லாம் வேண்டினாள்.

தண்டாயுதம் ஐந்து வயதுச் சிறுவன். வேலாயுதம் ஒரு வருடக் குழந்தையாயிருக்கும்போது பெரிய பண்ணை வீட்டில் கிணறு வெட்டச் சென்ற சண்முகம் கால் சறுக்கி விழுந்து காலனடி சேர்ந்தான். வள்ளியம்மாள் வேலாயுதத்தையும், தண்டாயுதத்தையும் கட்டிக்கொண்டு கதறினாள்.

பெரிய பண்ணை பாலசுந்தர முதலியார் தன் வீட்டில் கிணறு வெட்ட வந்து, காலமான சண்முகத்தின் உயிருக்கு விலையாக இரண்டு ஏக்கரா புறம்போக்கு தரிசு நிலத்தை அவனுக்கு அளித்தார். அதில் குடிசை போட்டுக் கொண்டு, காய்கறித் தோட்டம் போட்டு, விளையும் காய்கறிகளை விற்றுத் தன் குழந்தைகளைக் காப்பாற்றி வந்தாள்.

ஆண்டுகள் ஓடின. அண்ணனும் தம்பியும் பெரியவர்களானார்கள்; சகோதர பாசமும் வளர்ந்து கொண்டே வந்தது. தண்டாயுதத்துக்கு எத்தனையோ பேர்கள் பெண் கொடுக்க முன் வந்தனர். தன் குழந்தைப் பருவத்தில் வேலாயுதத்தின்மேல் வைத்த தாய சகோதரப் பாசமும், உழைப்பின்மேல் இருந்த சிரத்தையும், வறுமையின் தன்மையும் தண்டாயுதத்தை மணமற்று இருக்கவே தூண்டின.

தாய் எத்தனையோ சொன்னாள். தம்பியின் சுகத்தையே தன் சுகமாகப் பாவிக்கும் தண்டாயுதம் அதைக் கேட்காமல் தனக்குக் கொடுப்பதாய்ச் சொன்ன தேவானையைத் தன் தம்பிக்கு மணம் முடித்து வைத்தான்.

விடிந்தது. ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாய் எண்ணியபடி நீதிஸ்தலத்தினுள் நுழைந்தனர். கைதிக் கூண்டில் நிற்கும் சகோதரர்களைப் பார்த்தபடியே சிக்கலில் ஆழ்ந்து சிந்தித்துக் கொண்டிருந்த நீதிபதிக்கு வழக்கின் விவரம் பளிச்சென்று மின்னியது.

தம் மகள், மருமகன், சகோதரியின் மகன் மூவரின் முகங்களும் தோன்றி மறைந்தன. முதல் நாள் மாலை மருமகன் வந்தது முதல் இரவு மகளுக்கும் மருமகனுக்கும் ஏற்பட்ட புயல் ஒவ்வொன்றும் நிழல் படமாக நினைவுத் திரையில் தோன்றியது. வலது கையால் மார்பைத் தடவிக் கொண்டு, இடது கையால் கன்னத்தைத் தேய்த்துக் கொண்டார்.

காலையில் சிவந்த கண்கள் வீங்கி, கன்னங்கள் கன்னிப் போயிருக்க, கலைந்த கூந்தலையும் கோதிக் கொள்ளாமல் காப்பிகூட அருந்தாமல் தம் மகள் விசும்பிக் கொண்டிருக்க, மருமகன் எவரிடமும் சொல்லாமல் காலை ரயிலில் புறப்பட்டுச் சென்றது தோன்றியது. சிக்கலிலிருந்து வெளிவந்தார்.

நீதிபதி குரலைக் கனைத்துக் கொண்டார். ''வேலாயுதம் நிரபராதி. அவனை விடுவித்து விடுங்கள். தண்டாயுதம் கொலை செய்ததற்கு ருஜுவே இல்லாததால் அவனும் குற்றவாளியல்ல. குற்றவாளி வேலாயுதம் தாம் குற்றம் செய்ததாக ஒப்புக் கொள்கிறார். அவர் கொலை செய்ததை யாரும் பார்க்கவில்லை. அவர் சகோதரரோ தாம்தான் குற்றவாளி என்கிறார். விசாரித்தவரையில் தண்டாயுதமும், வேலாயுதமும் யாருடைய சோலிக்கும் போகாதவர்களென்றும் வெகு நல்லவர்களென்றும், அன்னியோன்னியமாயிருப்பவர்களென்றும் தெரிய வருகிறது. எனவே சந்தர்ப்ப சாட்சியத்தை வைத்துக் கொண்டு குற்றவாளியைத் தண்டிப்பதே மிகவும் பாபம். அதிலும் கொலை செய்ததை எவரும் பார்க்காததாலும், சரியான சாட்சி யில்லாததாலும் இவர்களை விடுதலை செய்கிறேன்'' என்று சொல்லி எழுந்தார்.

கோர்ட்டில் திரண்டிருந்த ஜனங்கள் கைகொட்டி ஆரவாரம் செய்தனர். அந்த ஆனந்தச் செய்தி வள்ளியம்மையின் உள்ளத்தைக் குளிர வைத்தது.

வேலாயுதம் அண்ணனைக் கட்டிக்கொண்டு, ''அண்ணா! உன் உயர்ந்த குணத்தை யறியாமல் உள்ளத்தில் மாசு கற்பித்துக் கொண்டேன்! உயிருள்ளளவும் உருகிஉருகிக் கரையும் படி செய்து விட்டாரே நீதிபதி! நெஞ்சில் விஷத்தைத் தேக்கி அது வேலையும் செய்யாமல் வெளியும் வராமல் துடிக்கும் நிலை ஏற்பட்டு விட்டதே! கொலைக்குக் கொலையல்லவோ நல்விருந்து. மனச்சாந்தியை யளிக்கும் மரணத்தையளிக்காமல் இம்மாதிரி...'' என்று கதறினான்.

''வேலாயுதம்! தேவானை உத்தமி. அவசரப்பட்டு நீ அவளைக் கொன்றாயென்றால் நீதிபதியும் அப்படிச் செய்வாரா? கொலை செய்யாமல் செய்திருக்கிறார். நீ செய்த தீங்குக்கு அவளை நினைத்து நினைத்துக் கண்ணீர் விடு. என் கடமை உன்னை விடுவித்தாகி விட்டது. வயிற்று வலியால் துடித்தவளுக்கு......கூடப் பிறந்த சகோதரியாகப் பாவித்தவளுக்கு சகோதர வாஞ்சையோடும், வயதான அன்னைக்குச் சிரமமளிக்கக் கூடாதென்ற மனப்பான்மையோடும், உட்காரச் சக்தியற்றவளை ஆபத்துக்குத் தோஷமில்லை என்ற நீதியோடும் மேலே சாய்த்துக் கொண்டு கஷாயம் புகட்டியதற்கு அவள் கத்தியால் குத்தப்பட்டுக் காலன் வீட்டுக்கு ஏகிவிட்டாள். எனக்கு இனி இல்லத்தில் வேலையில்லை, தம்பி! பரந்த உலகம் அழைக்கிறது. பரமனைப்பாடிப் பாடல் பெற்ற பதிகங்களைத் தரிசித்துப் பாழாய்ப்போன மானிடப் பிறவிக்கு மங்களம் பாடுகிறேன்!'' என்று தம்பியிடம் கூறிவிட்டு அவன் பதிலையும் கேட்காமல் அன்னையின் காலைத் தொட்டு வணங்கினான்.

''அம்மா! ஆண்டவன் அருள் இருந்தால் மறுமுறை பார்க்கலாம். தம்பியைப் பார்த்துக் கொள். வாழ்வின் சுவையை அறிந்தவன். அவன் கை விலங்கைக் கழற்றியாகி விட்டது. கால் விலங்கைச் சீக்கிரம் பூட்டு'' என்று கூறிவிட்டு நடந்தான்.

''தண்டாயுதம்! நான் இருக்கும் வரையிலாவது...''

''தேவானையுடன் இருந்த இடமே மறைந்து விட்டதம்மா! முடிவில்லாத் தண்டனை அனுபவிக்க அனைவரும் செல்ல வேண்டியவர்கள் தாம். வருகிறேன்'' என்று சொல்லிய தண்டாயுதம் அப்புறம் அங்கே நிற்கவில்லை.

# பூர்த்தியாகும் பெரு முயற்சி

டாடா ஸ்டீலின் விரிவான இரு மில்லியன் டன் உற்பத்தித் திட்டம் இப்பொழுது பூர்த்தியாகும் நிலை அடைந்திருக்கிறது. 1958 ம் ஆண்டு நடுவில் முடிவடைய வேண்டிய இம் முயற்சி காலத்தோடு போட்டிபோடும் ஓர் நிகழ்ச்சி ஆகும்.

இன்று, ஜாம்ஷெட்பூரில் எங்கு பார்த்தாலும் தொழிலில் புதியதோர் அவசரத்தைக் காணலாம்...குறிப்பிட்ட காலத்துக்குள் இவ் விரிவான திட்டத்தைப் பூர்த்திசெய்ய வென்றே இடைவிடாமல் இரவு பகலாக தொழில் இயங்கி வருகிறது.

இரும்புத் தாதுப்பொருளையும் நிலக்கரியையும் சேகரிப்பதிலிருந்து எஃகு தயாரிக்கப்படும் வரை, டாடா ஸ்டீலின் விரிவான முயற்சி, வருட உற்பத்தியை இருமடங்காக்கி இரு மில்லியன் டன்னுக உற்பத்தி செய்யப்போகிறது. இது, நம் நாட்டின் இலட்சிய உற்பத்தி அளவிலே மூன்றில் ஒரு பங்காகும்.




தி டாடா அயர்ன் அண்டு ஸ்டீல் கம்பெனி லிமிடெட்

TN 1763



# நரஸூ

காபி

அருந்தி அதன்

பிரத்யேகமான

ருசியை

அனுபவியுங்கள்

நரஸூஸ் மான்யுபாக்சரிங்

கோ. பிரைவேட் லிட்.,

சேலம் & சென்னை



# விஷ வெட்டுக் காயங்கள்



## ஜாம்-பெக்
## உபயோகித்து உடனேயே
## குணமடையுங்கள்

கால் புண், கட்டிச் சிரங்கு, கொப்பளங்கள், தீப்புண் மற்றும் விஷப் புண்களிலிருந்து ஏழே நாட்களில் குணம் பெறுங்கள். வெட்டுக்கள், சிராய்ப்புகள், மற்றும் பூச்சிக் கடிகளை மூன்றே நாட்களில் போக்குங்கள். எக்ஸிமா மற்றும் பொடுகு, சொரிகளை உடனேயே அகற்றுங்கள் . . . எவ்வித சரும உபாதைகளுக்கும் ஜாம்-பெக் மூலம் நிவாரணம் பெறலாம் மிருகக் கொழுப்பு மற்றும் எண்ணெய்கள் சேராதது என்பதற்கு உத்திரவாதம்.




FZY-50 TAM

**Zam-Buk**

**ஜாம்-பெக்**
**மூலிகைக் களிம்பு**

எண்ணெய்ப் பசையற்ற மெடிஸினல் க்ரீமான ஜாம்-பெக் உபயோகியுங்கள் . . . சரும நோய்க்கு நிவாரணமும், அழகூட்டும் தன்மையும் வாய்ந்த ஒரே களிம்பு!

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்..

ஸி இ. புல்போர்ட் (இந்தியா) பிரைவேட் லிட்..

சோல் ஏஜெண்டுகள்:

தாதா & கம்பெனி

86, நைனியப்ப நாயக் தெரு, சென்னை - 5




இருபத்தோராம் அத்தியாயம்

## முருகேசன் செய்த உதவி

இரவு முழுவதும் கந்தசாமிக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. தூக்கம் எப்படி வரும்? மனம் 'திக்திக்'கென்று அடித்துக் கொண்டது. முனியம்மாளை நினைக்கையில் வயிறு பகீரென்றது. அந்தத் தரித்திரம் பிடித்த பெண் வீட்டுக்கு வந்த நாள் முதல் அவனுடைய துரதிர்ஷ்டங்கள் அதிகரித்து விட்டன. போயும் போயும் அவளைச் சினிமாவுக்கு அழைத்துப் போனது முட்டாள் தனம்!... உம், அதை நினைத்து வருந்தி என்ன பயன்? அவள் என்ன ஆகியிருப்பாள்? வழியை விசாரித்துக் கொண்டு வீட்டுக்குப்போயிருப்பாளா, அல்லது யார் கையிலாவது சிக்கிக் கொண்டிருப்பாளா? பொல்லாத பட்டணம் ஆயிற்றே இது.



காலை சுமார் ஏழரை மணிக்கெல்லாம் ஸ்டேஷன் முன்புறத்து ஹால் கலகலப்படையத் தொடங்கியது. இரவு 'டியூடி'க்காரர்களை விடுவிக்கப் பகல் 'டியூடி' ஆசாமிகள் ஒவ்வொருவராக வந்து கொண்டிருந்தனர்.

''ஏய், த்ரீ நாட் ஒன்! நாலாவது நம்பர் அறையிலே இருக்கிற களுதையை இப்படி இளுத்துக்கிட்டு வா!'' என்று தமது பரிபாஷையில் உத்தர விட்டார் ஹெட்கான்ஸ்டபிள்.



இந்தக் குரலைக் கந்தசாமி இதற்கு முன் எங்கே கேட்டிருக்கிறான்? தாழ்வாரத்தில் பூட்ஸ் சத்தம் கேட்டது. கந்தசாமி எழுந்து நின்றான்.

ஒரு போலீஸ் வீரன் அவனது அறையின் கம்பிக் கதவைத் திறந்து அவனை இழுத்துக்கொண்டு போய் ரைட்டரின் முன்பாக நிறுத்தினான். கந்தசாமியின் கண்கள் ஆச்சரியத்தினால் மலர்ந்தன. அவனது மனத்தில் சந்தோஷம் கரை புரண்டு ஓடியது.

''ராமசாமி அண்ணே?...''

''யாரு?......கந்தசாமி?... நீயா?...நீ எப்படி இங்கே வந்து மாட்டிக்கிட்டே?''

கந்தசாமி அழமாட்டாக் குறையாக முன்னிரவு நடந்த சம்பவங்களை அவனிடம் விவரமாகக் கூறி எப்படியாவது தான் லாக்கப்பில் அடைபட்டிருந்த விஷயம் வெளிக்கு வராமல் தனது மானத்தைக் காப்பாற்றும்படி கெஞ்சினான். ராமசாமிக்கு அவனது கதையைக் கேட்க ஒருபுறம் இரக்கமாக இருந்த போதிலும் மற்றொருபுறம் சிரிப்பும் வந்தது.

''கந்தசாமி! இது என்ன முட்டாள்தனம்? நீயோ டியூடியிலேயும் இல்லே. உனது பேட்டையிலேயும் இல்லே. அப்படியிருக்க ஏன் இந்த மாதிரி முட்டாள் தனம் பண்ணணும்?...உம்!... சேச்சேச்சே! நீ கிட்ட வருகிற போதே நாற்றமாயிருக்கு.''

''முட்டாள்தனம்தான், அண்ணே! போதாத வேளை!.........எனக்கு இந்த உத்தியோகத்து மேலேயே வெறுத்துப் போச்சு! நாளைக்கே ராஜிநாமா செய்து விட நிச்சயம் பண்ணிட்டேனுங்க!''

''சரி, சரி! பிறகு பேசிக் கொள்ளலாம். இப்போது இன்ஸ்பெக்டர் வர நேரமாச்சு! அதற்கு முந்தி போய்ச் சேர்!'' என்றான் ராமசாமி.

கந்தசாமி தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு வெளியே வந்தான். ராமசாமியும் பரிவோடு சிறிது தூரம் அவன் கூடவே நடந்து வந்தான்.



''அண்ணே! தயவுபண்ணி இந்த வெட்கக் கேட்டை வெளியே யாரிடமும் சொல்லிப் பிடாதீங்க!''

''அதெல்லாம் பயப்படாதே, கந்தசாமி! இனிமேலாவது ஜாக்கிரதையாக நடத்துக்கோ! அநாவசியமாக வேலையை விட வேண்டாம். கொஞ்சம் உஷாராயிருந்து பல்லைக் கடித்துக் கொண்டு ஒரு வருஷம் சமாளிச்சுட்டா அப்புறம் நீயே நாலு பேருக்கு வாத்தியாராயிடுவே'' என்று புத்திமதி சொல்லி யனுப்பினார் அவர்.

* * *

அவன் வீடு வந்து சேர்ந்த போது மணி சுமார் ஒன்பது இருக்கும். வெய்யில் நன்றாக ஏறிவிட்டது. முதலில் குளித்து விட்டுத்தான் முனியம்மாளைத் தேடுவதற்குப் போக வேண்டும். முத்தம்மாள் கேட்டால் ''இரவு வெகு நேரமாகி விட்டது. முனியம்மாளை வழியில் முருகேசன் வீட்டில் விட்டிருக்கிறேன். முருகேசனின் தாயார் அவளைச் சாயந்திரம் தான் அனுப்புவேன் என்றான்!'' என்று ஏதாவது புளுக வேண்டும் என்றதீர்மானத்துடன் உள்ளே நுழைந்தான் அவன்.



முற்றத்திலே அவன் கண்ட காட்சி அவனைத் திகைக்க வைத்தது. அவனால் தனது கண்களையே நம்ப முடியவில்லை. அங்கு முனியம்மாள் தலை குனிந்த வண்ணம் துணிகளுக்குச் சோப்புப் போட்டுக் கொண்டிருந்தாள். கந்தசாமியைக் கண்டதும் ஒரு முறை அவனை நிமிர்ந்து பார்த்துப் புன்னகை செய்து விட்டு மீண்டும் தலையைக் குனிந்து கொண்டாள்.

கந்தசாமி நேராகக் கிணற்றடிக்குச் சென்று தனது ஆடைகளைக் கழற்றி நனைத்துப் போட்டு விட்டு ஸ்நானம் செய்தான். அவனுக்கு ஒரே அதிர்ச்சியாக இருந்தது. முனியம்மாள் எப்படி வந்து சேர்ந்தாள்? முத்தம்மாளிடம் என்னவெல்லாம் சொல்லிவிட்டாளோ? மேற்கொண்டு என்ன ரகளை நடக்கப் போகிறதோ? என்றெல்லாம் சிந்தித்துக் கொண்டே சட்டையை மாட்டிக் கொண்டான். ஆனால் முத்தம்மாளோ, முனியம்மாளோ ஒன்றுமே நடவாதது போல் சாதாரணமாக இருந்ததைக் காண அவனுக்கு ஆச்சரியமா யிருந்தது.

''முனியம்மா, அத்தானுக்குப் பலகாரம் கொண்டு போய்க் கொடு'' என்றாள் அவனது அருமை அக்கா.

அவர்களாக ஒன்றும் கேட்காத வரையில் அனாவசியமாக விஷயங்களைக் கிளறிக் கேட்டு வீண் வம்பை வரவழைத்துக் கொள்ள அவன் விரும்பவில்லை. 'சரி, தொலைகிறது. எப்படியோ வந்து சேர்ந்து விட்டாள்! எப்படி என்பது மெதுவாகத் தெரியட்டும். இப்போது பேசாமல் வெளியே போய் விட வேண்டும்' என்று தீர்மானித்துக் கொண்டே முனியம்மாள் கொண்டு வந்த பலகாரத்தைத் தின்றுவிட்டு அவசரம் அவசரமாக வெளியே கிளம்பினான்.

தெருக்கோடியில் முருகேசன் நின்று கொண்டிருந்தான்.

''வாப்பா, கந்தசாமி! சரியான ஆண்பிள்ளையப்பா நீ!''

கந்தசாமி ஒரு விஷயமும் புரியாமல் திகைத்து நின்றான்.

''ராத்திரி அந்தப் பெண்ணை அப்படியா தன்னந்தனியாக விட்டுவிட்டு ஓடுவாங்க?'' என்றான் முருகேசன். கந்தசாமிக்கு ஒரே குழப்பம். ஒன்று போனால் ஒன்று; ஆச்சரியத்துக்கு மேல் ஆச்சரியமாக அல்லவா இருக்கிறது!

''உனக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்டான் கந்தசாமி. முருகேசன் கூறிய விவரங்கள் அவனது வியப்பை அதிகரிக்கச் செய்தன.

புதிய இன்ஸ்பெக்டர் பூவராகத்தின் மைத்துனர் வீட்டில் அன்று ஏதோ விசேஷம். அவர் முருகேசனையும் வேலப்பனையும் அங்கு உதவிக்கு அனுப்பியிருந்தார். வேலப்பன் இரவு பத்து மணிக்கெல்லாம் நழுவி விட்டான். முருகேசன் மாத்திரம் கடைசி வரையில் இருந்து தன்னுடைய சாப்பாட்டையும் முடித்துக் கொண்டு புறப்பட்டான். அப்போது இரவு மணி சுமார் பன்னிரண்டரை இருக்கும்.



வழியில் ஒரு வெற்றிலைப் பாக்குக் கடைக் காரனிடம் பேசிக் கொண்டிருந்து விட்டு மெதுவாக நடந்து பெரிய ரஸ்தாவுக்கு வந்த போது மாதாகோவில் கடிகாரத்தில் மணி ஒன்று அடித்தது. குறுக்குச் சந்தில் வீட்டை நோக்கி நடந்தான். திடீரென்று யாரோ தேம்பித் தேம்பி அழுவது போலிருந்தது. அவன் திடுக்கிட்டு நின்றான். சந்து முனையில் ஒரு பெண் நின்று கொண்டு சுற்றும் முற்றும் பார்த்து, ''அத்தான்! அத்தான்!'' என்று பரிதாபமாகக் கூப்பிட்டுக் கொண்டிருந்ததைக் கேட்டு அவனது மனம் கரைந்து விட்டது. அருகில் சென்று பார்த்தால் முனியம்மாள் நின்றுகொண்டிருப்பது தெரிந்தது.



''கடவுள்தான் என்னை அந்த நேரத்தில் அங்கே கொண்டுபோய்ச் சேர்த்



# உங்கள் வீட்டுக்கு வேண்டியது விம்
# அப்பமுக்கின்றி விரைவில் சுத்தம் செய்யும்!



உங்களுடைய சமையல் பாத்திரங்களை மினுக்கச் செய்தால் மட்டும் போதாது — சுகாதார ரீதியாக அவை சுத்தமாக வேண்டும்! விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட, துலக்கும் பவுடரான விம் உபயோகியுங்கள்; அழுக்கு, பசை யாவையும் நொடிப் பொழுதில் விரட்டிவிடலாம்! ஒரு ஈரத்துணியில் விம் தூவி, தேய்த்தலம்பி, உலரவிட வேண்டியது தான் தாமதம் . . . எல்லாம் ஒளி மயமாகக் காண்பீர்கள்! எவர்ஸில்வர், சாதாரண பீங்கான், கண்ணாடி சாமான்கள், வாஷ் பேஸின்கள், பாத்திரங்களைக் கழுவும் பேஸின்கள், தரைகள், ஓடுகள் ஆகியவற்றைத் துலக்குவதற்கும் விம் பயன்படும். அது சிக்கனமானது என்பதும் உங்களுக்குத் தெரியவரும் — சிறிதளவு விம் உபயோகித்தாலும் அதிகமான அளவு பரிசுத்தம் காணலாம்.






**விம் — விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட, துலக்கும் பவுடர்**

V 90A-50 TM

பம்பாயிலுள்ள ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட் கம்பெனியின் தயாரிப்பு

தார். நான்மட்டும் போகலேன்னு அதன் கதி என்ன ஆகியிருக்குமோ! சேச்சே! நீ பண்ணின கூத்தைச் சொல்லி அது அழுதபோது என் மனசு கெட்டே போச்சு. தங்கமான பொண்ணு! அதைச் சந்தியிலே தவிக்க விட்டுட்டு அப்படி யாரைத் துரத்திக்கிட்டுப் போனே!'' என்று முடித்தான் முருகேசன்.

''அது ஒரு மதுவிலக்கு கேஸப்பா!''

''நல்ல கேசு! வீட்டிலே பெண் பிள்ளைகளை அழைச்சுப் போகிறப்பவா இந்த எழவை யெல்லாம் தலையிலே போட்டுக் கொள்ளுவாங்க! என்ன ஆச்சு உன் கேஸ்! அதையாவது பிடிச்சியா அல்லது...''

''ஹூம்! பிடிக்காமல் விடுவேனு! களுதையைப் பிடித்துச் சாயபுரம் ஸ்டேஷனிலே ஒப்புக் குடுத்துட்டு வந்தேன்... ஆமா, இந்த முனியம்மா என்ன பச்சைக் குழந்தையா! ஆளைப் பிடிச்சுட்டு வர்றேன், ஒரு அஞ்சு நிமிஷம் நில்லுடீன்னு சொன்னு நிற்க வேண்டியதுதானே?...அதுக்குப் போய் அழுவானேன். கேடு...''

''நல்ல கதையா இருக்குதே!...பாதி ராத்திரியிலே தன்னந்தனியா ஒரு பெண் பிள்ளையை நடுச்சந்தியிலே...''

''அட நீ ஒண்ணு! சும்மா நடுச்சந்தி, நடுச் சந்திங்கறயே! மேல் நாட்டிலே போய்ப் பாரு. ஒவ்வொரு பெண்பிள்ளையும் எவ்வளவு தைரியசாலியாக...''

''இப்ப நீ மேல் நாட்டிலே இருக்கிறுப் போலே எண்ணமோ!''

தன்மீது தவறு என்று காண்பித்துக் கொள்ளக் கூடாது என்ற எண்ணத்துடன் கந்தசாமி ஒப்புக்குச் சமாதானம் கூறினனேயொழிய உள்ளூற அவனது தவறு அவனை உறுத்திக் கொண்டுதான் இருந்தது. ஒருகால் இவனும் முனியம்மாளும் சேர்ந்து முத்தம்மாளிடம் குட்டை உடைத்து விட்டிருப்பார்களோ, என்னவோ!

''ஆமாம்! அப்புறம் என்ன ஆச்சு! முனியம்மாளிடம் பேச்சுக் குடுத்தாயா? நான் உன்னைப்பற்றி அவளிடம் பலமாகச் சிபார்சு செய்திருக்கேனப்பா!''

முருகேசன் சிரித்துக் கொண்டே கூறினன்: ''சொல்லிச்சு! அதைச் சொன்ன பிறகுதான் எனக்கு உன்மேலே வந்த ஆத்திரம் தணிஞ்சுது!''

''அப்புறம் என்ன பண்ணினீங்க!''

''என்ன பண்ணுவாங்க, நேராகக் கொண்டுபோய் உங்க வீட்டிலே...''

''அட, அதைக் கேட்கவில்லையப்பா! எங்க அக்கா ஏதாச்சும் கேட்டிருப்பாங்களே! அதைச் சொல்லு!''

''பயப்படாதே, கந்தசாமி! அதெல்லாம் சரிப்படுத்தி விட்டேன். 'கந்தசாமியை வழியில் பார்த்தேன். அவசரமா ஒரு கேஸ் விஷயமாகப் போயிருக்கிறுன். முனியம்மாளை அழைச்சுக்கிட்டுப் போய் வீட்டிலே விட்டு விடு என்று என்னிடம் கேட்டுக் கொண்டான்!' என்று ஒரு போடு போட்டு வைச்சேன்!''

''சபாஷ்! நீ பலே சாமர்த்தியக்காரன், முருகேசா! நீ செய்த உதவியை மறக்கவே மாட்டேன். அந்த முனியம்மாளைக் கல்யாணம் பண்ணிக்கிட்டு நீ மகராசனுக இருக்கணும். இன்னும் இரண்டு நாளில் ஊருக்குப் போகிறேன். அப்போ மாமாவிடம் நானே உன்னைப் பற்றிச் சொல்லுகிறேன்!'' என்று அவனை வாயார வாழ்த்தி விடை பெற்றுக் கொண்டான் கந்தசாமி.

## இருபத்திரண்டாம் அத்தியாயம்

# சிங்காரக் கன்னி சேர்வாள்

**ப**னம்பழப்பட்டில் ஓரிரண்டு தினங்கள் வரை தங்கி மாமன் தருமலிங்கத்திடம் பேச்சுக் கொடுத்து முனியம்மா பிரச்னைக்கு ஒரு முடிவு காண வேண்டும். அதன் பிறகு இந்தத் தங்கவேலுப் பயலை எப்படியாவது தேடிக் கண்டு பிடிக்க முயற்சி செய்ய வேண்டும். இவ் விஷயத்தில் ராமசாமி அண்ணனும், முருகேசனும் தனக்கு உதவி செய்யக் கூடும். அநேகமாக அவன் இந்தச் சென்னைப் பட்டணத்திலேயேதான் எங்கேயாவது சுற்றிக் கொண்டிருப்பான். கடவுள் அருளால் கண்ணம்மாளின் பணம் மட்டும் திரும்பக் கிடைத்து விட்டதென்றல் சிங்காரியை அவன் தனக்குக் கொடுக்கத் துளிக்கூட ஆட்சேபணை சொல்ல மாட்டாள். இப்போதே அவளுக்குத் தன்னிடம் அளவற்ற மதிப்பு ஏற்பட்டு விட்டது......

நேராக முத்துப்பிள்ளையின் வீட்டுக்குச் சென்றுன். அவன் போன சமயத்தில் வீட்டு வராந்தாவில் புலவர், கண்ணம்மாள், சிங்காரி ஆகிய மூவருமே நின்று கொண்டிருந்தனர். குருவி சோதிடக்காரர் ஒருவர் ஒரு அட்டையைப் பார்த்து ஏதோ படித்து ஆருடம் சொல்லிக் கொண்டிருந்தார்.

அவனைக் கண்டதும் கண்ணம்மாள், ''ஒதுங்குங்க! போலீஸ் கந்தசாமி வருது!'' என்று அவனை வரவேற்றுள்.

"வாங்க, வாங்க சரியான நேரத்துக்கு வந்தீங்க, இப்பத்தான் களவு போனதைப் பற்றி ஜோஸ்யம் கேட்டுக் கிட்டிருக்கிறோம். இழந்து போன பொருள் கூடிய சீக்கிரம் கிடைச்சுடும் என்கிறார் ஜோஸியர். அதுவும் ஒரு நண்பரின் உதவியால்தான் கிடைக்கும் என்று ஆருடம் சொல்லுது" என்றாள்.

நெற்றியில் பட்டை பட்டையான விபூதியுடனும் அகலமான குங்குமப் பொட்டுடனும் காட்சியளித்த அந்த வயோதிக சோதிடக்காரர், கந்தசாமியைப் பார்த்ததும் மரியாதையாக எழுந்து நின்று சலாம் போட்டார்.

அவரது குருவிக் கூண்டில் பச்சையும் மஞ்சளுமாக அவன் அதுவரையில் பார்த்திராத அபூர்வ ஜாதிக் குருவிகள் இரண்டு இருந்தன.

"இது என்ன ஜோஸ்யமுங்க?" என்று கேட்டான் கந்தசாமி.

"பச்சோந்தி முனிவர் பஞ்சபட்சி சாஸ்திரமப்பா! புலிப்பாணி ஜோஸியம், கைரேகை சாஸ்திரம் எல்லாம் கூடத் தெரியும். எதோ உன் கையை நீட்டு. பார்க்கலாம்!" என்றார்.

கந்தசாமி கையை நீட்டினான். ஜோஸ்யர் அதைத் திருப்பித் திருப்பிப் பார்த்தார். "இது ஆளப் பிறந்த கை! மக்களை அடக்கப் பொறந்த கை!" என்றார்.

"நல்லாப் பார்த்துச் சொல்லுங்க, கஷ்ட காலம் எப்போ தொலைந்து போகும் என்று!"

ஜோஸ்யர் ஒரு பலகையை எடுத்துக் கோடுகள் கிழித்து ஒருவருக்கும் புரியாத லிபியில் என்னென்னவோ எழுதினார்.

"உனக்கு இப்போது கொஞ்சம் போதாத காலம்!"

"ஆமா! காரியம் எதுவும்......"

"ஆமாம் ...... எதுவும் திருப்தியாக நிறைவேறுது! மனத்திலே கூடக் கவலை இருக்கணுமே!"

"கொஞ்சமா நஞ்சமா? எவ்வளவோ கவலைங்க!"

"இரு இரு!...ஏதாவது குறை......"

"நல்லாச் சொன்னீங்க! பெரிய குறை ஒண்ணு இருக்குதுங்க!" என்று கூறிக் கொண்டே சிங்காரி இருந்த பக்கம் திரும்பினான்.

"அப்படியானால் இரு. அதுக்குப் பட்சி சாஸ்திரத்திலேதான் பதில் கிடைக்கும் என்று குருவிக் கூண்டைத் திறந்தார். அதிலிருந்து பச்சைக் குருவி தத்தித் தத்திக் கொண்டு வெளியே வந்து, எதிரே வரிசையாக வைக்கப்பட்டிருந்த அட்டைகளில் ஒன்றை அலகினால் கொத்தி இழுத்தது. ஜோஸ்யக்காரர் அந்த அட்டையைக் கையில் எடுத்தார். அதில் ஏதோ சோதிடப் புத்தகத்திலிருந்து ஒரு பக்கம் ஒட்டப்பட்டிருந்தது.

"சபாஷ்! எண்பத்தி எட்டாம் நம்பர் பாடம் வந்திருக்குது. படிக்கிறேன் சரியாக இருக்குதா பார்த்துக் கொள்ளுங்கோ!

"எண்பத்து எட்டென்ப தீரெட்டாகும்,
எண்ணமெலாம் ஈடேறும் இனிதாகத்தான்,
கண்பத்தும் கரமெட்டும் கொண்டானந்தக்
காளியவள் கருணையினால் கவலைநீங்கும்
வெண்கொற்றக் குடையுடையவேந்தர் தம்மின்
வெகுமானம் பெற்றிடுவாய் வெற்றிகிட்டும்,
கண்பெற்ற மனிதரெலாம் கண்டே மெச்சக்
களிப்புண்டாம் சிங்காரக் கன்னி சேர்வாள்!"

கந்தசாமி ஒரு துள்ளுத் துள்ளினான். "என்ன என்ன!..."

"உனக்குப் பெரிய அதிர்ஷ்டம் வரப் போகுது. அரசாங்க வெகுமானம் கிடைக்கும். அழகானமனைவிவருவாள்!"

"கடைசி வரியிலே என்னவோ சொன்னீங்களே, அதை ஒரு தடவை திரும்பச் சொல்லுங்களேன்!"

"களிப்புண்டாம். சிங்காரக் கன்னி சேர்வாள்!" என்றார் ஜோஸ்யர்.

சிங்காரி லஜ்ஜையுடன் கதவு இடுக்கில் ஒளிந்து கொண்டாள். கந்தசாமி கண்ணம்மாளின் முகத்தை உற்றுப் பார்த்தான்.

"ஹூம்! அப்படித்தான் போட்டிருக்குதோ என்னவோ!...முதலிலே ஜோஸ்யக்காரரு சொன்னமாதிரி என் பணம் கிடைச்சுப் போச்சுன்னு உடனே இதையும் அவர் வாக்குப்பிரகாரமே நடத்திவிடலாம்!" என்றாள் அவள்.

கந்தசாமி முழுசாக ஒரு ரூபாயை ஜோஸ்யக்காரர் கையில் மகிழ்ச்சியோடு கொடுத்து அனுப்பினான்.

சோதிடர் போன பிறகு கண்ணம்மாள் கந்தசாமியிடம் இன்ஸ்பெக்டர் வந்து விசாரித்ததைப் பற்றியும் அவருக்குத் தாங்கள் கூறிய விவரங்களையும் விஸ்தரித்துக் கூறினாள். கந்தசாமி கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்து விட்டு, "அதெல்லாம் நான் இன்ஸ்பெக்டரின் 'ரிகார்டை'ப் பார்த்து முன்னமேயே தெரிந்து கொண்டேன். நீங்க ஒண்ணுக்கும் கவலைப்பட வேண்டாம். இந்த விஷயமாக எனக்கு ஒரு முக்கியமான தடையம் கிடைத்திருக்குது. அது சம்பந்தமாக நாளைக்கோ, மறுநாளோ நான் வெளியூருக்குப் போவேன். மறுபடியும் வருவதற்கு நாலு நாட்கள் ஆகும். யாரிடமும் சொல்ல வேண்டாம்" என்று ஆறுதல் கூறிவிட்டு அங்கிருந்து புறப்பட்டான்.

(தொடரும்)

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam

TIC 54 a

**1938** கல்யாணமானவுடன் தனராஜ், தனது புதிய ஹெர்குலிஸ் சைக்கிளுக்கு தன் மைத்துனன் இவ்வளவு பலமாக போட்டியிடுவான் என்று சிறிதும் எதிர்பார்க்கவில்லை.

**இன்று** அந்த சைக்கிளை தனது மாப்பிள்ளை எடுத்து உபயோகிப்பதை அவரால் தடுக்க முடியவில்லை ; ஹெர்குலிஸ் அனைவருக்கும் மிக உபயோகமாகவிருப்பதே இதன் ரகசியம்.

**ஹெர்குலிஸ்** ஓர் சைக்கிள் மட்டும் அல்ல,

வாழ்நாள் முழுதும் உழைக்கும் ஓர் நற்துணை



சுமார் 50 வருஷங்களாக உயர்தர சைக்கிள்களைத் தயாரித்துவரும் அனுபவ மிகுந்தவர்களால் இப்பொழுது. இந்த நுட்பவேலைப்பாடமைந்த ஹெர்குலிஸ் சைக்கிள் டி. ஐ. சைக்கிள்ஸாரின் நவீன தொழிற்சாலையில் தயாரிக்கப்படுகிறது. அதன் உயர்தர அமைப்பையும், அதிகப் பிரயாசையில்லாமல் ஓடும் தன்மையையும் கண்டு நீங்கள் ஆச்சரியமடைவீர்கள். சைக்கிள்களில் மிகச்சிறந்தது ஹெர்குலிஸ். ஆயினும் மிதமான விலையில் கிடைக்கிறது.

உங்கள் சைக்கிள் ஒரு சிறந்த மூலதனம். **ஹெர்குலிஸ்** உங்கள் பணத்திற்கு சிறந்த பெறுமானம்.

இந்தியாவில் தயாரிப்பவர்கள் :

**டி. ஐ. சைக்கிள்ஸ் ஆப் இந்தியா லிமிடெட், மதராஸ்**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

